# அறிவுக்கு விருந்து

பேராசிரியர் :
ந. சுப்பு ரெட்டியார் எம். ஏ., பி. எஸ்சி., எல். டி. பிஎச்-டி
*தமிழ்த்துறைத் தலைவர்,*
திருவேங்கடவன் பல்கலைக் கழகம், திருப்பதி.

விற்பனையுரிமை :
*திருநெல்வேலித் தென்னிந்திய*
*சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,*
1/140, பிராட்வே, சென்னை-1

செப்டம்பர்—1962


## ஆசிரியரின் இதர நூல்கள்

ஆசிரியம் :

தமிழ் பயிற்றும் முறை
அறிவியல் பயிற்றும் முறை
கல்வி உளவியல்

இலக்கியம் :

கவிஞன் உள்ளம்
கலிங்கத்துப் பரணி ஆராய்ச்சி
காலமும் கவிஞர்களும்
காதல் ஓவியங்கள்

திறனாய்வு :

கவிதையனுபவம்
தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை (அச்சில்)

அறிவியல்:

மானிட உடல்
அணுவின் ஆக்கம்
இளைஞர் வானொலி
உட்கரு பௌதிகம் (அச்சில்)
அதிசய மின்னணு (அச்சில்)
மணமக்களுக்கு (அச்சில்)
நமது உடல் (அச்சில்)

விலை :
3—50

அச்சிட்டோர் : சௌத் இந்தியா பிரஸ், காரைக்குடி.

# படையல்

பக்குவமெய்ஞ் ஞானியென உலகம் போற்றும்
பாரதியைக் கண்டுமகிழ் பேறு பெற்றேன்;
மிக்கநறுங் கலைத்தமிழ்நூல் ஒன்று கூடி
வெண்ணீறு புனைந்ததென விளங்கும் சான்றோன்;
தக்கதிரு வாசகத்தை மூன்று போதும்
தலைதாழ்த்திப் பணிந்திடுவோன்; எங்கள் ராய
**சொக்கலிங்கன்** எனும்பெயர்கொள் தமிழ்க் கடற்குச்
சொல்விருந்தாம் இச்சிறுநூல் உரிமை யாகும்.

# நூல்முகம்

வேண்டத் தக்க தறிவோய்நீ
வேண்ட முழுதுந் தருவோய்நீ
வேண்டும் அயன்மாற் கரியோய்நீ
வேண்டி யென்னைப் பணிகொண்டாய்
வேண்டி நீயா தருள்செய்தாய்
யானும் அதுவே வேண்டினல்லால்
வேண்டும் பரிசொன் றுண்டென்னில்
அதுவும் உன்றன் விருப்பன்றே.[1]

—மாணிக்கவாசகர்.

உள்வியலார் மனத்தினைப் பல நிலைகளாகப் பிரித்து ஆய்ந்து பல உண்மைகளை வெளியிட்டுள்ளனர். ஒரு வகையில் அவர்கள் *அறிதல்நிலை,*[2] *உணர்தல்நிலை,*[3] *இயற்றிநிலை*[4] என்று மனத்தை முந்நிலைகளாகப் பகுத்துப் பேசுவர். தனியொரு மனிதனுடைய ஆளுமை[5] சிறந்த முறையில் வளர்ச்சியும் துலக்கமும்[6] அடைய வேண்டுமாயின் இம்மூன்று நிலைகளிலும் அம்மனிதன் பயிற்சி பெறுதல் வேண்டும். இத்தகைய பயிற்சியினைக் கல்வி நிலையங்கள் நல்குகின்றன. பாடத் திட்டங்களும் பயிற்றும் முறைகளும், நிலைய நடவடிக்கைகளும் அதற்கேற்ப அமைக்கப் பெறுகின்றன.

---

1. திருவாசகம்—குழைத்த பத்து-6. 2. அறிதல் நிலை — Cognition. 3. உணர்தல் நிலை - Affection. 4. இயற்றி நிலை - Conation. 5. Personality. 6. துலக்கம்—Development.

'*அறிவுக்கு விருந்து*' என்ற இச் சிறுநூல் ஓரளவு மனப் பயிற்சி வளர்ச்சிக்குத் துணை செய்யும் நோக்கத்துடன் தொகுக்கப் பெறுகின்றது. இது கல்லூரி மாணக்கர்கட்கும் ஏனைய இளைஞர்கட்கும் நன்முறையில் பயனளிக்கும் என்பது என் கருத்து. இதிலடங்கியுள்ள ஒன்பது கட்டுரைகளில் பெரும்பான்மையானவை பல சமயங்களில் குமரிமலர் (கட்டுரைகள்— 6, 7, 8, 9) தமிழ்நாடு (கட்டுரை—3), தினமணி (கட்டுரை—5) மணிமொழி (கட்டுரை-2) போன்ற இதழ்களில் வெளிவந்தவை. ஏனையவை(கட்டுரைகள்-1,4)இந்நூலுக்கென எழுதப்பெற்றவை.

தமிழ்க்கடல் ராய. சொக்கலிங்கனார் அவர்களைத் தமிழ் கூறு நல்லுகம் நன்கு அறியும். தமிழ் இலக்கியத்தின் ஆழத்தையும் அகலத்தையும்கண்ட மேதை. எவருடனும் இன்முகத்துடனும் எளிமையுடனும் பழகும் பண்புடையாளர். நவில்தொறும் நூல் நயத்தைக் காண்பது போல அவருடன்-பழகுந்தொறும் அவருடைய பண்புடைமையைக் காணலாம். யான் 1950-இல் காரைக்குடிக்கு வந்த நாளிலிருந்தே இவரது தமிழ்ப் புலமை என்னை யீர்த்து அடிமையாக்கிக் கொண்டது. காரைக்குடி இந்து மதாபிமான சங்கத்தில் சனிக்கிழமைதோறும் இவர்கள் அளித்த தமிழ் விருந்தை செவியாரக் கேட்டு உளமார அனுபவித்த யான் இந்நூல் விருந்தை அவர்கட்குப் படைக்கின்றேன். மணிவிழாக் கண்டு தமிழ்க்கடலாகவும் சிவமணியாகவும் திகழும் இவர்களது ஆசியால் இந்நூல் பல தமிழ் இளைஞர்களின் உள்ளங்கட்கும் விருந்தாக அமையும் என்பது என் திடமான நம்பிக்கை.

இந்நூலை வெளியிடுவதற்கு இசைவு தந்த திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தினருக்கு—சிறப்பாக அதனைத் தொடங்கிய நாள்தொட்டு மிக்க ஈடுபாட்டுடன் கண்காணித்து வரும் அதன் துணைவேந்தர்

திரு. எஸ். கோவிந்தராஜுலு நாயுடு அவர்கட்கு—என் உளங்கனிந்த நன்றி என்றும் உரியது.

இந்நூலை அழகுற அச்சிட்டுக் கற்போர்கரங்களில் கவினுடன் தவழச் செய்த காரைக்குடி சௌத் இந்தியா பிரஸ் உரிமையாளர்கட்கு என் மனமுவந்த நன்றி.

என்னையும் ஒரு கருவியாகக் கொண்டு இச்சிறு நூலை வெளியிடத் தோன்றாத் துணையாக நின்று இயக்கிய எல்லாம் வல்ல இறையருளை நினைந்து போற்றுகின்றேன்; அவன் திருவடிமலர்களை எண்ணி வாழ்த்துகின்றேன்; வணங்குகின்றேன்.

காரைக்குடி,
15 - 9 - 62.

ந. சுப்பு ரெட்டியார்.

# உள்ளுறை

பக்கம்

# 1. தெய்வப் பரணி

செஞ்சொற் கவியின்பம்பயக்கவல்ல இலக்கியங்கள் எல்லா மொழிகளிலும், எல்லா நாடுகளிலும் எண்ணற்றவை உள்ளன. எப்பெயர்களால் வழங்கினாலும் நம் தமிழ் மொழியில் உள்ள ஒன்பது சுவைகள் அவ்விலக்கியங்களில் மலிந்துகிடந்தோ விரவிக்கிடந்தோ அவற்றைச் சிறப்பித்துப் படிப்போரை இன்பக்கடலில் திளைக்கச்செய்கின்றன காப்பியங்களும், பிரபந்தங்களும், தனிப்பாடல்களும் இச் சுவைகளைக் கொண்டு இலங்குவதை இலக்கியச் சோலைகளில் புகுந்து பார்ப்போர் நன்கு அறிவர். பல்சுவைகள் ததும்பும் பிரபந்தங்களில் கலிங்கத்துப்பரணியும் ஒன்று; சுவைநலங் கனிந்த ஓர் அற்புதச் சிறுபிரபந்தம்; 'பரணிக்கோர் சயங்கொண்டான்' என்று புலவர்களால் சிறப்பித்துப் பாராட்டப் பெறும் சயங்கொண்டார் என்ற புலவர் பெருமானால் பாடப்பெற்ற நூல்.

கி. பி. மூன்றும் நூற்றுண்டிலிருந்து தமிழ்நாடு களப்பிரர் என்ற வேற்று மொழியார் ஆட்சியிலிருந்து கிட்டத்தட்ட மூன்றரை நூற்றுண்டுகள் பல்வேறு சீர்கேடுகளை அடைந்தது. இவர்கள் ஆண்ட காலத்தை வரலாற்று ஆசிரியர்கள் 'இருண்ட காலம்' என்று குறிப்

பிடுவர். இக்காலத்தில் தமிழ்மொழி தனித்தலைமையை இழந்து தளர்ச்சியுற்று இலக்கிய வளர்ச்சிபெருது மங்கிக்கிடந்தது. பிறகு நாட்டில் ஏற்பட்ட பல்லவர், பாண்டியர்கள் ஆட்சியிலும், சோழர்களின் ஆட்சியிலும் தமிழ்மொழி ஏற்றம்பெற்றது. புலவர்கள் புத்துணர்ச்சி பெற்றுப் புதுப்புதுப் பிரபந்தங்களை இயற்றினர். பக்திப் பாடல்களும் பெருங் காப்பியங்களும் தோன்றத் தொடங்கின. காவியங்கள் கல்வியாளர்க்கென்றே இயற்றப்பெற்றன; பக்தி இயக்கத்தின் விளைவாக எழுந்த பாடல்கள் பொதுமக்கள் மனத்தைக் கௌவும் நிலையில் அமைந்தன. வெற்றித் திறத்தால் நாட்டுப் பரப்பைப் பெருக்கிய அரசர்களையும் கொடையாலும் பிறவற்ருலும் புகழ் எய்திய வள்ளல்கள், வேளிர்கள் போன்றவர்களை யும் புலவர்கள் கவிதைகளில் அமைத்துப் போற்றினர். கலம்பகம், பரணிபோன்ற பிரபந்தங்கள் அவ் வகையைச் சார்ந்தவை. எனவே, அவர்கள் எளிதில் பொருள் உணரக்கூடிய ஒரு சீரிய நேர்மை அவற்றில் வாய்த்திருந் தது. கற்று வல்லோரும் புலவர்களும் நிரம்பிய அரசவை யில் அவர்கள் அனைவரும் வியந்து போற்றும் முறையில் அப் பிரபந்தங்கள் பாடப்பெற்றன. கலிங்கத்துப் பரணி அங்ஙனம் பாடப்பெற்ற நூல்களுள் ஒன்று.

பிரபந்தங்கள் தொண்ணூற்ருறு என்று சொல்லு வது ஒருவகை மரபு. பிரபந்த இலக்கணம் கூறும் பன்னிரு பாட்டியல், வெண்பாப் பாட்டியல், நவநீதப் பாட்டியல், சிதம்பரப் பாட்டியல், இலக்கணவிளக்கப் பாட்டியல் ஆகிய நூல்களில் ஒன்றிலாயினும் பிரபந் தங்கள் தொண்ணூற்ருறு என்ற வரையறை காட்டப் பெறவில்லை! அவற்றிற்கு இலக்கணமும் கூறப்பெற வில்லை. அவற்றில் கூறப்பெறும் இலக்கணங்களிலும் மாறுபட்ட கருத்துக்கள் மிளிர்கின்றன. தொண்ணூற்

ரூறு என்று வரையறைக்குள் அடங்காத நொண்டி நாடகம், கப்பற்பாட்டு, வில்லுப்பாட்டு, கும்மிப்பாட்டு, கோலாட்டப்பாட்டு, ஆனந்தக்களிப்பு, கிளிக்கண்ணி, விலாசம்,புலம்பல், உந்திபறத்தல், சாழல்,தெள்ளேணம், வள்ளைப்பாட்டு, கவசம், ஓடப்பாட்டு, காதல், ஏற்றப் பாட்டு முதலான பல பிரபந்தங்களையும் காண்கின்றோம்.

போர்முகத்தில் ஆயிரம் யானைகளைக்கொன்று வெற்றி கொண்ட வீரரைப் புகழ்ந்து பாடுவதைப்'பரணி' என்று வழங்குவர்.

ஆனை யாயிரம் அமரிடை வென்ற
மானவ னுக்கு வகுப்பது பரணி [1]

என்பது இலக்கண விளக்கப் பாட்டியல் நூற்பா. பெரும் போர் புரிந்து வெற்றி பெற்ற வீரனைச் சிறப்பித்துப்பாடு வதையும் பரணிஎன்று வழங்கும மரபுஉண்டு என்பதைப் பன்னிருபாட்டியல் என்ற நூலினுல் அறிகின்ருேம். இவ் வாறு பரணி நூல் அரசர் முதலியவர்கள்மேல் செய்யப் படுவதன்றி தெய்வங்கள் மீதும் தத்தம் ஆசிரியர்கள் மீதும் அறிஞர்களால் இயற்றப் பெற்று வழங்கும். கலிங்கத்துப் பரணி, தக்கயாகப் பரணி, இரணியவதைப் பரணி, கஞ்சவதைப் பரணி, அஞ்ஞவதைப் பரணி, மோக வதைப் பரணி, பாசவதைப் பரணி என்பன அவற்றிற்கு எடுத்துக்காட்டுக்களாகும். நூல்பாடுவோர் கொச்சகக்கலி என்னும் பாட்டின் உறுப்பாகிய ஈரடிக் கழித்தாழிசை என்ற உறுப்பை மேற்கொள்வது வழக்கம். பொதுவாக நூலில் கடவுள் வாழ்த்து, கடைதிறப்பு, காடு, காளி கோவில் முதலிய பல்வகைச் சிறப்புக்களும் பல்வேறு சுவைகள் கொப்புளிக்கும்படி அமைக்கப்பெறும்.

1 இலக்கண விள-நூற்-79.

[ 2 ]

'கலிங்கத்துப் பரணி' என்னும் நூல் அக்காலத்துப் பேரரசனாகத் திகழ்ந்த முதற் குலோத்துங்கன் தன் படைத்தலைவனான கருணாகரத் தொண்டைமான் என்பவனைக்கொண்டு கலிங்கநாட்டின்மீது போர் தொடுத்து வென்ற செய்தியைக் கூறுவது. இந்நூலின் ஆசிரியராகிய சயங்கொண்டார் என்ற கவியரசரும் பாட்டுடைத்தலைவனான குலோத்துங்கன் என்ற புவியரசனும் ஒரு காலத்தில் வாழ்ந்தவர்கள் என்பது அறியத்தக்கது. குலோத்துங்கன் சோழ நாட்டை ஆண்டுவந்தபொழுது ஒரு நாள் பாலாற்றங்கரைக்குப் பரியின்மீது இவர்ந்து வேட்டையாகச் செல்லுகின்றான். வேட்டை முடிந்ததும் காஞ்சியிலுள்ள மாளிகை யொன்றில் செய்தமைத்த சித்திர மண்டபத்தில் முத்துப் பந்தரின்கீழ்த் தேவியர், அமைச்சர், தானைத்தலைவர் முதலியோர் புடைசூழ வீற்றிருக்கும்பொழுது சிற்றரசர் பலர் வந்து அவனைத் திறைப்பொருள்களுடன் காண்கின்றனர். கலிங்க நாட்டரசன் அனந்த பன்மன்மட்டிலும் அவனை வந்து காணவில்லை. அதைக் கண்ட குலோத்துங்கன் தன் தானைத்தலைவனான கருணாகரத் தொண்டைமானைத் தண்டெடுத்துச் சென்று கலிங்க அரசனின் செருக்கை அடக்கி வருமாறு ஏவுகின்றனன். சோழர் படை தன் நாட்டை வந்து சூழ்ந்தமையைக் கேட்ட கலிங்க வேந்தன் 'வெந்தறுகண் வெகுளியினால் வெய்துயிர்த்துக் கைபுடைத்து வியர்த்து நோக்கி',

வண்டினுக்கும் திசையானை மதங்கொடுக்கும்
மலர்க்கவிகை அபயற் கன்றித்

தண்டினுக்கும் எளியனோ எனவெகுண்டு
தடம்புயங்கள் குலுங்க நக்கே.

[கவிகை-வெண்கொற்றக்கொட; தண்டு-சேனை]

கானாறும் மலையாறும் கடலாறும்
சூழ்கிடந்த கலிங்கர் பூமி
தானரணா முடைத்தென்று கருதாது
வருவதுமத் தண்டு போலும்.[2]

[கான்-காடு; அரணம்-அரண்]

என்று கூறிப் போர் தொடங்குகின்றான்; போர் கடுமையாக நடைபெறுகின்றது; இறுதியில் கலிங்கவேந்தன் தோற்றோடுகின்றான். கருணாகரன் கலிங்கத்தை எரிகொளுவி அழித்துப் பல்வகைச் செல்வங்களைக் கவர்ந்து வாகைமாலை சூடிக் குலோத்துங்கன் அடியை வணங்கி நிற்கின்றான். இந்த வரலாற்று நிகழ்ச்சியைக் கருவாகக்கொண்டு தனது கற்பனைத் திறத்தால் நூற்பொருளை அமைத்துக் காவியத்தைப் படைக்கின்றார் ஆசிரியர். நூல் கவிஞரின் கற்பனையிலிருந்து மலர்ந்த ஓர் ஈடற்ற சிறு காப்பியம். காவியத்தில் இரு வேறு உலகங்களைப் படைத்துக் காட்டுகின்றார். ஒன்று, மக்கள் உலகம்; மற்றொன்று, பேய்கள் உலகம். பதின்மூன்று அத்தியாயங்களைக்கொண்ட அந்நூலில் கடவுள்வாழ்த்து போக நான்கு அத்தியாயங்கள் மக்கள் உலகினைப் பற்றியவை. ஐந்து அத்தியாயங்கள் பேய்கள் உலகினைக் காட்டுபவை; மூன்று அத்தியாயங்கள் பேய்களின் தலைவியாகிய காளிதேவி, அவள் வாழும் சூழ்நிலை, அவளது கோவில் ஆகிய செய்திகளைப்பற்றியவை.

[ 3 ]

இனி, நூலின் அமைப்பை ஒரு சிறிது காண்போம். நூலைத் தொடங்குமுன் பாட்டுடைத் தலைவனாகிய குலோத்துங்கன் நேடிதுநின்று வாழுமாறு சிவபெரு

2 தாழி—376, 377

மான், திருமால் நான்முகன், ஞாயிறு, யானைமுகன், ஆறுமுகன், நாமகள், உமை, அன்னையர் எழுவர் ஆகியவர்களை வணங்கிப் பராவுகின்றார் ஆசிரியர். எடுத்துக்காட்டுகளாக

பூமாதுஞ் சயமாதும் பொலிந்து வாழும்
புயத்திருப்ப மிகவுயரத் திருப்பள் என்று
நாமாதும் கலைமாதும் என்னச் சென்னி
நாவகத்துள் இருப்பாளை நவிலு வாமே.

எண்மடங்கு புகழ்மடந்தை நல்லன் எங்கோன்
யானவன்பால் இருப்பதுநன் றென்பாள் போல
மண்மடந்தை தன்சீர்த்தி வெள்ளை சாத்தி
மகிழ்ந்தபிரான் வளவர்பிரான் வாழ்க என்றே[3]

[பூமாது - மண்மகள்; சயமாது - வெற்றிமகள்; சென்னி- குலோத்துங்கன்; சீர்த்தி-மிகுபுகழ்]

என்ற நாமகள் வணக்கத் தாழிசைகளைக் காண்க. முதல் தாழிசையில் நாமகள் பெருமையும், இரண்டாவது தாழிசையில் அபயனின் புகழ் மேம்பாடும் குறிக்கப் பெற்றிருப்பதைப் பன்முறைப் பாட்டுக்களை இசை யூட்டிப் படித்துமகிழ்க. இப்பகுதியிலுள்ள கடவுளர் பாடல்கள் அனைத்தும் இங்ஙனமே படித்து இன்புறத் தக்கவை யாகும்.

இதனை அடுத்துக் 'கடை திறப்பு' என்ற பகுதி வருகின்றது. கலிங்கப் போர் மேற் சென்ற வீரர் மீண்டு வரக் காலம் தாழ்த்தியதாகவும் அதுகண்ட அவர் களுடைய காதல்மகளிர் ஊடல் கொண்டு கதவடைத்துக் கொண்டதாகவும் கொண்டு புலவர் தாம் பாடப்போகும் அக் கலிங்கப் போர்ச் சிறப்பைக் கேட்டு மகிழ்தற்

3. தாழி—13, 14.

பொருட்டுக் கதவைத் திறக்குமாறு வேண்டுவதாக இப் பகுதி அமைக்கப் பெற்றுள்ளது. இப் பகுதியிலுள்ள பாடல்கள் யாவும் உவகைச் (சிருங்காரச்) சுவையுடையவை.

சொருகு கொந்தளகம் ஒருகை மேலலைய
ஒருகை கீழலைசெய் துகிலொடே
திருவ னந்தலினும் முகம லர்ந்துவரு
தெரிவை மீர்கடைகள் திறமினோ[4]

[கொந்து-பூங்கொத்து; அளகம்-கூந்தல்; துகில்-உடை; அனந்தல்-துயிலெழுந்த மயக்கநிலை; தெரிவை-பெண்]

மெய்யில ணைத்துருகிப் பையஅ கன்றவர்தாம்
மீள்வரெ னக்கருதிக் கூடல்வி ளைத்தறவே
கையில ணைத்தமணல் கண்பனி சோர்புனலிற்
கரையவி ழுந்தழுவீர் கடைதிற மின்திறமின்.[5]

[மெய்-உடல்; பைய-மெல்ல; கூடல் விளைத்தல்-மணலில் சுழித்துக் குறியறிதல்; அறவே - சுழியாமல் நீங்கிநிற்க; புனல்-நீர்]

என்ற தாழிசைகளில் காதல்சுவை கனிந்து நிற்பதைக் காண்க.

அடுத்துப் பேய்களின் தலைவியாகிய காளிதேவியின் சிறப்பும், பேய்களின் இயல்பு முதலிய செய்திகளும் கூறப் பெறுகின்றன. காளிதேவி வாழும் காட்டின் இயல்பு, அதன் நடுவேயுள்ள அவளுடைய திருக்கோவில் அமைப்பு முறை, அவள் வீற்றிருக்கும் சிறப்பு, அவளைச் சூழ்ந்திருக்கும் பேய்களின் தன்மை முதலியவற்றை ஆசிரியர் வருணிப்பது நம்மை வியப்புச் சுவையில்

4. தாழி—47 5. தாழி—51

ஆழ்த்துகின்றது. இச்செய்திகள் 'காடு பாடியது', 'கோயில் பாடியது', 'தேவியைப் பாடியது', 'பேய்களைப் பாடியது' என்ற அத்தியாயங்களில் கூறப்பெறுகின்றன. காளிதேவியும் பேய்களும் வாழும் காடு பாலைநிலம் ஆகும். அக் காட்டின் வெம்மையைத் தாங்கமாட்டாமல் கருமுகிலும் வெண்மதியும் ஓடுகையில் அவற்றின் உடலில் தோன்றிய வேர்வையே, பனிநீராகப் பெய்கின்றது.

காடு தனைக் கடத்துமெனக் கருமுகிலும்
  வெண்மதியும் கடக்க அப்பால்
ஓடு இளைத் துடல்வியர்த்த வியர்வன்றே
  உகுபுனலும் பனியும் ஐயோ. [6]

[கடத்தும்-கடப்போம்; முகில்-மேகம்: மதி-நிலா; புனல்-மழை நீர்]

என்ற தாழிசையால் இதனை அறியலாம். இந்நிலத்தின் வெம்மைக்குப் பயந்துதான் தேவர்களும் நிலத்தில் கால் வைத்து நடப்பதில்லை. அவர்கள் விண்முகட்டிலிருந்து கொண்டே கார்மேகங்களாகிய திரைச்சீலையிட்டுச் சந்திரனாகிய ஆலவட்டத்தால் விசிறிக்கொள்ளுகின்றனர். அந்த வெம்மை நிலத்திலிருந்து வீசும் காற்று தம்மிடம் வாராதிருக்கும் பொருட்டே கடல்கள் ஓயாது தம் அலைகளைச்செலுத்திக்கொண்டிருக்கின்றன. திக்குயானைகளும் விடாது தம் காதுகளை அடித்துக்கொண்டிருப்பதும் அதற்காகத்தான். இத்தகைய கற்பனைகளால் காட்டின் இயல்பினைக் கூறுகின்றார் கவிஞர்.

இத்தகைய காட்டில்தான் காளிதேவியின் கோவில் அமைந்திருக்கின்றது. குலோத்துங்கன் வென்று

6 தாழி—86.

கொன்ற தேவிமார்களின் அணிகளிலுள்ள இரத்தினங்கள் கோவிலுக்கு அடித்தளமாக அமைந்திருக்கின்றன. சேனுவீரர்களின் கொழுப்பாகிய சேற்றை அவர்களின் உதிரமாகிய நீரால் குழைத்து அவர்களின் தலைகளைக் கொண்டு சுவர் எழுப்பப்பெற்றுள்ளது. மாற்றரசர்களின் காவற்காடுகளிலுள்ள மரங்கள்தாம் தூண்களாகவும் உத்திரங்களாகவும் அமைந்துள்ளன. யானையின் கொம்புகள் அரிச்சந்திரக் கால்களாகவும், அவற்றின் விலாஎலும்புகள் கைமரங்களாகவும், பகைவேந்தர்களின் கொடிகள் மேல்முகட்டின் கூடல்வாய்களாகவும் பயன் படுத்தப் பெற்றுள்ளன. யானைகளின் முகபடாங்கள் கூரையாக அமைக்கப்பெற்றுள்ளன. மதிற்சுவர்களும் கோபுரமும் எலும்புகளால் அமைந்துள்ளன. கோவிலுக்கு முன்னுல் இரண்டு இருப்புத்தூண்கள் நடப்பெற்று அவற்றின்மீது ஓர்இரும்பை வளைத்து மகரதோரணமாக அமைக்கப்பெற்றுள்ளது. மயில்களின் தலைகள், மலர்ந்த முகத்துடனுள்ள வீரர்களின் தலைகள், நிணத்தாலாகிய கொடிகள், பால் மணம் மாருத பச்சிளங் குழவிகளின் தலைகள் ஆகியவை கோவிலின் எல்லா இடங்களிலும் தொங்க விடப்பெற்றுள்ளன.

இத்தகைய கோயிலில் வீற்றிருக்கும் காளியின் உருவம் பயங்கரமாகச் சித்திரிக்கப்பெறுகின்றது. ஒவ்வொரு உறுப்புக்களையும் வருணித்தபின் அவளது பேருருவச் சிறப்பினை,

**அண்டமுறு குலகிரிகள்**
**அவளொருகால் இருகாதில்**
**கொண்டணியின் குதம்பையுமாம்**
**கோத்தணியின் மணிவடமாம்.**

[அண்டம்-உலகம்; கிரி-மலை; குதம்பை; காதோலை; வடம்-மாலை]

கைம்மலர்மேல் அம்மனையாம்
கந்துகமாம் கழங்குமாம்
அம்மலைகள் அவள்வேண்டின்
ஆகாத தொன்றுண்டோ? [7]

[அம்மனை-ஒருவகை விளையாட்டுக் கருவி; கந்துகம்-பந்து; கழங்கு-கழற்சிக்காய்]

என்ற தாழிசைகளால் கூறுகின்றார் கவிஞர்.

உலகிலுள்ள மலைகளைக் காதணிகளாகவும் அணிவாளாம்; அவள் விரும்பினால் அவற்றைக் கோத்து இரத்தினமாலையாகவும் சூடுவாளாம். அம்மலைகள் அவளுடைய கையில் அம்மனையாகவும் அமையும்; பந்துக்களாவும் ஆகக் கூடும்; கழங்குகளாகவும் கொள்ளப்பெறும்.

காளிதேவியை வழிபடுவோர் அவள் திருக்கோயிலைப் பெருக்கி, பசுங்குருதி நீரைத் தெளித்து, கொழுப்பாகிய மலர்களைத் தூவி, பிணங்களைச் சுடும் சுடலையிலுள்ள ஈம விளக்குகளை எங்கும் ஏற்றி வைப்பர். அவளை வழிபடுவோரின் ஒலி கடலொலிபோல் எங்கும் முழங்கும். வீரரின் வழிபாட்டினைக் கவிஞர்,

சலியாத தனியாண்மைத் தறுகண் வீரர்
தருகவரம் வரத்தினுக்குத் தக்க தாகப்
பலியாக உறுப்பரிந்து தருதும் என்று
பரவும்ஒலி கடல் ஒலிபோல் பரக்குமாலோ. [8]

[தறுகண்-அஞ்சாமை; பரவுதல்-துதித்தல்; பரக்கும்-பரவும்.]

---

7 தாழி—132, 133. 8 தாழி—109

என்று கூறுகின்றனர். அஞ்சாத நெஞ்சினையுடைய வீரர்கள் தேவியை வரங்களை வேண்டி அவற்றிற்கு ஈடாகத் தங்கள் உறுப்புக்களை அரிந்து தருவதாகக் கூறுகின்றனர். பலவித வாத்திய ஒலிகளை ஒலிக்கும் வீரர்கள் தங்கள் விலா எலும்புகளைச் சமித்தாகவும், குருதியை நெய்யாகவும் கொண்டு 'ஓமத்தீ' வளர்த்து வேள்விபுரிவர். சில வீரர்கள் தங்கள் சிரங்களை அரிந்து தேவியின் கையில் கொடுப்பர்; அத் தலைகள் தேவியைப் பரவும்; தலைகுறைந்த உடலங்கள் கும்பிட்டு நிற்கும். இச்செய்திகளைக் கவிஞர்,

சொல்லரிய ஓமத்தீ வளர்ப்ப ராலோ
தொழுதிருந்து பழுவெலும்பு தொடர வாங்கி
வல்லெரியின் மிசைஎரிய விடுவ ராலோ
வழிகுருதி நெய்யாக வளர்ப்ப ராலோ.

[பழுஎலும்பு-விலா எலும்பு; வாங்கி-பிடுங்கி]

அடிக்கழுத்தின் நெடுஞ்சிரத்தை அரிவ ராலோ
அரிந்தசிரம் அணங்கின்கைக் கொடுப்ப ராலோ
கொடுத்தசிரம் கொற்றவையைப் பரவு மாலோ
குறையுடலம் கும்பிட்டு நிற்கு மாலோ[9]

[அணங்கு-காளி; கொற்றவை-காளி]

என்ற தாழிசைகளால் கூறுகின்றார். கோயில்களைச் சூழ்ந்துள்ள மூங்கில்களில் தொங்கும் தலைகளின் பாரத்தால் அவை வளைந்து இரத்தப் பெருக்கில் மூழ்கி இருக்கும். அவை இறந்து பட்ட வீரர்களின் உடல்களைக் கவர்வதற்குக் காலன் போட்ட தூண்டில்களைப் போலத் தோன்றும்.

9. தாழி—110, 111

அரிந்ததலை யுடன் அமர்ந்தே ஆடுகழை
அலைகுருதிப் புனலின் மூழ்கி
இருந்தவுடல் கொளக்காலன் இடுகின்ற
நெடுந்தூண்டில் என்னத் தோன்றும்[10]

[கழை-மூங்கில்; காலன்-இயமன்]

என்று கவிஞர் இக்காட்சியைக் காட்டுகின்றார்; காளி தேவியின் கோயில்தான் மக்கள் உலகமும் பேய்கள் உலகம் சந்திக்கும் இடமாகும். ஆயின், கவிஞர் அந்த இரு உலகங்களும் சந்தித்து நெருங்கிய தொடர்பு கொள்ளுமாறு செய்யவில்லை.

ஒருநாள் காளிதேவி பேய்கள் சூழக் கொலுவீற்றிருக்கும் பொழுது சுரகுரு என்ற சோழன் காலத்தில் காளிதேவியின் சீற்றத்துக்கு அஞ்சி இமயமலையில் ஓடியொளித்த ஒருமுது பேய் முதற் குலோத்துங்கன் காலத்தில் தேவியின் முன்வந்து கண்டோர் வியப்பெய்துமாறு தான் இமயத்தில் கற்றுவந்த இந்திரசால வித்தைகளைக் காட்டுகின்றது. படிப்போரை மருட்கைச் சுவையில் ஆழ்த்தும் 'இந்திரசாலம்' என்ற இப் பகுதியிலுள்ள பல தாழிசைகள் பன்முறைப் படித்து மகிழ்வதற் குரியவை.

இந்த நூலில் குலோத்துங்கன் கலிங்கவேந்தனை வென்று அந்நாட்டினை அழிந்த வரலாற்று நிகழ்ச்சியைத் தன் கற்பனைத் திறத்தால் நூற்பொருளாக அமைத்த முறை இக்காலச் சிறுகதை, புதின ஆசிரியர்கட்கும் ஒரு கலை விருந்தாக உள்ளது. கவிஞர் நாரதர் என்ற இதிகாச முனிவரைக் கொண்டு வந்து நிறுத்துகின்றார். கரிகாலன் வடதிசை சென்று இமயத்தில் புலி பொறித்த

10. தாழி—118

காலையில் ஆண்டு நாரதமுனிவர் வந்ததாகவும், அங்ஙனம் வந்தவர் கரிகாலனைக் கண்டு அவனிடம் சோழர் குடிவழியைத் தொடக்கம் முதல் கூறியதாகவும், அந்த வரலாற்றைக் கரிகாலன் இமயத்தில் பொறித்ததாகவும், அந்த வரலாற்றையே தான் கூறுவதாகவும் உரைத்து, சோழர் வரலாற்றை முதுபேய் காளிக்குக் கூறுகின்றது.

செண்டு கொண்டுகரி காலனொரு காலின் இமயச்
சிமய மால்வரைதி ரித்தருளி மீள அதனைப்
பண்டு நின்றபடி நிற்கஇது வென்று முதுகில்
பாய்பு லிக்குறிபொ றித்(து)அதும றித்தபொழுதே,

[செண்டு-ஒரு போர்க்கருவி; சிமயம்-குவடு; பொறித்து எழுதி; மறித்த-முன்போல் நிலைநிறுத்திய]

கால மும்மையுமு ணர்ந்தருளு நார தனெனும்
கடவுள் வேதமுனி வந்துகடல் சூழ்பு வியில்நின்
போலு மன்னருள ரல்லர்என வாசி புகலாப்
புகல்வ தொன்றுளது கேளரச என்று புகல்வான்.

[புகலா-புகன்று]

பண்டு பாரதமெ னுங்கதைப ராச ரன்மகன்
பகர வெங்கரிமு கன்பருமரு ப்பை யொருகைக்
கொண்டு மேருகிக ரத்தொருபு றத்தி லெழுதிக்
குவல யம்பெறுத வப்பயனு ரைப்ப வரிதால்.

[பராசரன்மகன்-வியாதன்; குவலயம்-உலகத்தார்]

பார தத்தினுள வாகியப வித்ர கதையெம்
பரம னற்சரிதை மெய்ப்பழைய நான்ம றைகளே
நேரதற்(கு) இதனை நான்மொழிய நீயெழுதி; முன்
நெடிய குன்றின்மிசை யேயிசைவ தான கதைகேள்:

[பவித்ரம்-தூயது; பரமன்-கண்ணன்; நேர்-ஒப்பு.]

---

11. தாழி—178-181

என்ற தாழிசைகளால் இதனை அறியலாம். கரிகாலனுக்குப் பின்னர் முதற்குலோத்துங்கன்வரை வரும் சோழர் பரம்பரையும் கூறப்பெறுகின்றது. அவ் வரலாற்றில் திருமாலே முதற்குலோத்துங்கனாக வந்து பிறப்பான் என்ற செய்தி காணப்பெறுகின்றது.

கமல யோனிமுத லாகவரும் உங்கள் மரபில்
காவலன் மன்னவர்க ளாகிவரு கின்ற முறையால்
அமல வேதமிது காணும்இதி லார ணநிலத்(து)
அமல னேயபய னாகஅறி கென்ற ருளியே.

[கமலயோனி-பிரமன்; அமலம்-தூயது; ஆரணம்-மறை; அமலன்-திருமால்; அபயன்-குலோத்துங்கன்]

அரணி வேள்வியில கப்படும கண்ட வுருவாய்
அரவ ணைத்துயிலு மாதிமுத லாக அபயன்
தரணி காவலனு வுஞ்செலமொ ழிந்து முனிவன்
தானெ ழுந்தருள மாமுனிமொ ழிந்த படியே,[12]

[அரணி - தீக்கடைக்கோல்; அகண்டம் - கூறுபடுத்த முடியாதது; ஆதி-திருமால்; தரணி-உலகம்; எழுந்தருள-போய்விட]

என்ற தாழிசைகளால் இதனை அறியலாம். இச்செய்திகளை *'இராச பாரம்பரியம்'* என்ற பகுதியில் காணலாம். இவ்வரலாற்றை முதுபேயின் வாயில் வைத்துக் கூறும் முறை பெரிதும் பாராட்டத்தக்கது.

இங்ஙனம் முதுபேய் கூறியவற்றைக் கேட்டுக் காளி மகிழ்ந்திருக்கையில் தேவியைச் சூழ்ந்திருந்த பேய்கள் யாவும் தம் பசிக்கொடுமையைக் கூறி அதனைப் போக்குமாறு வேண்டுகின்றன.

---

12. தாழி—184, 185

சாவத்தால் பெறுதுமோ சதுமுகன்றன்
கீழ்நாங்கள் மேனாள் செய்த
பாவத்தால் எம்வயிற்றில் பசியைவைத்தான்
பாவியேம் பசிக்கொன் றில்லேம்.[13]

[சாவம்-பெரியோர் சாபம்; சதுமுகன்-நான்முகன்]

என்று பேய்கள் தம் பசிநிலையைத் தெரிவிக்கின்றன. ஒருசில நன்னிமித்தங்களால் தமக்கு அண்மையில் உணவுகிடைக்கும்என்று நம்பியேதாம்உயிர்வாழ்ந்திருப்பதாகவும்கூறுகின்றன. அப்பொழுது இமயத்தினின்றும் போந்த முதுபேய் தான் கலிங்க நாட்டின் வழியாக வருங்கால்ஆங்குக் கண்ட சில தீநிமித்தங்களைக்கூறுகின்றது. அவற்றைக் கேட்ட காளிதேவி கணிதப் பேய் நனவிலும் கனவிலும் கண்டதைக் கூறி விரைவில் ஒரு பரணிப்போர் நடைபெறப் போவதாக உரைக்கின்றாள். பேய்கள் மகிழ்ச்சியால் குதித்துக் கூத்தாடுகின்றன. இச் செய்திகளைப் '*பேய் முறைப்பாடு*' என்ற பகுதியால் அறியலாம். அதன்பின்னர் காளிதேவி குலோத்துங்கன் பெருமை முதலியவற்றையும் அவன் பாலாற்றங்கரைக்குப் பரிமீது வேட்டையாடச் சென்று கச்சியடைந்தமையையும் கூறிக்கொண்டிருக்கையில் ஒரு பேய் ஓடோடிக் காளியை வந்தடைந்து கலிங்கப் போரினைத் தான் கண்டதாக மொழிகின்றது. அதன் பின்னர், கலிங்கப் போரைக்கூறுமாறு காளிதேவிஉரைக்கின்றாள் இவற்றை '*அவதாரம்*' என்ற பகுதியில் காணலாம்.

காளி தேவியின் வேண்டுகோட் கிணங்கிய கலிங்கப் பேய்,

13. தாழி—216

மாவா யிரமும் படக்கலிங்கர்
மடிந்த களப்போர் உரைப்போர்க்கு
நாவா யிரமுங் கேட்போர்க்கு
நாளா யிரமும் வேண்டுமால்.[14]

[மா - யானை]

என்று தொடங்கிப் போரின் காரணத்தையும் போர் நடந்த வரலாற்றையும் விவரமாக எடுத்துரைக்கின்றது. இங்ஙனம் குலோத்துங்கன் குடிவழி போன்ற செய்திகளை முதுபேயின் வாயில் வைத்து மொழிந்ததைப் போலவே கலிங்கப்போர் மூண்ட காரணத்தையும் போரின் வருணனைகளையும் கலிங்கப் பேயின் வாயில்வைத்துக் கூறுகின்றார் கவிஞர். இச் செய்திகள் யாவற்றையும் 'காளிக்குக் கூளி கூறியது', 'போர் பாடியது' என்றபகுதிகளில்பரக்கக் காணலாம்.

இங்ஙனம் கலிங்கத்தில் போர் நிகழ்ந்த வரலாற்றைக் காளிக்குக் கூறிய கலிங்கப் பேய்,

தேவாசுரம் ராமாயணம் மாபாரதம் உளவென்(று)
ஓவா உரை ஓயும்படி உளதப்பொரு களமே.

[தேவாசுரம் - சூரபதுமன் போர்; ஓவா - ஒளியாத; உரை - சொல்]

காலக்கண மதுகண்டருள் இறைவிகடி தெனவே
ஆலக்கள முடையான்மகிழ் அமுதக்களம் அணுகி.[15]

[காலன் - இயமன்; கடிது - விரைவில்; ஆலக்களம் உடையான் - சிவன்; மகிழ்அமுது - காளி.]

என வேண்ட, காளிதேவியும் பேய்கள் சூழப் போர்க்களத்திற்குச் சென்றுப் போர்க்களக் காட்சிகள் ஒவ்வொன்றையும் பேய்கட்குக் காட்டுகின்றாள். கற்பனை நயம் செறிந்துள்ள ஒரு சில காட்சிகளை ஈண்டுக் காட்டுவோம்.

14. தாழி—312  15. தாழி—472, 473

**உடலின்மேல் பலகாயஞ் சொரிந்து பின்கால்**
**உடன் பதைப்ப உதிரத்தே ஒழுகும் யானை**
**கடலின்மேல் கலந்தொடரப் பின்னே செல்லும்**
**கலம்போன்று தோன்றுவன காண்மின் காண்மின்.[16]**

[காயம்-புண்; சொரிந்து-குருதியினைச் சொரிந்து; பின்-உடலின் பிற்பகுதி; உதிரம்-குருதி; ஒழுகுதல்-மிதந்து செல்லல்; கலம்-மரக்கலம்]

என்பது குருதி வெள்ளத்தில் யானை மிதந்து சென்ற காட்சி. யானை குருதி வெள்ளத்தில் மிதந்து செல்வது கடலில் மிதந்து செல்லும் மரக் கலத்தை யொத்திருக்கின்றது.

**விருந்தினரும் வறியவரும் நெருங்கி யுண்ண**
**மேன்மேலும் முகமலரும் மேலோர் போலப்**
**பருந்தினமும் கழுகினமும் தாமே யுண்ணப்**
**பதுமமுகம் மலர்ந்தாரைப் பார்மின் பார்மின்.[17]**

[வறியவர்-ஏழையர்; மேலோர்-இல்லறத் துயர்ந்தோர்; பதுமம்-தாமரை]

என்பது வீரர்கள் முகமலர்ச்சியுடன் இறந்து கிடக்கும் காட்சி. செல்விருந்தோம்பி வருவிருந்து பார்த்திருக்கும் இல்லறத்தோர்போல் தாம் இறந்த பின்னரும் தம் உடலங்களைப் பருந்துக்களும் கழுகுகளும் உண்பதைக் கண்டு முகமலர்ச்சியுடன் கிடக்கின்றனர் வீரர்கள்.

**மாமழைபோல் பொழிகின்ற தான வாரி**
**மறுத்துவிழுங் கடகளிற்றை வெறுத்து வானோர்**

16. தாழி-475. 17. தாழி-477

**பூமழைமேல் பாய்ந்தெழுந்து நிரந்த வண்டு**
**பொருட்பெண்டிர் போன்றமையும் காண்மின் காண்மின்.**[18]

[தானம்-மதநீர்; வாரி-பெருக்கு; மறுத்து-ஒழித்து; வானோர்-தேவர்; பூமழை-கருணாகரன் வெற்றிகண்டு பொழிந்த பூமழை; நிரந்த-பரவிய; பொருட்பெண்டிர்-விலைமாதர்]

யானையின் மதநீரின்மேல் மொய்த்திருந்த வண்டுகள் யானை இறந்துபட்டவுடன் பூமாரிமேல் மொய்க்கின்றன. கவிஞர் இந்த வண்டுகளை விலைமாதர்களுடன் ஒப்பிட்டுள்ளமையை அறிந்து மகிழ்க.

போர்க்களத்தில் கடகளிறு ஒன்று இறந்து கிடக்கின்றது. அதன்மீது அரசருடைய கொடிகள் இரத்தத்தில் தோய்ந்து படிந்து கிடக்கின்றன. இதனைக் கவிஞர்,

**சாய்ந்துவிழும் கடகளிற்றி னுடனே சாய்ந்து**
**தடங்குருதி மிசைப்படியும் கொடிகள் தங்கள்**

**காந்தருடன் கனலமளி யதன்மேல் வைகுங்**
**கற்புடைமா தரையொத்தல் காண்மின் காண்மின்.**[19]

[கடம்-மதம்; குருதி-செந்நீர்; மிசை-மேலே; காந்தர்-கணவர்; கனல்-தீ; அமளி-படுக்கை]

கொடிகள் யானையின்மீது படிந்து கிடக்கின்ற நிலையைக் கற்புடைமகளிர் தம் கணவருடன் ஈமப் படுக்கையில் படுத்து உயிர்விடும் நிலையுடன் ஒப்பிட்டுள்ளார் கவிஞர்.

மற்றோரிடத்தில் குற்றுயிராகப் படுத்துக் கிடந்த கணவனைத் தழுவி அவன் ஆருயிர்த்துணைவி உயிர்விடுகின்றாள். இந் நிலையைக் காளிதேவி பேய்கட்குக் காட்டுகின்றாள். இதனைக் கவிஞர்,

18. தாழி-479 19. தாழி-480

தரைமகள்தன் கொழுநன்றன் உடலந் தன்னைத்
தாங்காமல் தன்னுடலால் தாங்கி விண்ணாட்(டு)
அரமகளிர் அவ்வுயிரைப் புணரா முன்னம்
ஆவிஒக்க விடுவாளைக் காண்மின் காண்மின்.[20]

[தரைமகள்-மண்மகள்; உடலால்தாங்கி-அணைத்து; அரமகள்-தெய்வப்பெண்; ஆவி-உயிர்; ஒக்க-ஒருசேர]

என்று காட்டுகின்றார். தன்னுடைய கணவன் மண்மீது கிடப்பதால் அவ்வுடலை மண் மகள் தழுவுவதையும், அவனுடைய உயிர்பிரிந்து சென்றால் அதனை விண்ணாட்டு தேவமகளிர் புணரக்கூடும் என்பதையும் நினைந்து கற்புடைமகளிர் தம் கணவன் உடலைத் தன்மடி மீது கிடத்தியும், அவன் உயிர் பிரியும்போது தாமும் ஒருங்கே உயிர் நீப்பதை உணர்த்தியும் தமிழ் நாட்டு மகளிரின் உயிரினும் சிறந்த செயிர்தீர்க் கற்பினைக் கவிஞர் காட்டும் திறம் எண்ணி எண்ணி மகிழ்வதற்கு உரியது.

வாயினுள் மாற்றார் விட்டவேல்கள் பாய்ந்த நிலையில் அவற்றினைத் தம் வலக்கையினால் பற்றிக் கொண்டு சில வீரர்கள் போர்க்களத்தில் வீழ்ந்து கிடக்கின்றனர். இக் காட்சி ஊது கொம்பு ஊதுவோரின் காட்சியைப் போன்றுள்ளது என்று கூறுகின்றார் கவிஞர்.

வாயி னில்புகு வேல்கள் பற்று
வலக்கை யொடுநி லத்திடைச்
சாயு மற்றவர் காளம் ஊதிகள்
தம்மை ஒத்தமை காண்மினே.[21]

[வாய்—தம்வாய்; காளம்—ஊது கொம்பு.]

20. தாழி—483 21. தாழி—498

என்ற தாழிசையினால் இதனை அறியலாகும். மற்றோரி டத்தில் தம் நெஞ்சில் பாய்ந்துள்ள பகைவர் விட்ட வேல்களைப்பறித்து அவற்றினை நிலத்தில் ஊன்றிக் கம்புத்தாண்டல் (pole vault) விளையாடுவோர்போல பகைவர்களின் தேர்த்தட்டில் பாய்ந்து நிற்கின்றனர். இந் நிலையைப் படகு வலிப்போரின் காட்சியுடன் ஒப்பிடு கின்றார் கவிஞர்.

படவூன்று நெடுங்குந்தம் மார்பி னின்று
பறித்(து)அதனை நிலத்தூன்றித் தேர்மேல் நிற்பார்
படவூன்றி விடுந்தொழிலோர் என்ன முன்னம்
பசுங்குருதி நீர்த்தோன்றும் பரிசு காண்மின்.[22]

[பட-அழுந்த; குந்தம்-வேல்; பறித்து-பிடுங்கி; படவு-படகு]

என்ற தாழிசையில் செந்நீரில் கிடக்கும் தேர் நீரில் மிதந்து செல்லும் படகினையும், வேல்கள் படகினை வலிக்கும் கோல்களையும், வீரர்கள் படகு வலிப்போரையும் ஒத்திருப்பதைக்கண்டு மகிழ்க. இத்தகைய பல காட்சி களைக் *"களம்பாடியது"* என்ற பகுதியில் காணலாம்.

இங்ஙனம் பல காட்சிகளைக்கண்டு மகிழ்ந்தபிறகு காளிதேவி நீராடிக் கூழ் சமைத்து உண்ணுமாறு பேய்களைப் பணிக்கின்றாள். அங்ஙனமே, பேய்கள் பல் துலக்கி நீராடிக் கூழ் அட்டு உண்கின்றன. இங்கும் பல கற்பனை நயம் செறிந்த தாழிசைகளால் நிகழ்ச்சி களைச் சுவைபடக் காட்டுகின்றார் கவிஞர். உண்டபேய்கள் வள்ளைப் பாட்டுக்களால் குலோத்துங்கன் புகழ்பாடி வாழ்த்துகின்றன.

22. தாழி—499

யாவ ரும்களி சிறக்கவே தருமம்
எங்கும் என்றும்உள தாகவே
தேவர் இன்னருள் தழைக்கவே முனிவர்
செய்த வப்பயன் விளைக்கவே.

[களி-மகிழ்ச்சி; அருள்-கருணை]

வேத நன்னெறி பரக்கவே அபயன்
வென்ற வெங்கலி கரக்கவே
பூத லம்புகழ் பரக்கவே புவி
நிலைக்க வேபுயல் சுரக்கவே.[23]

[பரக்க-பரவுக; கலி-துன்பம்; கரக்க-மறைக; நிலைக்க-நிலைபெறுக]

என்ற வாழ்த்துடன் நூல் முற்றுப்பெறுகின்றது.

[4]

முதன் முதலாகத் தாழிசையால் பாடப்பெற்ற இந்நூல் பரணி நூல்கட்கெல்லாம் தலைசிறந்த தாய், பரணி பாடுவோர்க்கெல்லாம் முன்மாதிரியாய், இலக்கியவானில் ஒரு கலங்கரை விளக்கம்போல் நின்று நிலவுகின்றது. இத்தகைய நூலின் சிறப்பை ஒரு சிறிது காண்போம்.

'கலிங்கத்துப்பரணி' கற்போர்க்கு ஒரு கற்பனை ஊற்ருக அமைந்துள்ளது. பல வரலாற்று நிகழ்ச்சிகள் கவிஞரின் கற்பனையால் இலக்கிய நயம் செறிந்து சிந்தைக்கு விருந்தாக அமைகின்றன நிகழ்ச்சிகள் நடைபெற்ற பல நூற்றுண்டுகட்குப் பின்னருள்ள நம்முடைய புலன்கள் அக்காட்சிகளை நேரில் கண்டு அனுபவியாத நிலையிலும் கவிஞருடைய கற்பனையால் நாம் அந்நிகழ்ச்சிகளை நேரில் காண்பதுபோன்ற அனு

23. தாழி—595, 596

பவத்தைப் பெறுகின்றோம். கவிஞருடைய கற்பனை யாற்றல் அவருடைய அனுபவத்தை நம்மையும் பெறச் செய்கின்றது. இயல்பாக நிகழும் நிகழ்ச்சிகளை வரலாற்று நிகழ்ச்சிகளுடன் பொருத்திக் கூறுங்கால் காவியத்தில் தென்படும் சில கற்பனைக் கொடுமுடிகளைக் காட்டுவோம்.

பேய்களின் இயல்புகளைக் கூறுங்கால் நொண்டிப் பேய், முடப்பேய், குருட்டுப்பேய், ஊமைப்பேய் செவிட்டுப்பேய், குறட்பேய், கூன் பேய் ஆகிய பேய்கட்கு உறுப்புக்குறை நேர்ந்ததற்குக் கூறும் காரணங்கள் நம்மையும் அக் கற்பனையின் கொடுமுடிக்குக் கொண்டுசெலுத்துகின்றன. குலோத்துங்கன் யானை மீது இவர்ந்து போர்செய்யுங்கால் பல அரசர்கள் இறந்துபடுகின்றனர். அந்த அரசர்களின் தலைகளி லிருந்து சொரியும் மூளைச் சேற்றில் வழுக்கி விழுந்ததால் முழங்காற்சில்பெயர்ந்துபலபேய்கள் முடப்பேய்களாயின.

ஆளைச் சிறுக ளிற்றப யன்பொருஉம்
அக்க ளத்தில்அ ரசர்சி ரஞ்சொரி
மூளைச் சேற்றில்வ ழுக்கிவி ழுந்திட
மொழிபெ யர்ந்தொரு கான்முட மானவும்.[24]

[ஆள்-ஆண்மைவீரர்; களிறு-யானை; சிரம்-தலை; மொழி-முழங்காற் சில்]

என்ற தாழிசையால் இதனை அறியலாம். குலோத்துங்கன் போர்புரிந்தகாலத்தில் போர்க்களத்தில் பேய்கள் கூழடுங்கால் வெண் பல்லரிசியை யானைத்தந்த உலக்கை யால் குற்றும்போது சில பேய்கட்கு அவ்வுலக்கைபட்டு வலக்கைகள் முடமாகப் போய்விட்டன.

24. தாழி—145

அந்த நாளக்க ளத்தடு கூழினுக்கு
ஆய்ந்த வெண்பல்ல ரிசியு ரற்புக
உந்து போதினிற் போதகக் கொம்பெனும்
உலக்கை பட்டுவ லக்கை சொற் றனவும்.[25]

[களம்-போர்க்களம்; அடுதல்-சமைத்தல்; கூழ்-நிணக்கூழ்; உந்துதல் - குற்றுதல்; போதகக் கொம்பு-யானைக்கொம்பு; சொற்று-முடம்.]

என்ற தாழிசையில் இதனைக் காண்க. ஒரு சமயம் குலோத்துங்கன் சக்கரக் கோட்டத்தை அழித்து வெற்றி கொண்ட பொழுது போர்க்களத்தில் பேய்கள் கூழட்டு உண்டன. அப்பொழுது தாழியிலிருந்து கூழ் தெறித்து விழுந்ததால் சில பேய்களின் கண்கள் குருடாயின.

விருத ராசப யங்கரன் முன்னொர்நாள்
வென்ற சக்கரக் கோட்டத்தி டைக்கொழுங்
குருதி யுங்குட ருங்கலந்(து) அட்டவெங்
கூழ்தெ றித்தொரு கண்குரு டானவும்.[26]

[விருதராசபயங்கரன்-குலோத்துங்கன்]

என்று காட்டுகின்றார் கவிஞர். குலோத்துங்கன் இளமைப் பருவத்தில் போர்மேற் சென்ற பொழுது அவன் படைவீரர்களின் ஆர்ப்பொலியைப் பொறுக்க மாட்டாது சில பேய்களின் செவிப்பறைப் (ear drum) பிய்ந்துபோய்ச் செவிடாகி விட்டன. மற்றொரு சமயம் பாண்டியனுடன் மதுரையில் போர் செய்த பொழுது அப் போர்க்களத்தில் பேய்கள் கூழட்டு உண்ணுங்கால் அச் சுவையான கூழினைச் சூடாக உண்டதனால் சில பேய்களின் நாச்சுருண்டு ஊமைகளாயின. இங்ஙனமே குறட்பேய், கூன்பேய் முதலியவற்றிற்குக் கூறப்பெறுங் காரணங்கள் கற்பனை நயம் செறிந்துள்ளன.

25. தாழி—146 26 தாழி — 147.

சயங்கொண்டாரின் கற்பனை ஊற்றிலிருந்து எத்தனையோ அணிகள் தோன்றியுள்ளன. அவர்காட்டும் சொல்லோவியங்கள் பல்வேறு காட்சிகளையும் நம் மனக் கண்முன் அழகுபெறக் கொண்டு வந்து நிறுத்துகின்றன. சொல்லணிகளும், பொருளணிகளும் நூல் முழுவதும் மலிந்து காணப்படுகின்றன. தன்மை நவிற்சியணிகள் பொருள்களின் தன்மைகளை விளக்கமுற எடுத்தோதுகின்றன. மகளிர் நடந்து செல்லும் இயல்பு.

சுரிகுழல் அசைவுற அசைவுறத்
துயிலெழும் மயிலென மயிலெனப்
பரிபுர ஒலிஎழ ஒலிஎழப்
பனிமொழி யவர்கடை திறமினோ [27]

[சுரிதல்-நெளிதல்; குழல் - கூந்தல்; துயில்-தூக்கம்; பரிபுரம்-கிண்கிணி; பனிமொழி-குளிர்ந்த மொழி.]

என்ற தாழிசையில் குழல் அசைய, பரிபுரம் ஒலிக்க, மகளிர் மயிலெனவருவர் என்று காட்டப்பெற்றிருப்பதைக் கண்டு மகிழ்க. இங்ஙனமே, தற்குறிப்பேற்ற அணிகள் பொருள்களின் இயல்பைச் சிறப்பித்துக் காட்டுகின்றன. காளிதேவி உறையும் பாலைவனத்தின் வெம்மையைக் கூறுமிடத்தே பல தற்குறிப்பேற்ற அணிகளைக் காணலாம். கதிரவன் வெம்மையைத் தாங்கமுடியாமல் பூமியில் ஏராளமான வெடிப்புக்கள் காணப்பெறுகின்றன. அவற்றினுளெல்லாம் பகலவனின் கிரணங்கள் பாய்ந்து செல்லுகின்றன. இயல்பாக உள்ள இந் நிலையைக் கவிஞர்,

தீய அக்கொடிய கான கத்தரைதி
றந்த வாய்தொறு நுழைந்துதன்
சாயை புக்கவழி யாதெ னப்பரிதி
தன்க ரங்கொடுதி னைக்குமே. [28]

27. தாழி — 23   28. தாழி — 79.

[தரை திறந்த வாய்கள்-வெடிப்புக்கள்; சாயை-ஞாயிற்றின் மனைவி; பரிதி-ஞாயிறு; கரம்-கை; திளைத்தல் - தொழிலில் இடைவிடாது பயிலல்.]

என்று தன் கற்பனை நயம் தோன்றப் புலப்படுத்து கின்றார். வெடிப்புக்களில் கதிரவனின் கதிர்கள் பாய்ந்து செல்வது கதிரவன் தன் துணைவியாகிய சாயாதேவியின் பிரிவைப் பொறாமல் அவளைப் பல இடங்களிலும் தேடித் திரிவதாகக் கவிஞர் தான் கருதிய வேறொன்றினை ஏற்றிச் சொல்லும் திறம் எண்ணி எண்ணி மகிழ்வதற்குரியது. இங்ஙனமே, உயர்வு நவிற்சியணிகள் பொருள்களின் மேம்பாட்டைப் புலப்படுத்துகின்றன. சிலேடையணி களில் கூறப்பெறும் பொருள்கள் இருவேறு வகைப்பட்டு இன்பம் தோன்றத் துணைசெய்கின்றன. சில இடங்களில் காணப்பெறும் யமகம், திரிபு போன்ற சொல்லணிகளும் நூலினைச் சிறப்பிக்கின்றன. இவற்றினை விரிக்கிற் பெருகும்.

நூலில் நகை, அழுகை, இளிவரல், அச்சம், மருட்கை, பெருமிதம், வெகுளி, உவகைச் சுவைகள் ஆங்காங்கு அமைந்து நூலைச் சிறப்பிக்கின்றன. எடுத்துக்காட்டாக

பொருதடக்கை வாள்எங்கே மணிமார் பெங்கே
போர்முகத்தில் எவர்வரினும் புறங்கொ டாத
பருவயிரத் தோளெங்கே எங்கே என்று
பயிரவியைக் கேட்பாளைக் காண்மின் காண்மின். [29]

[மணி-அழகிய; வயிரம்-அழுத்தமானது; பயிரவி-யோகினி]

என்ற தாழிசையில் அழுகைச் சுவையைக் காண்க. போர்முடிந்தபின் திரும்பி வராத தன் கணவனைத் தேடிப் போர்க்களத்துக்குப் புறப்பட்டுச் சென்ற ஒரு நங்கை போர்க்களத்தை யடைந்து முகம், கை, கால்

29. தாழி—484

முதலியன வேறு வேறாக வெட்டுண்டு கிடந்த தன் கணவனைக் கண்டு வருந்திக் கூறிய நிலை இது. தலை மட்டும் அவளுக்குக் கிடைக்கின்றது; ஏனைய உறுப்புக்களை நரிகள் இழுத்துச் சென்றன போலும்! அவள் அவற்றை அடையாளம் காட்டுமாறு பயிரவி என்ற பெண் தெய்வத்தை வினவுகின்றாள். மேலும், பேய்கள் கூழ் அட்டு உண்ணும் பகுதியில் நகைச்சுவை விளைக்கும் நிகழ்ச்சிகள் பல வருகின்றன. ஒரு குருட்டுப் பேயின் உண்கலத்தை ஒரு திருட்டுப்பேய் ஒளித்து வைத்துக்கொள்ளுகின்றது; குருட்டுப்பேய் கையில் கூழ் ஏற்று அருந்துகின்றது. இந் நிகழ்ச்சி,

ஊண் ஆதரிக்கும் கள்ளப்பேய்
ஒளித்துக் கொண்ட கலம்தடவிக்
காணாது அரற்றும் குருட்டுப்பேய்
கைக்கே கூழை வாரீரே.[30]

[ஊண் - உணவு; ஆதரிக்கும் - ஆசைப்படும்; கலம்-பாத்திரம்; அரற்றல்-கதறியழல்]

என்ற தாழிசையில் சுட்டப்பெறுகின்றது. ஒரு பேய் ஓட்டைக் கலத்தில் கூழைப் பெற்று உண்கின்றது' கூழ் ஒழுகும் புழையைப் பார்க்கக் கலத்தைக் கவிழ்த்துப் பார்க்கின்றது! கூழெல்லாம் கொட்டிப் போகின்றது.

பொல்லா ஓட்டைக் கலத்துக் கூழ்
புறத்தே ஒழுக மறித்துப்பார்த்து
எல்லாங் கவிழ்த்துத் திகைத்திருக்கும்
இழுதைப் பேய்க்கு வாரீரே.[31]

[பொல்லா-கெட்ட; மறித்தல்-தலைகீழாகத் திருப்பல்; இழுதை-அறிவற்ற]

பேய்களிலும் குறைமதி யுள்ளவை இருக்கும் போலும்! இங்ஙனம் நூலில் ஒன்பது சுவைகளும் பல இடங்களில்

30. தாழி—569 31 தாழி—572

காட்டப் பெறுகின்றன. இடத்திற்கேற்றவாறு சந்தத்தை யமைக்கும் ஆசிரியரின் புலமைத் திறன் நூலின் சுவையைப் பன்மடங்கு உயர்த்திவிடுகின்றது. இங்ஙனம் பல்லாற்றானும் சிறப்புற்று மிளிரும் இதன் மேன்மையை உணர்ந்தே கவிச்சக்கரவர்த்தியாகிய ஒட்டக்கூத்தரும் தாம்பாடிய 'தக்கயாகப் பரணியில்' இதனைத் ''தென் தமிழ் தெய்வப் பரணி'' என்று சிறப்பித்துள்ளமை ஈண்டு அறிந்து மகிழத்தக்கது.

# 2. ஆடும் பெருமாள் *

பாடுவதையே பணியாகக்கொண்டு பகவான்மீது பக்தி செலுத்தியவர்களில் தமிழ்க் கவிஞர்கள் தலை சிறந்தவர்கள். 'முத்தமிழால் வைதாரையும் வாழவைப் போனாகிய' முருகப்பெருமானைக் கவிதை மலர்களால் வழிபாடு செய்த அருணகிரியார்கூட,

'பாடும் பணியே பணியா வருள்வாய்'

என்று ஆண்டவனிடம் முறையிட்டார் என்பதை நாம் படிக்கும்போது அவருக்குப் பாடல்களால் பக்தி செலுத்துவதில் எவ்வளவு ஆர்வம் இருந்திருக்க வேண்டும் என்பதை ஒருவாறு அறியமுடிகின்றது.

தமிழ்நாட்டிலே பக்திமணம் கமழச்செய்த பேரியோர் களில் நாயன்மார்களும் ஆழ்வார்களும் சிறந்து விளங்கு கின்றனர். சைவமும் வைணவமும் செழித்த காலத்தில் பக்திமணங் கமழும் கடவுட்பாடல்கள் தமிழ் இலக்கியச் செல்வத்தைப் பெருக்கின. தமிழரின் சமய வேட்கையால் தமிழ் இலக்கிய உலகம் பெற்ற பேறு இவ்வளவு

---

* குன்றக்குடி "மணிமொழி" சிறப்பிதழில் (10—7—1954) வெளிவந்தது.

அவ்வளவு என்று அளவிட்டுச் சொல்லமுடியாது. இவைகள் இயற்றப்பெருமல் இருந்திருந்தால் தமிழ் இலக்கியக் கருவூலம் எவ்வளவு குறைவுபட்டிருக்கும் என்பதை எண்ணிப்பார்த்தால் இவைகளின் ஒப்பற்ற பெருமை நன்கு விளங்கும்.

சைவ சமயக்குரவர்களாகிய அப்பர், ஞானசம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் போன்ருர் ஏராளமான பக்திப்பாடல்களைப் பாடியுள்ளனர். இவர்களைப்போலவே ஆழ்வார்களும் ஏராளமாகப் பாடியுள்ளனர். தமிழ்க் கவிதையில் உள்ளத்தை உருக்கக்கூடிய ஒரு தனிச் சிறப்பு ஆழ்வார் பாசுரங்களுக்கு உண்டு. தமிழ்நாட்டில் பக்திமார்க்கம் பரவுவதற்கு ஈடும் எடுப்பும் அற்ற இனிமைத் தமிழ் ஒரு சிறந்த கருவியாக இருந்து வந்திருக்கின்றது. மக்களைத் தன் இனிமையால் தன்பால் ஈர்க்கும் தன்னேரில்லாத் தமிழ் ஆண்டவனையும் ஈர்த்திருக்கின்றது. திருமால் அன்பர்களின் தமிழுக்கு வசமாகி அவர்கள் பின்சென்ற கதை தமிழர்களின் இதயத்தைக் கொள்ளைகொண்டிருக்கின்றது. முருகக் கடவுளின் அருள்பெற்றுப் பாடிய குமரகுருபர அடிகள்,

'பழமறைகள் முறையிடப்
பைந்தமிழ்ப் பின்சென்ற
பச்சைப் பசுங்கொண்டலே'

என்று பாடியுள்ளதை நாம் படிக்கும்போது இவ்வுண்மை நமக்கு நன்கு தெளிவாகின்றது.

தமிழர்கள் ஆண்டவனைப் பலவிதமாகத் தொழுதுப் பரவியிருக்கின்றனர். தங்கள் தங்கள் மனேபாவத் திற்குத் தக்கபடியெல்லாம் கவிதைகளால் பாடிப் போற்றியிருக்கின்றனர். தமிழின்பால் ஏக்கங்கொண்டு

சென்ற திருமால் திருவேங்கடத்தில் நின்றகோலத்தை யும், திருவரங்கத்தில் அறிதுயில்கொண்டுள்ள வண்ணத் தையும் பாடிப் பரவிய பக்தர்கள் அவர் ஊஞ்சலில் ஆடிய கோலத்தையும் பாடியிருக்கின்றனர்.

சாதாரணமாகத் திருமணக் காலத்தில் பெண்ணையும் மாப்பிள்ளையையும் பலவித கோலங்களில் கண்டு களிக்கும் பெற்றோர்கள் அவர்களை ஊஞ்சலில் ஏற்றியும் மகிழ்வதை இன்றும் நாம் காணலாம். நலங்கு முதலிய நிகழ்ச்சிகளையெல்லாம் ஏற்படுத்தி, மணமக்களைப் பலர் முன்பாகச் சிறு விளையாட்டுகள் விடுவதெல்லாம் பெற்றோர் தம் மக்கள்பால் வைத்திருக்கும் அன்பையே காட்டுகின்றது. இம்மாதிரியாக ஊஞ்சலில் உட்கார வைத்துக் கண்டுகளிக்கும் வழக்கத்தையுடைய மக்கள் ஆண்டவனையும் அவ்வாறு வைத்துக் கண்டுகளித்து வருகின்றனர். தமக்குப் பிரியமாகவுள்ளவையெல்லாம் ஆண்டவனுக்கும் பிரியமானவை யென்று கொண்டுள்ள படியால்தானே இன்று கோவிலில் பலவித அபிடேகங்கள், நைவேத்தியங்கள், ஆராதனைகள் முதலியவற்றைச் செய்துவருகின்றனர்?

பிற்காலத்தில் கவிஞர்கள் ஊசலை ஒரு தனிப் பிரபந்தமாகவும் செய்துள்ளனர். சில கவிஞர்கள் கலம் பகத்தில் இதை ஒரு உறுப்பாக வைத்து மிக அழகாகப் பாடியுள்ளனர். தாய்மார்கள் குழந்தையை ஊஞ்சலில் வைத்து ஆட்டி இன்பம் அடைவதைப்போல வும், பெற்றோர்கள் திருமணக்காலத்தில் மணமக்களை ஊஞ்சலில் உட்காரவைத்து இன்பம் பெறுவதைப் போலவும் கவிஞர்களும் பக்தர்களும் ஆண்டவனை ஊஞ்சலில் வைத்து பாடிப் பேரின்பத்தைப் பெற்றிருக் கின்றனர். இப் பாடல்களைப் படிக்கும் நாமும் பரவசப் படுகின்றோம்; பேரானந்தத்தை அடைகின்றோம்.

'ஆடீரூசல்', 'ஆடாமோ ஊசல்', 'ஆடுக ஊசல்' என ஏதாவதொன்ருல் முடிவு பெறுமாறு ஆசிரிய விருத்தத்தாலாவது கலித்தாழிசையாலாவது பாடப் படுவதை ஊசல் என்று இலக்கண ஆசிரியர்கள் கூறுவர். வச்சணந்திமாலை என்னும் பாட்டியல் நூல் இதனை,

'ஆங்கவிருத் தத்தால் அறைந்தகலித் தாழிசையால்
ஓங்கியசுற் றத்தளவாய் ஊசலாம்,'

என்று கூறுகின்றது. இலக்கண விளக்கம் என்னும் நூல்,

அகவல் விருத்தம் கலித்தா ழிசையால்
பொலிதரு கிளையொடும் புகலுவ தூசல்

என்று இதற்கு விளக்கம் தெரிவிக்கின்றது.

திருமால் ஆடிய ஊசலைக் கவிஞரொருவர் மிக அழகாக வருணித்திருக்கின்ருர்.

உயரவிட்ட கற்பகப்பூம் பந்தர் நீழல்
ஒண்பவளக் கால்நிறுவி ஊடுபோட்ட
வயிரவிட்டத்(து) ஆடகச்சங் கிலிகள் நாற்றி
மரகதத்தால் பலகைதைத்த ஊசல் மீதே

[உயரஇட்ட-உயரமாகச்சமைத்த; ஒண்பவளம்-ஒளியுள்ள பவளம்; ஊடுபோட்ட - இரண்டிற்கும் நடுவில் அமைத்த; ஆடகச் சங்கிலிகள்-பொன்னுலாகிய சங்கிலிகள்; நாற்றி-தொங்கவிட்டு]

பெருமாள் இருந்து ஆடுகிருர் என்று காட்டுகின்ருர்.

கவிஞர் காட்டும் ஊசல் மிக அழகானதொரு ஊசல். கற்பகச் சோலைபோன்று மிக உயரமானதொரு பூப்பந்தலின் நிழலில் பவளக் கால்கள் நிறுத்தப்பெற்று அவற்றின் நடுவில் வயிரத்தாலான விட்டம் போடப்

பட்டிருக்கின்றது. அவ் விட்டத்தில் பொற்சங்கிலிகளை மாட்டி அச் சங்கிலிகளில் பச்சைக் கல்லால் செய்யப்பட்ட ஊசல் பலகை தொங்கவிடப்பட்டிருக்கின்றது. அத்தகைய ஊஞ்சலில் உட்கார்ந்துகொண்டு பெருமாள் ஊஞ்சல் ஆடுகின்றார்.

ஊஞ்சலின்மேல் அமைக்கப்பெற்றிருக்கும் விமானம் நீலப்பட்டால் வேயப்பட்டு அதில் முத்துக்கள் பதிக்கப் பெற்றிருக்கின்றன. அது விண்மீன்கள் ஒளிக்கும் நீலவானம்போல் காட்சியளிக்கின்றது. பெருமாளுக்கு மேல் விளங்கும் வெண்கொற்றக்குடையோ ஆகாயத்தில் தோன்றும் முழு மதியம்போல் காட்சியளிக்கின்றது. அவருக்கு இரண்டு பக்கத்திலுமிருந்து வீசப்படும் வெண்சாமரங்கள் சந்திரனுடைய கிரணங்கள்போல் காணப்படுகின்றன.

அந்தணர்களும், அரசர்களும், தேவர்களும் அவர்கள் துணைவியரும், தேவேந்திரனும், பிரம தேவனும், பரமசிவனும் பெருமாளைச் சேவிப்பதற்காகச் சமயம் பார்த்துக்கொண்டு காத்திருக்கின்றனர். தக்க சமயம் வந்ததும், பெருமாளைக்கண்டு வணங்குகின்றனர். வந்திருந்தவர்கள் பெருமாளின் ஊஞ்சலைப் பிடித்து ஆட்டுகின்றனர்.

மலைமகளும் அரனும்ஒரு வடந்தொட் டாட்ட
வாசவனும் சசியும்ஒரு வடந்தொட் டாட்டக்
கலைமகளும் அயனும்ஒரு வடந்தொட் டாட்டக்
கந்தனும்வள் ளியும்கலந்தோர் வடந்தொட் டாட்ட

[மலைகள்-பார்வதி; அரன்-சிவபிரான்; வடம்-சங்கிலி: சசி-இந்திராணி; வாசவன்-இந்திரன்; கலைமகள்-சரசுவதி; அயன்-பிரமன்; கந்தன்-முருகன்.]

பெருமாள் ஊஞ்சல் ஆடுகின்றார். கணவனும் மனைவியுமாக இருந்து கொண்டு ஒவ்வொரு இணையும்

ஒவ்வொரு சங்கிலியாகப் பிடித்து ஆட்டக்கூடிய ஊஞ்சல் ஆட்டம், பார்ப்போரது கண்களுக்கு ஒரு பெரிய விருந்து போல் இருக்குமல்லவா?

ஊஞ்சல் ஆடும்போது பாட்டுப்பாடவேண்டு மல்லவா? பகவான் திருமுன்னர் பாடப்படும் பாடல்கள் இக்காலத்தில் சினிமாப்படங்களில் கேட்கப்பெறும் பாடல் களைப்போல் இருக்கலாமா? பாடும் பாடகர்கட்கும் உயர்ந்த நிலை வேண்டாமா? ஆகவே நம்மாழ்வார், பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசைப்பிரான், குலசேகரப் பெருமாள், பட்டர் பிரானாகியபெரியாழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார், பாண்பெருமாளாகிய திருப்பாணாழ்வார், திருமங்கை யாழ்வார், மதுரகவியாழ்வார், நாதமுனிகள், பெரியநம்பி ஆகியவர்கள் திருவாய் மலர்ந்தருளிய தெய்வப் பாடல் களை — திவ்யப்பிரபந்தங்களை — பாகவதசிரோமணிகள் பாடுகின்றனர். இவர்களேயன்றி தும்புருவும் நாரதரும் இன்னிசைப் பாடல்களைப் பாடுகின்றனர். சில அடியார்கள் தமிழ் வேதங்களையும், சில அடியார்கள் வட மொழி வேதங்களையும் ஓதி நிற்கின்றனர். இன்னும் ஒரு கூட்டம் இராமானுசரது வெற்றியினையும், கூரத்தாழ் வாரது சிறப்புக்களையும், முதலியாண்டானுடைய கருணைத் திறத்தையும் பாடிக்கொண்டிருக்கின்றது. இன்னும், திருக்கலியனுக்கர், திருப்பணிசெய் அன்பர் முதலிய பக்தகோடிகள் தொழுது வழிபாடு செய்து நிற்கின்றனர். ஆகவே, ஆடும் பெருமாள் முன்னர் ஒரு பக்தர்கள் கூட்டம் இருந்துகொண்டு தெய்வப் பாடல்களை இசைத்து நிற்கின்ற காட்சியை நாம் காண் கின்றோம்.

இத்தகைய ஒருபெரிய அவையின் முன்னர் ஊஞ்சல் ஆடும் பெருமாள்,

"கான்பூத்த தனிச்செல்வன் சிலையுண் மின்னற்
கருமுகில்போல் கணமணிவா சிகையிணுப்பண்
தேன்பூத்த தாமரையாள் மார்பில் ஆடக்"

[கான்பூத்த தனிச் செல்வன்-இந்திரன்; கான்-கற்பகக் காடு; சிலை- வில்; கருமுகில்- கரிய மேகம்; கணம்-கூட்டம்; வாசிகை-மாலை; நாப்பண்-நடுவில்; தேன் பூத்த தாமரையாள்-இலக்குமி]

காட்சி யளிக்கின்றார். இந்திரதனுசின் நடுவில் தோன்றும் காளமேகத்து மின்னற் கொடிபோல, நீலமேக சாமள வர்ணனை திருமாலின் மார்பிலே, நவரத்தினங்களாலியன்ற மாலையினிடையே, பெருமாள் ஆடும்போது இலக்குமிதேவி அசைந்து நிற்கும் காட்சி நம் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகின்றதல்லவா?

மேலே கூறிய கவிஞர் இலக்குமிக்கும் திருமாலுக்கும் ஓருவமை காட்டியதுடன் நின்றுவிட்டார். இன்னொரு கவிஞர் கூறுவதைக் காண்போம். இலக்குமியைத் தன் மார்பகத்தேகொண்டு ஊசல் ஆடும் திருமாலைக் கண்டதும் அவர் கண்முன் பல காட்சிகள் தோன்றுகின்றன. நறுமணங்கமழும் காயா மரமும் அதில் ஏறி உட்கார்ந்திருக்கும் மயிலும், பச்சிலை மரச்சோலையும் அதில் பொருந்திய அழகிய கிளியும், நீலநிறத்துடன் காட்சியளிக்கும் மலையும் அதில் ஓடி விளையாடும் இளைய பெண்மான் கன்றும், நீலக்கடலும் அதில் படர்ந்து விளங்கும் பவளக்கொடியும், காளமேகமும் அதில் தோன்றி விளங்கும் மின்னற்கொடியும், 'சான்றோர் கவி' போல் கிடக்கும் யமுனை நதியும் அதில் வாசஞ்செய்யும் அன்னப்பேடும் அவர் கண்முன் காட்சியளிக்கின்றன. அவைமட்டுமா? மூன்றுலகும் ஈன்றானைப் பெற்றெடுத்த கோசலையின் கண்மணியாகிய இராமனும், வடமதுரையில்

தேவகி ஈன்றெடுத்து ஆயர்பாடியில் யசோதை தேவியால் வளர்க்கப்பெற்ற கண்ணனும், கவிஞருடைய மனக்கண்முன் தோன்றுகின்றனர். இராமனும் கண்ணனும் அவரவர் தாய்மார் கண்ணினுள் பாவைகளாகத் தோன்றும் காட்சியையும் காண்கின்றார் கவிஞர். இடத்தாலும் காலத்தாலும் சேய்மையில் ஞானக் கண்ணால் கண்டகாட்சிகளும் பெருமாள் இலக்குமியுடன் வீற்றிருந்து ஊஞ்சலாடும் காட்சியும் ஒன்றுசேர்ந்து ஓர்அழகிய சொல்லோவியமாகவடிவெடுக்கின்றன. இதோ அக் கவிஞரின் சொல்லோவியம்:

மணங்கமழ் பூவையும் மயிலும் தமாலக்காடும்
வண்கிளியும் நீலவெற்பும் மடமான் கன்றும்
இணங்குகட லுந்துகிரும் காரும் மின்னும்
யமுனையென்னும் திருநதியும் எகினப்பேடும்
கணங்குழைய கோசலை தேவகி யசோதை
கண்மணியும் பாவையும்போல் கமல வீட்டில்
அணங்கரசி னுடன்குலவி ஆடீர் ஊசல்
அலங்கார மாயவரே ஆடீர் ஊசல்!!

[பூவை-காயாமரம்; தமாலக்காடு-பச்சிலைக் காடு; வெற்பு-மலை; மடமான்–இளைய பெண் மான்; இணங்கு-விளங்கும்; துகிர்-பவளக்கொடி; கார்-மேகம்; மின்-மின்னல்; எகினப்பேடு-அன்னப்பேடை; கணங்குழைய-பலவாய்த் திரண்ட குழையெனும் காதணிகளையுடைய; பாவை-கண்ணினுள் தோன்றும் உருவம்; கமலவீடு–தாமரை மலராகிய இருப்பிடம்; அணங்கு அரசி-தெய்வ மகளிர்க்குத் தலைமையான இலக்குமி; குலவி-பொருந்தி.]

காயாமரம், பச்சிலைக் காடு, நீலவெற்பு, கடல், மேகம், யமுனை நதி, கண்மணி இவற்றை நிறத்தால் பெருமாளுக்கும், மயில், கிளி, மான், பவளக்கொடி, மின்னல், அன்னப் பறவை, பாவை, இவற்றை இயல்பாலும் தன்மையாலும் இலக்குமிக்கும் உவமையளித்த

கவிஞரின் திறமையை உன்னுந்தோறும் உவகை பொங்குகின்றதல்லவா? இதில் உள்ள இன்னொரு நயமும் கருதத்தக்கது. திருமால் மார்பில் இலக்குமி இருத்தல் போலவே, ஒவ்வொரு இடமும் அவ்விடத்திலிருக்கும் பொருளும் இணை இணையாகச்சேர்த்துக்காட்டிய சிறப்பும் இவ்விடத்தில் எண்ணி மகிழ்தற்குரியது.

பெருமாள் ஊஞ்சலில் ஆடும்போது அவருடன் சேர்ந்து வேறு சிலவும் ஆடுகின்றனவாகக் கவிஞர் கூறுகின்றார்:

ஆரணங்கள் ஒரு நான்கும் அன்பர் நெஞ்சும்
அணிசிலம்பும் அடிவிடா (து) ஊசல்ஆட;
வாரணங்கு முலைமடவார் கண்ணும் வண்டும்
வண்டுளவும் புயம் விடா(து) ஊசல் ஆட;

[ஆரணங்கள்-வேதங்கள்; வார்-கச்சு; தனங்களின் மீது அணியப்பெறுவது; வண்டுளவுவண் + துளவு - வளப்பமான திருத்துழாய் மாலை]

என்று காட்டுகின்றார். பெருமாள் ஆடும்போது அவருடைய திருவடிகளில் விளங்குகின்ற நான்கு வேதங்களும் சேர்ந்து ஆடுகின்றனவாம். கடவுளையே தியானித்துக்கொண்டு தம் மனத்தை ஆண்டவன் திருவடிபால் செலுத்திக் கொண்டுள்ள எண்ணிறந்த அடியார்களுடைய மனங்களும் பெருமாளின் திருவடிகளுடன் சேர்ந்து ஆடுகின்றன. கச்சணிந்த மாதர்கள் எம்பெருமானுடைய தோள் அழகில் ஈடுபட்டு அவற்றையே கண்டுகொண்டு நிற்றலால் அவர்கள் கண்களும் அப் புயங்களுடன் சேர்ந்து ஆடுகின்றனவாம். திருத்துழாய் மலர் மாலையில் மொய்த்துக்கொண்டிருக்கும் வண்டுகளும் சேர்ந்து ஆடுகின்றன.

இவற்றைத் தவிர, பெருமாள் அணிந்துள்ள எல்லா அணிகளும் ஆடுகின்றன என்பதைக் காட்டுந் திறன் படித்து இன்புறத்தக்கது. ஆண்டவனது திருவடிகளில் அணியப்பெற்ற கிண்கிணிகளும் பாத தண்டைகளும் ஆடுகின்றன. அவருடைய மார்பிலுள்ள கௌஸ்துப ரத்தினம் ஆடுகின்றது; இலக்குமி அசைந்தாடு கின்ருள். இரத்தின ஆரமும், திருத்துழாய் மாலேயும் தோள்களில் அசைந்தாடுகின்றன. ஒரு கையிலுள்ள சங்கும், மற்ருெரு கையிலுள்ள சக்கரமும் அசைந்தாடு கின்றன. திருமுடியிலுள்ள கருங்குழல் முடியும், அதில் அணியப்பெற்றுள்ள மலர்க் கண்ணியில் மொய்க்கும் வண்டுகளும் ஆடுகின்றன. முழுமதியைப் போன்ற திருமுக மண்டலத்தில் சிறுத்து அரும்பும் வியர்வைத் துளிகளும், காதுகளில் அணிந்துள்ள காதணிகளும் ஆடுகின்றன. இடுப்பில் கட்டியுள்ள அரைஞாணும் திருப்பரியட்டமும் அசைந்தாடுகின்றன. இவற்றைக் கவிஞர்,

அடித்தலத்திற் பரிபுரமும் சிலம்பும் ஆட
அணிமார்பில் கௌத்துவமும் திருவும் ஆடத்
தொடித்தலத்தின் மணிவடமும் துளவும் ஆடத்
துணைக்கரத்திற் சக்கரமும் சங்கும் ஆட
முடித்தலத்திற் கருங்குழலும் சுரும்பும் ஆட
முகமதியற் குறுவேர்வும் குழையும் ஆடக்
கடித்தலத்தில் அரைஞாணும் கலையும் ஆட

[அடித்தலம்-திருவடி; பரிபுரம்-கிண்கிணி; சிலம்பு-பாத தண்டை; கௌத்துவம்-கௌஸ்துவ ரத்தினம்; திரு-இலக்குமி; தொடித்தலம்-தோள்; மணிவடம்-இரத்தின ஆரம்; துளவு-திருத்துழாய் மாலே; துணைக்கரம்-இரண்டு கரம்; முடித்தலம்-தலே; குழல்-உரோமம்; சுரும்பு-வண்டு; முகமதி-பூர்ணசந்திரன் போன்ற முகம்; குறுவேர்வு-சிறுத்து அரும்பும் வியர்வைத்

துளிகள்; குழை-காதணி; கடித்தலம் - இடுப்பு; கலை-திருப் பரியட்டம்.

என்று காட்டுகின்றார்.

இவ்வாறு ஆண்டவன் ஊஞ்சல் ஆடுவதைப் பலவித மாகப் பாராட்டிப் பாடும் பக்தரின் தத்துவம்தான் என்ன என்று தெரிந்துகொள்ள எவரும் விரும்புவர். இதனை விளக்கும் தனிப்பாடல் ஒன்று—"தனியன்"—இத்தத்து வத்தை—உட்பொருளை—நன்கு விளக்கி நிற்கின்றது.

அண்டப்பந் தரிற்பற்றுக் கால்க ளாக
அறிவுவிட்டங் கரணஞ்சங் கிலிக ளாக
கொண்டபிறப் பேபலகை வினைய சைப்போர்
கொடுநரக சுவர்க்கப்பூ வெளிகள் தம்மில்
தண்டலிலேற் றம்மிறக்கந் தங்க லாகத்
தடுமாறி யிடருழக்கும் ஊசல் மாற

[அண்டம்-உலகம்; விட்டம்-உத்தரம்; கரணம்-இந்திரியங் கள்; பிறப்பு-பிறவி; வினை-இருவினைகள்; அசைப்போர்-ஆட்டு பவர்; பூ-பூமி; வெளிகள்-வெளியிடங்கள்; இறக்கம்-இறங்குதல்; தண்டல் இல் ஏற்றம்-தடையின்றி ஏறுதல்; தங்கல்-நிலை பெறுதல்; தடுமாறி-அலைந்து; இடர் உழக்கும்-துன்பம் அனுப விக்கும்; மாற-நீங்கும்படி]

ஊசல் பிரபந்தம் பாடப்படுகின்றது என்பதாக விளக்கப் படுகின்றது இத் தத்துவம்.

ஒரு பெரிய பந்தல்போன்ற இவ்வுலகில் மக்கள் எடுக்கும் பிறவி ஓர் ஊஞ்சல்போன்றது. பிறவி ஊஞ்சற் பலகைக்கு ஒப்பிடப்பட்டிருக்கின்றது. மக்களுடைய இந்திரியங்கள் ஊஞ்சற் பலகையிலுள்ள சங்கிலிகளைப் போன்றவை. மக்கள் பெற்றுள்ள அறிவு ஊஞ்சற்சங்கிலி களை மாட்டுவதற்குரிய விட்டம் போன்றது. இந்த விட்டத்தை மக்கள் உலக விவகாரங்களில் கொண்டுள்ள

பற்று—பாசம்—தூண்களாக நின்று தாங்குகின்றது. பிறவிதோறும் மக்கள் சம்பாதிக்கும் நல்வினை, தீவினை ஆகிய இரண்டு வினைகளும் ஊஞ்சலை ஆட்டுபவராக இருந்து ஆட்டுவிக்கின்றன. இவ் வினைப்பயன்களுக்குத் தக்கவாறு மக்கள் கொடிய நரகமாகிய வெளியில் இறங்குகின்றனர்; சிறிதும் தடையின்றி துறக்கத்திற்கும் ஏறுகின்றனர்; இப் பூவுலகில் தங்கவும் செய்கின்றனர். இவ்வாறு ஆன்மாக்கள் பல பிறவிகளால் தடுமாறித் துன்பம் அனுபவிக்கும் இவ்வூசலாட்டம் நீங்கி சாயுச்சிய பதவியை அடைவதாகப் பக்தர்கள் பகவானை ஊசல்பாடியிருக்கின்றனர் என்பது இத் தத்துவம். இவ்வாறு கொள்வதில் தவறு இல்லையல்லவா? இத்தகைய நம்பிக்கையை ஒவ்வொருவரும் ஆன்ம வளர்ச்சிக்கு அவசியமாகக் கொள்ளவேண்டும் என்பதற்கு என்ன தடை?

# 3. புகையிலையின் மகிமை *

புகையிலை நம் நாட்டிற்குப் புதிதாக வந்த பொருள். இப் புதிய பொருள் மக்களிடையே ஆதிக்கியம் செலுத்து வதைப்போல் வேறு எந்தப் பொருளும் செலுத்தவில்லை என்று சொல்லலாம். இப் பொருள் எந்த 'அவதாரம்' எடுத்தாலும் அந்த அவதாரத்தின் மகிமையை இவ்வளவு அவ்வளவு என்று அளவிட்டுக் கூற முடியாது. ஒவ்வொரு அவதாரத்திற்கும் ஏராளமான 'பக்தர்கள்' சேர்ந்துவிடுகின்றனர். அந்தந்த அவதாரத்தைப்பற்றி செய்யப்பெறும் விளம்பரங்களின் விளைவாகப் புதிய பக்தர்களும் சேர்ந்துகொண் டிருக்கின்றனர்!

இத்தகைய பல் பெருஞ் சிறப்புக்கள் வாய்ந்த புகையிலையைப் பல புலவர்கள் பலவாறாகப் பாராட்டு கின்றனர். ஒரு புலவர் கூறியுள்ள பாராட்டு விடுகதை போல் அமைந்திருக்கின்றது. அவர் கூறுவது:

நாலெழுத்துப் பூடு நடுவே நரம்பிருக்கும்
காலுந் தலையுங் கடைச்சாதி—மேலாக
ஓட்டு முதலெழுத்தும் ஓதுமூன் றாமெழுத்தும்
விட்டாற் பரமனுக்கு வீடு.

---

* 'புகையிலை விடுதூது' —என்ற சிற்றிலக்கியத்தைத் தழுவி எழுதியது. 'தமிழ்நாடு' புத்தாண்டு இதழில் (1953) வெளிவந்தது.

நல்ல சுவையான விடுகதை. கதையை விடுவிக்க முடிகின்றதா? முயற்சி செய்து பாருங்கள்!

கதையை விடுவிக்க முடியாதவர்களுக்குமட்டிலும் விடுவித்துக் காட்டுவோம். நாலெழுத்துப் பூடு என்றது புகையிலையை. பு—கை—யி—லை என்பதில் நான்கு எழுத்துக்கள் இருக்கின்றனவல்லவா? காலும் தலையும் என்றது புகையிலை என்ற பெயரிலுள்ள முதலும் கடையுமாகிய எழுத்துக்களை; அவை புலை என்பன; புலை என்பதற்குக் கடைச்சாதி என்ற பெயர் வழங்குகின்றதன்றோ? புகையிலை என்ற பெயரில் முதல் எழுத்தையும் மூன்றாம் எழுத்தையும் விட்டுவிட்டால் எஞ்சி நிற்பன கைலை என்னும் இரண்டு எழுத்துக்கள்; கைலை என்பது பரமனின்— சிவபெருமானின்— இருப்பிடமல்லவா? எவ்வளவு அழகான, நயமான, சுவையான விடுகதை பாருங்கள்!

புகையிலை நம் நாட்டுக்கு வந்த வரலாற்றை மக்கள் அறியாதிருந்தபோதிலும், அஃது இந்தப் பூவுலகிற்கு வந்த வரலாற்றைப்பற்றி வழங்கிவரும் கற்பனைக் கதையை ஒரு சிலராவது அறிந்திருக்கக்கூடும். புகையிலையைப்பற்றி இலக்கியங்கள்கூட தோன்றியிருக்கின்றன. ஒரு புலவர் (பெயர் தெரியவில்லை!) **'புகையிலை விடுதூது'** என்ற பிரபந்தம் பாடியிருக்கின்றார். இப்புலவர் 'புகையிலை பக்தராக' இருந்திருக்கக் கூடுமோ என்று எண்ணவேண்டியிருக்கின்றது. ஏனெனில், அதனை அவ்வளவுதூரம் சிறப்பித்துப் பாராட்டியிருக்கின்றார்.

இன்று புகையிலையைப்பற்றியோ அல்லது அதன் பல்வேறு அவதாரங்களைபப்ற்றியோ விளம்பரம் இல்லாத செய்தித்தாள்கள் இல்லை; வெளியீடுகள்

இல்லை. அவற்றினைக் குறித்து விளம்பரங்கள் காட்டப்பெருத படக்காட்சிகள் இல்லை. படக்காட்சியில் இடைவேளையிலோ, காட்சிகள் மாறும் போதோ காட்டப்பெறும் விளம்பரங்களின் ஆற்றல் படக்காட்சி நடைபெறும்போதே புகையிலையின் பல்வேறு அவதாரங்களையே கொட்டகைக்குக் கொண்டு வந்து விடுகின்றன. பீடி, சிறுசுருட்டு (சிகரெட்), சுருட்டு 'வகையருக்களின்' தரிசனம் படக்காட்சிக்கொட்டகையில் 'நட்சத்திரங்கள்' போல் காட்சியளிக்கின்றன! அவற்றி லிருந்து புறப்படும் புகையெல்லாம் ஆகாயம்போல் ஆகிவிடுகின்றது. புலவர் ஒருவர்.

> ஆகாயம் உன்புகைபோல் ஆனமையா லேஅரனுர்
> ஆகாய மேகாயம் ஆயினுர்

என்று கூறியுள்ளார். புகையிலையிலிருந்து வெளிப்படும் புகைபோல் ஆகாயம் இருத்தலால் சிவபெருமான் ஆகாய வடிவமாயினுராம். சிதம்பரத்தில் சிவபெருமான் ஆகாய வடிவமாக இருக்கின்றதாக ஐதிகமல்லவா?

இத்தகைய சிறப்புக்கள் வாய்ந்த புகையிலையின் தோற்றத்தைப்பற்றி வழங்கிவரும் கதை இது: ஒரு சமயம் நான்முகன், சிவபெருமான், திருமால் ஆகிய மூவருக்குள்ளேயும் ஒரு வழக்கு உண்டாயிற்று. தமக்குள் அவ் வழக்கைத் தீர்த்துக்கொள்ள அவர்களால் இயல வில்லை. ஆகவே, அவர்கள் மூவரும் தேவர்களின் அவைக்கு வந்து தமது வழக்கை எடுத்துரைத்தனர். தேவர்கள், 'உங்கள் வழக்கை நாளைக் கவனிப்போம்' என்று கூறி அவர்களிடம் வில்வம் திருத்துழாய் புகையிலை ஆகிய மூன்றையும் கொடுத்து அவற்றை மறுநாள் அவைக்கு அவர்கள் வருங்கால் கொண்டு வருமாறு சொல்லியனுப்பினர்.

மறுநாள் மூவரும் தேவர்கள் கூடியுள்ள அவைக்கு வந்தனர். சிவபெருமானிடம் கொடுத்த வில்வத்தைக் கங்கையின் அலை அடித்துச் சென்று விட்டது. திருமாலிடம் கொடுத்ந திருத்துழாயைப் பாற்கடலின் அலை கொண்டுபோய்விட்டது. நான்முகன் தன்னிடம் கொடுத்த புகையிலையை நாமகளிடம் கொடுத்து வைத்திருந்ததால் அது கெட்டுப்போகாமல் பாதுகாப்பாக இருந்தது. தேவர்கள் அம்மூவரையும் நோக்கி "நேற்று நாங்கள் கொடுத்த பத்திரங்களைக் கொண்டுவந்தீர்களா?" என்று கேட்க, சிவபெருமானும் திருமாலும் ஒருவரையொருவர் நோக்கி ஒன்றும் கூற இயலாது விழித்தனர்; என்ன மறுமொழி கூறுவது எனத் தெரியாது மயங்கி நின்றனர்.

நான்முகனுக்கோ மகிழ்ச்சி தாங்கமுடியவில்லை. தன் துணைவியிடம் கொடுத்து வைத்திருந்த புகையிலையை வாங்கித் தேவர்கள் முன் வைத்து, "மற்றவர்கள் பத்திரங்கள் போயின; என்னுடையது போகையிலை" என்று கூறினார். அவர் வாயிலிருந்து புகையிலையின் மரூஉவாகிய 'போகையிலை' என்ற பெயர் தோன்றியது. நான்முகனிடமிருந்து நழுவாமல் அவருக்கு உரியதாகிவிட்டதால், அன்றுமுதல் அதற்கு 'பிரம்ம பத்திரம்' என்ற மற்றொரு பெயரும் வழங்கலாயிற்று. நான்முகனும் தான் கூறிய வழக்கில் வெற்றி பெற்றார்; ஏனைய இருவரும் தத்தம் வழக்கை இழந்து விட்டனர்.

புகையிலை 'கச்சாப்பொருளாக' இருக்கும்போதே அதன் பெருமையை அளவிட்டுக் கூறமுடியாது. அது,

> எல்லார்க்கும் மாலாய் இசைந்து பாந்தோங்கிப்
> பல்லா யிரவடிவம் பாரித்து

விளங்குகின்றது. திருமால் பல அவதாரங்கள் எடுத்த போதெல்லாம் அவர் அவருடைய பக்ததர்களுக்கு 'மாலாகவே' காட்சியளிக்கின்றார். புகையிலையும் பல்வேறு வடிவங்களைக் கொள்ளும்போது பலருக்கு மயக்கத்தைத் (மால்–மயக்கம்) தந்து நிற்கின்றது.

இரண்டாம் உலகப் பெரும்போர் நடந்த காலத்தில் எல்லாப் பொருள்களின் விலைகளும் உச்சநிலைக்கு ஏறிவிட்டன. அரசினர் சில முக்கியமான பொருள்களின் விலைகளைக் கட்டுப்படுத்தினர். பாடுபட்டு உழைக்கும் உழவர்களைத் தவிர, வணிகரும் தரகரும் பிறரும் எத்தனையோ வழிகளில் பணத்தைத் திரட்டினர். உழவர்கள் உற்பத்திசெய்த பொருள்களைக்கொண்டே வணிகர் முதலியோர் திரட்டிய அளவுக்கு உற்பத்தி செய்த உழவர்கட்குக் கிடைக்கவில்லை! நெல் முதலிய உணவுப் பொருள்களின் விலைகளைக் கட்டுப்படுத்தவே உழவர்கள் அவற்றை உற்பத்தி செய்வதைவிட்டு எளிதில் பயன்தரக்கூடிய வேறு பொருள்களை விளைவித்தனர். அப்படி விளைவித்த பொருள்களில் புகையிலையும் ஒன்று. புகையிலையை விளைவித்த எத்தனையோ ஏழை உழவர்கள் சிறிது உயர்வை அடைந்தனர். பலன் கிடைக்கப்பெறாத ஒரு சிலர் தம்மை நற்பேறு இல்லாதவர்களாகவே கருதினர். இதனைத்தான் கவிஞர்,

பாவிஉனை நட்டுப் பலன்காணார் தம்மைமுழுப்
பாவியென்று சொல்வார் பலருமே

என்று கூறுகின்றார். அதனால்தான் புகையிலையைக் காங்கேயம், யாழ்ப்பாணம், அழகன்குளம், தம்பம்பட்டி முதலிய இடங்களில் அதிகமாக விளைவிக்கின்றனர். சிவபுரி புகையிலை, தம்பம்பட்டி புகையிலை பெயர் போனவை என்று நாம் கேள்வியுறுகின்றோம் அல்லவா?

உறையூர் சுருட்டு உலகப்பிரசித்தி பெற்றதல்லவா? 'தங்கபஸ்பம்' புகையிலையைக் கேள்விப்படாதவர்களும் இருக்கமுடியுமா?

உலகில் பிறந்த மக்களுக்குப் பாடம் கொடுத்து (கல்விகற்பித்து) அவர்களைச் சீலர்களாக்குவதைப் போலவே இந்தப் புகையிலைக்கும் 'பாடங்கொடுத்து'ச் சிறந்த பொருளாக்குகின்றனர். கல்லாத மாந்தர்களிடம் உயர்ந்த பண்புகள் வெளிப்பட வாய்ப்பு இல்லையல்லவா? புகைவண்டி நிலையம், உந்துவண்டி நிலையம்போன்ற இடங்களிலும் "தங்கபஸ்பம்" போன்ற விளம்பரங்களைப் பார்க்கின்றோம் அல்லவா? அஃது என்ன? பாடம் கேட்டு மேலோன் ஆன புகையிலைதான் அது. அதுதான்,

தாவில்பல வித்தையுடைத் தாகித் தமிழ்போல்
நாவில் விளையாடும் நாமகளாய்

விளங்குகின்றது. நான்முகன் நாவில் நாமகள் விளையாடுவது போலவும், கற்றறிந்த புலவர்கள் நாவில் தமிழ் தாண்டவமாடுவதுபோலவும், கற்றோர் கல்லாதவர் என்ற வேறுபாடேயின்றி எல்லோர் நாவிலும் இப் புகையிலை விளையாடுகின்றது. என்னே புகையிலையின் பொதுவுடைமைக் கொள்கை! இருவகையினரும் சிறப்பாகப் "பாடங்கேட்ட'' புகையிலையையே விரும்புகின்றனர்; வாங்கவும் செய்கின்றனர். தாம்பூலம் போடும் சிலருக்குப் புகையிலையில்லாமல் முடியாது என்பதை நன்கு உணர்ந்த கவிஞர்,

தாம்பூல நாவுக்குச் சாரம்;அது தானும்உன்றன்
காம்பில் அடக்க மன்றோ? கட்டழகா!

என்று கூறுகின்றார். நாகரிகம் வாய்ந்த மக்கள் பெரும்பாலும் பாடம் பண்ணின புகையிலை வகையறாக்களை

உபயோகித்தாலும், ஏழை மக்கள் வெறும் புகையிலைக் காம்பை மட்டிலும் வாயில் அடக்கிக்கொண்டு காலங்கழிக்கின்றனரல்லவா? 'வகைதொகை இல்லாத கணக்கும் புகையிலை இல்லாத பாக்கும் வழவழ கொழகொழ' என்ற பழமொழியையும் நாம் கேள்விப்பட்டுத்தானே இருக்கின்றோம்?

திருமூக்கமுது (மூக்குப்பொடி), சுருட்டு, சிறுசுருட்டு, பீடி முதலிய அவதாரங்களாகப் புகையிலை எடுக்கும் போதுதான் அதன் மகத்துவம் மிகுகின்றது. வெள்ளைக்கார நாகரிகத்தை அப்படியே நகல் எடுக்கும் நபர்கள்-தாம் இந்த அவதாரங்களின் பக்தகோடி சிகாமணிகள். வெள்ளைக்காரர்களிடம் கற்றுக்கொள்ளவேண்டிய நல்ல பண்புகளையெல்லாம் விட்டுவிட்டு, அவர்களைப்போல் உண்ணுதல், உடுத்தல், குடித்தல், புகைபிடித்தல் போன்ற வேண்டாத—நம் நாட்டின் தட்பவெப்ப நிலைகளுக்குச் சிறிதும் பொருந்தாத—பழக்கங்களை மக்கள் கைக்கொண்டிருக்கின்றனர். முதலாவது நமக்கு புகை பிடித்தல் அவசியமா? காலைக்காபி அருந்தாமலோ புகை சுருட்டு பிடிக்காமலோ மலங்கழிக்க முடியாத நிலையிலும் மக்கள் துன்பப்படுகின்ற அளவுக்குப் பழக்கம் அவர்களை அடிமைப்படுத்தியிருக்கின்றது. சாதாரண ஏழைமுதல் பணக்காரர்வரை, கல்லாதார் முதல் கற்றறிந்தார்வரை, சுருட்டுப் பக்தர்களாக இருப்பதை நினைந்து,

> கற்றுத் தெளிந்த கனப்ரபல வான்களும்உன்
> சுற்றுக்குள் ஆவதென்ன சூழ்ச்சியோ?

என்று சுட்டி உரைக்கின்றார் கவிஞர். இக் காலத்தில் மாணாக்கர் உலகையே 'சிறு சுருட்டு பிடித்தல்' என்ற பழக்கம் ஒரு தொத்து நோய்போல் பிடித்துக்கொண்டிருக்கின்றது. நாட்டுப்புறத்திலிருந்து நகரங்களிலுள்ள

கல்லூரிகட்குப் பயில்வதற்காக வருபவர்கள் சிறு சுருட்டுப் பிடித்தலை 'முதற் கல்வி'யாகக் கொண்டு விடுகின்றனர். 'சிகரெட் நட்பு' என்பது இக்காலத்தில் காணும் புதியதோர் நட்புவகை. சுருட்டிலும், சிறு சுருட்டிலும் எண்ணற்ற வகைகளிருப்பதை எல்லா செய்தித்தாள்களிலும் காணப்பெறும் விளம்பரங்கள் வாயிலாக அறிந்து கொள்ளலாம். ஒவ்வொரு அவதார வகையும் தம்மை வழிபாடு செய்யும் பக்தகோடிகளை நாடியே நிற்கின்றது!

சுருட்டு, சிறு சுருட்டுக்களுக்கு அடுத்தபடியாக புகையிலையின் சிறந்த அவதாரம் திருமூக்கமுது. "பட்டணம் பொடி" என்று எங்கும் பல்வேறு விளம்பரங் களைக் காண்கின்றோமன்றோ? வைதிகர்கள் தமது 'இஷ்டமூர்த்திகளைத்' தம்முடனே வைத்துக்கொண்டுவழி படுவதைப் போலவே, திருமூக்கமுது பக்தர்களும் வெள்ளி, தந்தம், கொம்பு போன்றவைகளாற் செய்யப் பெற்ற சம்படங்களில் திருமூக்கமுதை வைத்து அவற்றைத் தம் இடுப்பில் செருகிக்கொண்டு அடிக்கடி "வழிபாடு" நடத்திவருவதையும் நாம் காணுமல் இல்லை. இவர்கள் பக்தியைக்கண்ட கவிஞர் பொடியின் மகிமையை,

> வாடைப் பொடிகதம்பம் ஆனவெல்லாம் உன்னுடைய
> சாடிப் பொடிக்குச் சரியுண்டோ?

என்று கூறுகின்றார்.

இவ்வுலக வாழ்க்கையில் எல்லாத் துறைகளிலுமே நாம் "பொடி நண்பர்களை"ப் பார்க்கின்றோம். ஒரு சிட்டிகைப் பொடிக்காகத் தம் நிலையையும் மறந்து, காலத்தையும் வீணுக்கிக் காத்திருந்து கெஞ்சி நிற்கும்

பலரை நாம் காண்கின்றோம். உலோகங்களைப் 'பொடி' ஒட்டவைப்பதுபோல இருவரை மூக்குப்பொடி சேர்த்து வைக்கின்றது! பொடியின் மகிமைதான் என்னே!

சொற்காட்டு நல்ல அடிகார ராரையும்போய்ப்
பற்காட்ட விட்ட, பழிகாரா?

என்று பொடியின் மகத்துவத்தைக் கவிஞர் கூறுவதைக் காண்க. இன்னொரு புலவர் பொடியின் பெருமையைக் குறித்து தனிப்பாடல் ஒன்றினை இயற்றியிருக்கின்றார்.

ஊசிக் கழகு முனைமழுங் காமை; உயர்ந்தபா
தேசிக் கழ(கு)இந் திரிய மடக்கல்; தெரிகலன்சேர்
வேசிக் கழ(கு)இன் இசை;பல நூல்கற்ற வித்வசனர்
நாசிக் கழகு பொடி;எனக் கூறுவர் நாவலரே.

வித்துவான் தியாகராசச் செட்டியார் என்பவர் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் காலத்தில் வாழ்ந்தவர்; அவரது மாணக்கரும்கூட. அவர் காலத்தில் அவரை அறியாதவர்களே இருக்க மாட்டார்கள்; அவ்வளவு சீரும் சிறப்பும் விளங்கப் பெற்றவர்கள். ஒரு சமயம் அவர் திருவானைக்காவில் பொடி வியாபாரம் செய்துவந்த சோமசுந்தரம் பிள்ளை என்பவரையும் அவர் விற்றுவந்த பொடியையும் சிறப் பித்து ஒரு செய்யுள் இயற்றியதாக டாக்டர். உ. வே. சாமிநாதய்யர் கூறுகின்றார்கள். அச்செய்யுள் :

கொடியணி மாடம் ஓங்கிக்
குலவுசீர் ஆனைக் காவிற்
படியினில் உள்ளார் செய்த
பாக்கியம் அனையான் செங்கைத்
தொடியினர் மதனன் சோம
சுந்தரன் கடையிற் செய்த
பொடியினைப் போடா மூக்குப்
புண்ணியம் செய்யா மூக்கே.

பாடல் எப்படியிருக்கின்றது? அடியிற்காணும் சிலப்பதிகாரப் பாடல்களோடு ஒப்பிட்டுப் பாருங்கள் :

மூவுலகும் ஈரடியான் முறைநிரம்பா வகைமுடியத்
தாவியசே வடிசிவப்பத் தம்பியொடுங் கான்போந்து
சோவரணும் போர்மடியத் தொல்லிலங்கை கட்டழித்த
சேவகன்சீர் கேளாத செவியென்ன செவியே
திருமால்சீர் கேளாத செவியென்ன செவியே;

பெரியவனை மாயவனைப் பேருலக மெல்லாம்
விரிகமல வுந்தியுடை விண்ணவனைக் கண்ணும்
திருவடியுங் கையும் திருவாயும் செய்ய
கரியவனைக் காணாத கண்ணென்ன கண்ணே
கண்ணிமைத்துக் காண்பார்தம் கண்ணென்ன கண்ணே;

மடந்தாழு நெஞ்சத்துக் கஞ்சனார் வஞ்சம்
கடந்தானை நூற்றுவர்பால் நாற்றிசையும் போற்றப்
படர்ந்தா ரணமுழங்கப் பஞ்சவர்க்குத் தூது
நடந்தானை ஏத்தாத நாவென்ன நாவே
நாராய ணாவென்னா நாவென்ன நாவே;

நடைதான் வேறு; போக்கு ஒன்றேதான். திருமால் சீரைக்கேளாத செவியும், அக் கரியவனைக் காணாத கண்ணும், பஞ்சவர்க்குத் தூதுசென்றானை ஏத்தாத நாவும் பயனிலவென்பது திருமால் வழிபாடு செய்துவரும் ஆய்ச்சியர்களின் கொள்கை. இதுபோலவே, சோமசுந்தரன் கடையிற் செய்த திருமூக்கமுதைச் சுவை பார்க்காத மூக்கும் பயனற்றது என்பதுதான் தியாகராச செட்டியாரின் கொள்கையும். பொடியினைச் சுவைப்பது மூக்குமட்டிலுந்தானே?

புகையிலையிலிருந்து மயக்கத்தைத் தரவல்ல ஒருவகைச் சாராய பானமும் உண்டாக்கப்பெறுகின்றது.

பூராய மான பொருளை வெளிப்படுத்தும்
சாராயம் தான்உனக்குத் தம்பியோ ?

என்று கவிஞர் இதனைக் கூறுகின்றார்.

இவ்வாறு 'போகப்பயிராய் முளைத்த, தாகப்பயிரான சஞ்சீவியாம்' புகையிலையையும் அதன் ஏனைய அவதார புருடர்களையும்பற்றி எவ்வளவு வேண்டுமானாலும் கூறலாம். இந்த நவ நாகரிக உலகில் அவற்றின் திருவிளையாடல்கள் எண்ணிலடங்கா. இளைஞர்முதல் கிழவர்வரை அவற்றிற்கு ஏராளமான பக்தர்கள் உளர். அவர்கள் அவற்றின் திருவிளையாடல் இன்பத்தில் ஈடுபட்டு வருவதை நாம் அவர்களின் அன்றாட வாழ்க்கையில் காண்கின்றோம்.

# 4. கவிதையனுபவம்

கவிதையனுபவத்தைக் கூறப்புகுவது தேனின் இனிமையைப்பற்றி உரைப்பதோ டொக்கும். தேன், உண்டு அனுபவிக்க வேண்டிய பொருள்; அங்ஙனமே கவிதையும் படித்து அனுபவிக்க வேண்டியதொன்று. கவிதையின் அனுபவத்தைச் சொற்களால் வரையறைப் படுத்தி அளந்து காட்ட இயலாது.

பாவின் நயமெல்லாம் — யானும்
பகர வல்லேனோ ?
ஆவின் பாற்சுவையை — நாழி
அளந்து காட்டிடுமோ ?[1]

என்ற கவிமணியின் வாக்கு ஈண்டு சிந்தித்தற்குரியது. என்றாலும், கவிதையனுபவத்தில் திளைத்த ஒரு சிலர் தம் அனுபவத்தைச் சொற்களால் கூறியுள்ளனர்; இவ்வுலகில் மிக்க சுவையான பொருளையுண்ட ஒருவர், 'வானமிழ்தம்போல் இனித்தது' என்று கூறுகின்றார். அவர் பார்க்காத — உண்டு அறியாத — ஒன்றினைக் கொண்டு உண்டபொருளொன்றினை விளக்குகின்றார். ஆனால், அதனைக் கேட்போர் வானமிழ்தத்தை நன்கு அறிந்தவர்கள்போல் தலையை அசைக்கின்றனர். இது வீண் அசைப்பு அன்று; கூறுவோர் சொல்வதை

1. கவிமணி: பாரதியும் பட்டிக்காட்டானும்—23

நன்கு உணர்ந்தே அவர்கள் அங்ஙனம் அசைக்கின்றனர். பல பொருள்களையுண்டு பலசுவைகளைக் கண்ட அனுபவத்தின் விளைவாக இவர்கள் மனம் இனிமைக்கு ஓர் அளவுகோலை வகுத்துக்கொண்டுள்ளது; அந்த அளவுகோலின் மேல் எல்லைக்கு வரையறை இல்லை. அந்த மேல் எல்லைதான் வானமிழ்தத்தின் இனிமையைக் காட்டுவது. இந்த அளவுகோலைக் கொண்டே சொல்லுவோரின் குறிப்பைக் கேட்போர் அறிகின்றனர். இத்தகையதொரு அளவுகோல் போன்ற தொன்றைக்கொண்டே கவிதைகளை அனுபவித்தவர்களும் தம் அனுபவத்தைச் சொற்களால் விளக்கியிருக்கின்றனர். திருவாசகத் தேனில் ஊறிய வடலூரார்,

வான்கலந்த மாணிக்க வாசக!நின் வாசகத்தை
நான்கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே
தேன்கலந்து பால்கலந்து செழுங்கனிதீஞ் சுவைகலந்து
ஊன்கலந்து உயிர்கலந்து உவட்டாமல் இனிப்பதுவே.[2]

என்று அதன்சுவையை எடுத்துக்காட்ட முயலுகின்றார். கம்பன் காவியத்தை அனுபவித்த மற்றொருவர்,

இம்பர் நாட்டிற் செல்வமெலாம்
　　எய்தி அரசாண் டிருந்தாலும்
உம்பர் நாட்டிற் கற்பகக்கா
　　வோங்கு நீழல் இருந்தாலும்
செம்பொன் மேரு அனையபுயத்
　　திறல்சே ரிராமன் திருக்கதையில்
கம்ப நாடன் கவிதையிற்போல்
　　கற்றோர்க் கிதயம் களியாதே.[3]

என்று அதன் கவிதைச் சிறப்பை எடுத்தோதுகின்றார். இங்ஙனமே, "*பாரதியும் பட்டிக்காட்டானும்*" என்ற

2 ஆளுடைய அடிகள் அருள்மாலை—7 3 கம்பராமாயணத் தனிவன்

கவிமணியின் பாடல்கள் பாரதியாரின் கவிதைச் சுவையை எடுத்துரைக்கின்றன.

'கண்ணன் காதலன்' எனக்கொரு
கனிய முதமடா!
விண்ணை முதமுமே—அதனை
வெல்ல மாட்டாதடா![4]

என்ற பாடல் 'கண்ணன் பாட்டு' என்ற கவிதையை அனுபவித்த கவிமணியின் வாக்கு. இங்ஙனம் ஒரு சில பாடல்களால், தான்படித்த ஒரு சில கவிதைகளின் அனுபவத்தை விரித்துரைக்கின்றார் கவிமணி. கவிதைகளைப் படித்துச் சுவைக்கும் பழக்கமுடையவர்கள் மேற்கூறிய 'கவிதையனுபவப் பாடல்களின்' பொருளை—அவைகூறும் உண்மையை—நன்கு அறிவர். பாம்பின் கால் பாம்பறியுமன்றோ?

கவிதை இன்னது என்று ஓரளவு அறிந்துகொண்டு அதனைச் சுவைப்பது ஒருவகை; அதனை அறியாமலே சுவைப்பது மற்றொருவகை. பெறும் அனுபவம் ஒன்றே யாயினும் அவ் வனுபவத்தின் தரத்தில் வேறுபாடு இருக்கத்தான் செய்யும். 'ஓவல்டின்' என்ற ஒருவகைப் பானத்தைப் பருகினால் அஃது எல்லோருக்குமே இன்பத்தைத்தான் தரும். என்றாலும், அப் பானத்தில் இன்னின்ன சத்துக்கள் சேர்ந்திருக்கின்றன என்றும், அச் சத்துக்களின் அடிப்படைத் தன்மைகள் இவை என்றும் புரிந்துகொண்டு அதனைத் துய்த்தற்கும், ஒன்றுமே தெரியாமல் ஓவல்டினைப் பருகித் துய்த்தற்கும் வேறுபாடு உண்டு. அவ் வேறுபாடு தரத்தில் உள்ளது. அங்ஙனமே, ஒரு மோட்டார் வண்டியை அதன் பொறி

4. பாடல் — 17

நுட்பம் (mechanism) முதலியவற்றை நன்கு அறிந்து கொண்டு கடவுவதற்கும், ஒன்றுமே அறியாது இயக்கும் முறைகளைமட்டிலும் அறிந்துகொண்டு கடவுவதற்கும் வேறுபாடு இல்லாமல் இல்லை. இதனை மனத்தால் உணரவேண்டுமேயன்றிச் சொற்களால், தருக்கமுறை களால், புரிந்துகொள்ளச் செய்தல் முடியாது. எல்லா வித அறிவியல் உண்மைகளை அறிந்துகொண்டு ஆண்டவனின் படைப்புத் திறத்தை உணர்வதற்கும் வெறும் கற்பனையிலேயே அதனை உணர்வதற்கும் வேறுபாடு உண்டு. ஐன்ஸ்டைன் என்ற அறிவியல் மேதை உண்மையான அறிவியலறிஞன்தான் ஆண்டவன் படைப்பின் விந்தையையும் சமயங்களின் உண்மையையும் நன் முறையில் உணர முடியும்என்று ஓரிடத்தில் கூறியிருப்பதை ஈண்டு நினைவு கொள்க. இக்காரணத்தால்தான் கவிதைபற்றிய செய்திகளும் அதனுடன் தொடர்பு கொண்ட உணர்ச்சி பற்றிய செய்திகளும் இக் கட்டுரையில் ஆராயப்பெறுகின்றன.

[ 2 ]

கவிதையின் உயிர்போன்ற பகுதி அதில் பொதிந்துள்ள உணர்ச்சி. உணர்ச்சியில்லாத கவிதை வெற்றெனத் தொடுக்கப் பெற்ற ஒரு சொற்கோவையே. நம்மிடம் தோன்றும் உணர்ச்சிப் பெருக்கை நாம் ஆராய்ந்து பிரித்துப்பார்க்க முனைந்தால் அஃது இயலாத செயலாக முடியும். கடலலைகளையாவது ஒருவிதமாக எண்ணி முடிவு கட்டலாம் எனத் தோன்றும்; நம் உணர்ச்சிகளை ஒரு நாளும் எல்லைகட்டி வரையறுத்துப் பேசமுடியாது என்பது தெளிவாகப் புலனாகும். இந்த உணர்ச்சிகளைப்பற்றி மேனாட்டு உடலியலறிஞர்களும் உளவியல் நிபுணர்களும் ஆராய்ந்து அறிவியலடிப்

படையில் சில கருத்துக்களைத் தெரிவித்திருக்கின்றனர். இளைஞர்கள் அவற்றை ஆர்வத்துடன் கற்றுத்தெளிந்து உணர்ந்து மகிழ்வார்களாக.

உடலும் உள்ளமும் நன்னிலையில் உறவுகொண்டிருந்தால்தான் நல்லுணர்ச்சிகள் தோன்றி, கவிதையை அனுபவித்தற்குத் துணை செய்யும். உணர்ச்சிகளின் திரட்சியே பற்றுக்கள் (sentiments) ஆகும். பற்றுக்களே நம்மைக் கவிதைகளைப் படிக்கத் தூண்டுபவை. உணர்ச்சிகளே மீப்பண்புக்கும் (temperament) காரணமாக இருப்பவை. இவற்றின் காரணமாக நாம் பல்வேறு கவிதைகளைப் படிக்கின்றோம். அவற்றைப்படித்து அனுபவிப்பதற்கேற்ற மனநிலைகளையும் பெறுகின்றோம் இத்தகைய உணர்ச்சிகள் (feelings) உள்ளக்கிளர்ச்சிகள், (emotions) ஆகியவைபற்றி உடலியல், உளவியல் அடிப்படையில் நன்கு புரிந்துகொண்டால், உணர்ச்சி உள்ளக்கிளர்ச்சிகள்பற்றிய உளவியலார் கூறும் பல்வேறு கொள்கைகளை நன்கு அறிந்து தெளிந்தால், கவிதையனுபவம் இன்னமுறையில்தான் நம்மிடம் ஏற்படுகின்றது என்பதை நன்கு உணரலாம். வாழ்க்கையில் நமக்கேற்படும் உணர்ச்சிகட்கும் கவிதைகளைப் படிக்கும்போது நாம் பெறும் உணர்ச்சிகட்கும் வேறுபாடு உண்டு என்பதை நாம் தெளிவாக அறிதல் வேண்டும்.

நாம் கவிதையைப் படித்துத் துய்ப்பது தூண்டல்-துலங்கல் (stimulus-response) தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டது. புற உலகிலுள்ள பொருள்கள் நம் புலன்களைத் தூண்டுவதால்தான் நாம் செய்திகளை அறிகின்றோம்; இதைத்தவிர நமக்குக் கருத்து நிலையில் (ideational level) ஏற்படும் செயல்களாலும் தூண்டல்கள் ஏற்படுகின்றன. ஒரு கவிதையைப் படிக்கும்பொழுது இரண்டாவதாகக் குறிப்பிட்ட தூண்டல்களே நமக்கு

ஒருவித கிளர்ச்சியைத் தந்து கவிதையை அனுபவிக்கத் துணை செய்கின்றன.

எந்தமொழியும் குறியீடுகளால் (symbols) ஆனது. சொற்களே இக்குறியீடுகளாம். அச்சொற்களுக்குப் பொருள் உண்டு. 'எல்லாச் சொற்களும் பொருள் கிளத்தனவே' என்ற தொல்காப்பியரின் கூற்றை ஈண்டு நினைவு கூர்க. ஆகவே, சொற்கள் தூண்டலை எழுப்பும் அடையாளங்க (signs) ளாகின்றன நம்முடைய கண்கள் அச்சிட்ட கவிதைகளைப் படிக்கின்றன; அல்லது காதுகள் கவிதையைப் பிறர் படிக்கக் கேட்கின்றன. கவிதையை வாய்க்குள்ளும் படிக்கின்றோம்; வாய்விட்டும் படிக்கின்றோம். கண்ணின் மூலமும் காதின் மூலமும் ஏற்படும் தூண்டல்கள் நம் மூளையை அடைகின்றன. நாம் கவிதையின் பொருள்களை அடைகின்றோம். நம் மனத்தில்* பல்வேறு எண்ணங்கள் எழுகின்றன. இவை தம்மொடு தாமாகக் கலந்து தொகுதிகளாகிப் பிற எண்ணங்களுக்குக் குறியீடுகளாகின்றன. இவை யாவும் பெருமூளையின் புறணியில் (cerebral cortex) நடை பெறுபவை. நம் மூளையின் ஒரு பகுதியாகிய மேற்பூத் தண்டு (hypo-thalamus) உள்ளக் கிளர்ச்சி நிலையில் பங்குகொள்கின்றது என்பதை ஆய்வுகளால் கண்டறிந் துள்ளனர். உள்ளக் கிளச்சிபற்றிப் பல கொள்கை களும் எழுந்துள்ளன. இவற்றையெல்லாம் ஒருங்கு வைத்து எண்ணினால் ஓர் உண்மை புலனாகின்றது. கவிதையைப்படித்து அதிலுள்ள செய்திகளைப் பெரு மூளை அறிந்ததும் அங்குத் தோன்றும் எண்ணங்களும் எண்ணக் கோவைகளுத் மேற்பூத்தண்டைத் தூண்டி அதன்மூலம் தன்னாட்சி நரம்பு மண்டலத்தை (autonomous nervous system) இயக்குகின்றன. இம் மண்டலத்தின் இயக்கத்தால் சுரப்பிகள் தூண்டப்

பெற்று அவற்றின் சாறுகள், குறிப்பாக மாங்காய்ச்சுரப்பிகளின் (adrenal glands) சாறுகள், குருதியோட்டத்தில் கலந்து உடலெங்கும் உணர்ச்சியலைகளை எழுப்புகின்றன. வாழ்க்கை யனுபவத்தில் இவ்வித உணர்ச்சிகள் ஏற்படுங்கால் இத்தகைய உடல் மாறுதல்கள் ஏற்படுகின்றன என்பது உளவியல் காட்டும் உண்மை. வெகுளிச்சுவை, அவலச்சுவை, மருட்கைச் சுவைபோன்ற சுவைகள் உள்ள கவிதைகளைப் படிக்கும்பொழுது அவற்றால் பெறும் செய்திகள் பெருமூளையில் பல்வேறு எண்ணக் கோவைகளை எழுப்பி மேற்குறிப்பிட்ட நிலைமைகளை உண்டாக்குகின்றன என்று ஊகம் செய்யலாம். இதனால்தான் கவிதையிலுள்ள கவிஞனின் உணர்ச்சிகள் நம்மிடமும் எழுகின்றன. பக்திச்சுவை மிக்குள்ள திருவாசகத்தை ஓதினால் ஏற்படும் நிலையைச் சிவப்பிரகாச அடிகள்,

திருவா சகம்இங் கொருகால் ஓதின்
கருங்கல் மனமும் கரைந்துகக் கண்கள்
தொடுமணற் கேணியின் சுரந்துநீர் பாய
அன்பர் ஆகுநர் அன்றி
மன்பதை உலகில் மற்றையர் இலரே.[5]

என்று எடுத்தோதுவதனால் இதனை அறியலாம். உயர்ந்த கவிதைகள் யாவும் அவற்றில் ஈடுபட்டுப் படிப்போரிடம் கவிஞர்களின் அனுபவத்தையே பெறவைத்து விடுகின்றன.

அறிவுநிலை வேறு, உணர்விநிலை வேறு என்பதை நாம் நன்கு அறிவோம். நீதி நூல்களைப்படிக்கும் போது பலகருத்துக்களை அறிந்து கொள்ளுகின்றோம்; அவை மூளைக்கு விருந்தாக அமைகின்றன; அப்பொழுது

5. நால்வர் நான்மணிமாலை–4

அறிவு நிலை செயற்படுகின்றது. ஒரு காவியத்தைப் படிக்கும்பொழுது அங்குள்ள பல்வேறு நிகழ்ச்சிகள் நம்மை உணர்ச்சி வசமாக்குகின்றன; அப்பொழுது நம் உணர்வு நிலை செயற்படுகின்றது.

முன்னமோர் பொய்யுரைக்க அப்பொய்வெளி
யாகாமல் மூடும் வண்ணம்,
பின்னுமோர் பொய்யுரைக்க அதையும்நிலை
நிறுத்தவோர் பெரும்பொய் சொல்ல
இன்னவகை கைதவமொன் றிருநூறு
கைதவத்துக் கிடமாம்; வாய்மை
தன்னையே முற்பகரிற் சங்கடமொன்
றிலையதுவே தகைமை நெஞ்சே.[6]
[கைதவம்-பொய்]

என்ற கவிதையில் (செய்யுளில்!) கவிஞன் உணர்த்துவது நம் அறிவுநிலையைத் தொடுகின்றதேயன்றி உணர்வு நிலையைத்தொடவில்லை. ஆனால்,

முடையெடுத்த நவநீதம் தொட்டுண்டுங்
கட்டுண்டும் முதல்நாள் நாகக்
குடையெடுத்து மழைதடுத்தும் வஞ்சனைக்கோர்
கொள்கலமாம் கொடிய பாவி
படையெடுத்து வினைசெய்யேன் எனப்புகன்ற
மொழிதப்பிப் பகைத்த போரின்
இடையெடுத்த நேமியினால் வெயில்மறைத்தான்
இன்னமிவன் என்செய் யானோ?[7]

[ நவநீதம்-வெண்ணெய்; நேமி-சக்கராயுதம், ]

என்ற கவிதையை உணர்வூட்டிப் படியுங்கள்.

6. வேதநாயகம்பிள்ளை: நீதிநூல் (பொய்-செய்' 1)
7. வில்லிபாரதம்: பதினைன்காம் போர்ச்சருக்-172

அருச்சுனன் செய்த சூளுரைக்கு அஞ்சி துரியோதனன் சயத்திரதனை நிலவறையுள் மறைத்து வைத்துப் பாதுகாக்கின்முன். கண்ணன் தன் திருவாழி யால் பகலவனை மறைக்க, பொழுது சாய்ந்தது என்று கருதிக் கௌரவர்கள் சயத்திரதனை வெளிக் கொணர் கின்றனர். கண்ணன் ஆணையால் அருச்சுனன் கணை தொடுத்துச் சயத்திரதனைக் கொல்லுகின்முன். கண்ணன் திருவாழியை விலக்கப் பகலவன் காணப்பெறுகின்முன். சேனையிலுள்ளார் அனைவரும் வியப்பெய்துகின்றனர். இந்நிலையில் துரியோதனன் சினங்கொண்டு சில கூறிச் சேனையுடன் சென்று போர் தொடங்குகின்முன். சினத்துடன் துரியோதனன் பேசுவதாகவுள்ள மேற் குறிப்பிட்ட பாடலைச் சூழ்நிலையை அறிந்து படிக்குங் கால் அஃது அறிவு நிலையைத் தொடாமல், உணர்வு நிலையைத் தொடுவதை அறிக. நம்மிடம் ஒட்ட உணர்தல் (empathy) என்ற ஒருவகை உணர்ச்சிநிலை தோன்றி துரியோதனின் மன நிலையையே உண்டாக்கி விடுகின்றது. ஒட்ட உணர்தல் என்பது, தன்னைப் பிறராகவே கருதி உணரும் நிலையாகும். ஈண்டு நாம் நம்மை துரியோதனனுகவே கருதுகின்ருேம் அன்ருே? எனவே, உணர்வு நிலையைத் தொடும் பாடல்கள் கவிதையனுபவத்தை நம்மிடம் மிகுவிக்கின்றன.

[ 3 ]

ஏதோ ஒரு வகையான உண்மையை அடிப் படையாகக் கொண்டு செஞ்சொற்களால் உள்ளங் கவரும் முறையில் உயர்ந்த கவிதையை உண்டாக் குபவனே கவிஞன். இளங்கோ ஒரு கவிஞன்; கம்பன் ஒரு கவிஞன்; சேக்கிழார் ஒரு கவிஞர். உலகிற்கே மாபெரும் உண்மைகளை உணர்த்திய வள்ளுவன் ஒரு

மாபெருங் கவிஞன். இவர்கள் இயற்றிய கவிதைகட்குத் தத்துவம் உண்டு. இக்கவிதைகளைப் படிப்பவர்கள் அக் கவிஞர்கள் உணர்த்தும் உண்மையில் ஓரளவாவது ஈடுபடுவர் என்பது ஒருதலை. கவிதையின் தத்துவத்தில் கவிதையின் இலக்கணம், கற்பனை, சொல் வளம், ஒலிநயம், யாப்பு முறை, அணிநலன், தொடை நயம், சுவைகள், கவிதை கூறும் உண்மை போன்றவை அடங்கும். இவற்றுள் ஒரு சிலவற்றை ஈண்டுச் சிறிது விளக்குவோம்.

கற்பனை கவிதையின் இன்றியமையாத கூறு. இயற்கையைப் பாடும் கவிஞர்களும் உள்ளதை உள்ளவாறு பாடுவதில்லை. தாங்கள் விரும்புமாறு சிலவற்றைக் கூட்டியும் சிலவற்றைக் குறைத்துமே பாடுகின்றனர். இதனால்தான் அவர்களுடைய கவிதை கலைப்பண்புடன் அழியா வாழ்வு பெறுகின்றது. இந்த அடிப்படையில் கவிஞன் தான் காணும் உலகைவிடச் சிறந்ததோர் உலகினையே படைத்து விடுகின்றான். சங்க காலத்துப் புலவர் அம்மூவனார் கடற்கரையருகே உள்ள நாவல் மரத்தருகில் பலவற்றைக் காண்கின்றார். கருநிற நாவற்பழங்கள் மரத்தின் கீழே உதிர்ந்து கிடக்கின்றன; மரத்தருகே கருநிற வண்டுகள் அங்குமிங்கும் பறந்து செல்லுகின்றன. நிலத்தில் விழும் பழங்களை ஞெண்டுகள் ஓடிச் சென்று தின்கின்றன. நாரைகள் அற்றம் பார்த்திருந்து ஞெண்டுகளைப் பற்றி உண்கின்றன. இக் காட்சிகள் அனைத்தையும், இன்னும் பலவற்றையும் கவிஞர் காண்கின்றார். ஆனால், அவற்றுள் சிலவற்றை மட்டிலும் தேர்ந்தெடுத்துத் தம் உள்ளம் விழையுமாறு ஒரு கற்பனை நாடகம் நடத்துகின்றார். நீர் வாழ் ஞெண்டு ஒரு நாவற்பழத்தைப் பற்றி இழுத்துச் செல்லுகின்றது. அருகே பறந்துகொண்டிருக்கும் வண்டுகள் அக்

கனியைத் தம் இனமாகிய ஒரு வண்டு என நினைத்து அதனை ஞெண்டின் பிடிப்பினின்றும் விடுவிக்கக் கருதி அதனைச் சூழ்ந்து பேரிரைச்சலுடன் பறக்கின்றன. இவ் விரைச்சல் அருகில் உணவினை நாடி அற்றம் பார்த்திருக்கும் நாரையின் செவியிற் படுகின்றது. அஃது உடனே ஞெண்டினைப் பற்றிச் செல்லுகின்றது. நாரையின் வருகையை உணர்ந்த ஞெண்டு நாவற் கனியை விட்டு ஓடிவிடுகின்றது. இதனைக் கவிஞர்,

பொங்குதிரை பொருத வார்மணல் அடைகரைப்
புன்கால் நாவல் பொதிப்புற இருங்கனி
கிளைசெத்து மொய்த்த தும்பி பழஞ்செத்துப்
பல்கால் அலவன் கொண்டகோட் கூர்ந்து
கொள்ளா நரம்பின் இமிரும் பூசல்
இரைசேர் நாரை எய்தி விடுக்கும்
துறை கெழு மாந்தை அன்ன,[8]

[திரை—அலை; புன்கால்—மெல்லிய காம்பு; இருங்கனி—கரியகனி; செத்து—கருதி; தும்பி—வண்டு; அலவன்—ஞெண்டு; பூசல்—ஒலி.]

என்று வருணிக்கின்றார். நாவல் மரத்தருகில் தாம் கண்ட காட்சிகளனைத்தினையும் கவிஞர் கூறியிருப்பாராயின், கற்பனை இவ்வாறு சிறந்திருக்காது. தம் உள்ளம் விழைந்த காட்சிக்கு வேண்டாதவற்றை விட்டு, வேண்டிய சிலவற்றைத் தருவித்துக் கூட்டி ஓர் அழகிய கற்பனையை அமைத்து விடுகின்றார் கவிஞர்.

கவிதைகளில் இடத்திற்கேற்பச், செய்யுளின் நடைக்கேற்பச் சொற்கள் யாதொரு தட்டுத் தடையுமின்றி விரைந்து வந்து உதவும் நிலையே சொல்வளம் (diction)

8 நற்றிணை—35

என்பது. இலக்கிய வழக்கிலும் உலக வழக்கிலும் உள்ள எல்லாச் சொற்களுக்கும் உயிர் உண்டு; வாழ்க்கை உண்டு; வாழ்க்கை வரலாறும் உண்டு. பண்டைய இலக்கியங்களில் நிரம்பப் பயிற்சியும் தன் காலத்து வழங்கும் மொழிபற்றிய மிக்க ஆழ்ந்த அனுபவமும், தன் ஆன்மாவுடன் ஒன்றிக் கலந்து விட்ட தமிழ் உணர்ச்சியும் இருக்கும் கவிஞனுக்குத்தான் சொற்களின் உயிர்த் தத்துவம் நன்கு புலப்படும். இத்தகைய கவிஞனிடம்தான் அவன் நினைத்தவுடன் வேண்டும்பொழுது சொற்கள் அவனது மனக்கண்முன் தோன்றித் தம்மைத் தாமே அளித்து ஏவல் கேட்டு நிற்கும். சொல்லாட்சியின் தத்துவத்தை மகா கவி கம்பனிடம் பல கோணங்களில் காணலாம். உணர்ச்சிக்கேற்ற குழைவான சொற்களையும் கொஞ்சும் சொற்களையும் இக்காலக் கவிஞர் பாரதியின் பாடல்களில் கண்டு மகிழலாம்.

காதலனைக் காதலி பின்னே வந்து நின்று கண் மறைக்கின்றாள்.

'சிரித்த ஒலியி லவள் கைவிலக்கியே
    திருமித் தழுவி' என்ன செய்திசொல் லென்றேன்;
'நெரித்த திரைக்கடலில் என்ன கண்டிட்டாய்?
    நீல விசும்பினிடை என்ன கண்டிட்டாய்?
திரித்த நுரையினிடை என்ன கண்டிட்டாய்?
    சின்னக் குமிழிகளில் என்ன கண்டிட்டாய்?
பிரித்துப் பிரித்துநித மேக மளந்தே,
    பெற்ற நலங்களென்ன? பேசுதி' என்றாள்.

'நெரித்த திரைக்கடலில் நின்முகங் கண்டேன்;
    நீல விசும்பினிடை நின்முகங் கண்டேன்;
திரித்த நுரையினிடை நின்முகங் கண்டேன்;
    சின்னக் குமிழிகளில் நின்முகங் கண்டேன்;

பிரித்துப் பிரித்துநிதம் மேக மளந்தே,
 பெற்றதன் முகமன்றிப் பிரிதொன் றில்லை;
சிரித்த ஒலியினிலும் கைவி லக்கியே
 திருமித் தழுவியதில் நின்முகங் கண்டேன்”[9]

என்ற பாரதியின் பாடல்களில் அன்புணர்ச்சி கலந்த காதலன்-காதலிப் பேச்சினைக் காண்க. இவற்றில் வந்த சொற்களே திரும்பத் திரும்ப வந்தாலும், அவை சொல்வித்தை போன்றோ அல்லது விளையாட்டாகவோ இராமல் விழுமிய உணர்ச்சி மேன்மேலும் சிறந்து பொலிவதை உணர்க. மேலும்,

பிள்ளைக் கனியமுதே—கண்ணம்மா
 பேசும்பொற் சித்திரமே
அள்ளி யணைந்திடவே—என்முன்னே
 ஆடி வருந்தேனே.

கன்னத்தில் முத்தமிட்டால்—உள்ளந்தான்
 கள்வெறி கொள்ளுதடி.
உன்னைத் தழுவிடிலோ—கண்ணம்மா
 உன்மத்த மாகுதடி

சொல்லு மழலையிலே—கண்ணம்மா
 துன்பங்கள் தீர்ந்திடுவாய்
முல்லைச் சிரிப்பாலே—எனது
 மூர்க்கந் தவிர்த்திடுவாய்.

இன்பக் கதைகளெல்லாம்—உன்னைப்போல்
 ஏடுகள் சொல்வதுண்டோ?
அன்பு தருவதிலே—உனைநேர்
 ஆகுமோர் தெய்வமுண்டோ?

மார்பி லணிவதற்கே—உன்னைப்போல்
 வைர மணிகளுண்டோ?
சீர்பெற்று வாழ்வதற்கே—உன்னைப்போல்
 செல்வம் பிறிதுமுண்டோ?[10]

9. பாரதி: கண்ணம்மா-என்காதலி. 10 பாரதி: கண்ணம்மா-என்குழந்தை

என்ற பாடல்களில் குழைவான சொற்களும் ஒலிகளும் வருவதைக் காண்க.

அச்சுவடிவத்தில் காணும் பாட்டு அரையுயிரோடு தான் உள்ளது. அதைப் பாடிய கவிஞர் இப்பொழுது நம்மிடையே இல்லை. அவர்தம் பாட்டில் தம்முடைய முகக் குறிப்பையும், கையசைவுகளையும் விட்டுச் செல்ல வில்லை; அங்ஙனம் விட்டுச் செல்லவும் இயலாது. ஆனால் ஒலிநயம், மோனை, எதுகைபோன்ற கூறுகளடங்கிய யாப்பு முதலியவற்றை அவற்றின் சாயல்களாக விட்டுச் சென்றுள்ளார். கவிஞருடைய உணர்ச்சியை நாம் பெற வேண்டுமாயின், அச்சுவடிவத்தில் காணும் அவருடைய சொற்களிலிருந்து மட்டிலும் பெறுதல் இயலாது. அச்சு வடிவத்தில் காணும் அவரது பாடல் 'புகைப்பட நெகட்டிவ்' போன்றது; நெகட்டிவிலிருந்து படத்தைத் தெளிவாகக் காண இயலாது. படத்திலுள்ள பொருள் களின் சாயல்களே அதில் இருக்கும். தக்க துணைப் பொருள்களைக்கொண்டு அத்த நெகட்டிவ்விலிருந்து படத்தை அச்சிட்டால்தான் பொருள்களின் படம் தெளி வாகப் புலனாகும். அங்ஙனமே, கவிதையைப் பாடிய கவிஞன் விட்டுச்சென்ற சாயல்களிலிருந்து படிப்பவர், பாட்டை யாத்தவரின் உணர்ச்சியை உண்டாக்குதல் வேண்டும். அங்ஙனம் உண்டாக்குவதற்கு மேற்கொள்ளப்பெறும் முயற்சி நெறியோடு அமைந்தால் விரும்பிய பயன் கிடைக்கும். இராமாயணம், பாரதம் பெரிய புராணம் போன்ற காவியங்களைத் தலைமுறைத் தலைமுறையாகப் படித்து மக்கள் ஒரேவகையான உணர்ச்சியைப் பெற்று வருவதை இதற்குச் சான்றாகக் கொள்ளலாம்.

இளவேனிற் காலத்தில் திரும்பி வருவதாகக் கூறித் தலைவன் தலைவியைப் பிரிந்து சென்றான். இளவேனிற்

காலம் வந்துவிடுகின்றது. தலைவன் வரவில்லை. இந்த நிலையில் தலைவி தலைவனை நினைந்து நினைந்து ஏங்குகின்ருள். "வேம்பின் ஒள்ளிய மலர்கள் பூத்து நிற்கின்றன. என் தலைவர் இங்கில்லாமையால் நான் அப் பூக்களைச் சூடாமல் ஒழிவதோ? யாற்றின் அருகில் ஓங்கிய வெள்ளிய கொம்புகளையுடைய அத்தியில் பழுத்த ஒரு பழத்தை ஏழு நண்டுகள் பற்றுங்கால் அது குழைந்து நிற்பது போல, யான் குழைந்து நிற்கின்றேன். ஆனுல், அவர் மிகக்கொடியவர் எனக்கூறும் தோழியர் முதலானோரின் நாக்கள் குழைவின்றிக் கல்லென வாயின" என்கின்ருள்.

கருங்கால் வேம்பின் ஒண்பூ யாணர்
என்னை யின்றியும் கழிவது கொல்லோ?
ஆற்றயல் எழுந்த வெண்கோட் டதவத்து
எழுகுளிர் மிதித்த ஒருபழம் போலக்
குழையக் கொடியோர் நாவே
காதலர் அகலக் கல்லென் றவ்வே."

[கருங்கால்-கரியகாம்பு; ஒண்பூ-ஒள்ளியபூ; யாணர்-புதுவருவாய்; அயல்-பக்கம்; கோடு-கிளை; அதவம்-அத்தி; குளிர்-நண்டு; கல்லென்றவ்வே-அலர்தூற்றி ஆரவாரித்தன.]

என்ற பாடலைப் படிக்குங்கால் மேலேயுள்ள உரை நடையைப் படித்து உணர்வதைப் போல் தலைவியின் உணர்ச்சியை உணர முடிவதில்லை. ஆனுல், பாட்டைத் திரும்பத் திரும்பச் சில முறை படித்தால் தலைவியின் உணர்ச்சியை ஓரளவு ஒருவாறு பெற முடிகின்றது. இப் பாட்டிலுள்ள ஒண்பூ, யாணர், வெண்கோட்டதவம், எழுகுளிர், கல்லென்ற போன்ற சொற்களும் சொற்றொடர்களும் இன்றைய தமிழ் வழக்கிலில்லாதவை.

11 குறுந்-24.

எனவே, தலைவியின் உணர்ச்சியை நாம் நன்கு பெற முடிகின்றதில்லை. தவிர, இப் பாடல் ஒலிநயம் குறைந்த ஆசிரியப்பாவில் அமைந்திருப்பதும் உணர்ச்சியை உணர்வதற்கு ஓரளவு தடையாகவே உள்ளது என்றும் கூறலாம்.

மேற்கூறிய தலைவியின் உணர்ச்சியை ஒலிநயம் மிக்க விருத்தப்பாவில் அமைத்தால் அவ்வுணர்ச்சியை எளிதாகப் பெற முடிகின்றது; அதுவும் இன்றைய வழக்கிலுள்ள சொற்களில் அமைந்து விட்டால், அறிதல் பின்னும் எளிதாகின்றது. அங்ஙனம் அமைக்கப் பெற்ற இந்தப் பாடலைப் பாருங்கள்:

மலர்ச்சூழல் அமர்ந்தினிய
வண்டார்க்கும் காலம்;
வரிக்குயில்கள் மாவில்இளந்
தளிர்கோதும் காலம்;
சிலர்க்கெல்லாம் செழுந்தென்றல்
அமுதளிக்கும் காலம்;
தீவினையேற்கு அத்தென்றல்
தீவீசும் காலம்;
பலர்க்கெல்லாம் கோன்நந்தி
பன்மாடக் கச்சிப்;
பனிக்கண்ணூர் பருமுத்தம்
பார்த்தாடும் காலம்;
அலர்க்கெல்லாம் ஐங்கணைவேள்
அலர்தூற்றும் காலம்;
அகன்றுபோ னவர்நம்மை
அயர்ந்துவிட்ட காலம்.[12]

இந்தப் பாடலை இசையுடன் படிக்குங்கால் அது நம் உள்ளத்தைக் கவர்ந்து விடுகின்றது; தலைவியின்

12 நந்திக் கலம்பகம்-60

உணர்ச்சியை நாம் நன்கு பெறுகின்றோம். மேற்காட்டிய இரண்டு பாடல்களிலும் உள்ள உணர்ச்சி ஒரு தன்மைத் தாயினும் அதைப் புலப்படுத்தும் பாட்டின் ஒலிநயமும் யாப்பும் வேறு பட்டவை. முன்னதில் அமைந்துள்ள ஒலிநயமும் யாப்பும் கவிஞனின் உணர்ச்சியை நாம் பெறுவதற்குப் போதுமானவையாக இல்லை; பின்னதில் அவை போதுமானவையாக அமைந்துள்ளன.

அணிகளும் கவிதைகளை அழகு செய்வதுடன் கவிதையனுபவத்திற்குத் துணை செய்கின்றன. உவமை, உருவகம், உயர்வுநவிற்சி, வேற்றுப்பொருள் வைப்பு, தற்குறிப் பேற்றம் போன்ற அணிகள் மிகவும் குறிப் பிடத்தக்கவை. ஒருபொருளை மொட்டையாகச் சொல்லு வதைவிட அழகாகச் சொல்லுவது கேட்போருக்கு இன்பம் பயக்கும் அல்லவா? இரண்டு அணிகளைக் கொண்டு இக் கருத்தினை விளக்குவோம். சேதுகட்டு வதற்குக் குரங்குகள் மலைகளை வேருடன் பறித்துக் கொண்டு வருகின்றன. நளன் என்ற வானர தச்சன் மலைகளை வாங்கி வரிசைப்பட அமைக்கின்றான். அங்ஙனம் அமைத்திடுங்கால் பல நிகழ்ச்சிகள் நடை பெறுகின்றன. மரங்களோடு பொருந்திய வானுற வோங்கிய மலைகள் தாம் கடலில் வீழ்ந்தாலும் தம்மிடத் தேயுள்ள நறுங்கனிகள், காய்கள், தேன், ஊன், பூக்கள் முதலியவற்றை மீன்கள் உண்ணும்படி பொலியச் செய்தன என ஒரு நிகழ்ச்சியைக் கூறவந்த கம்ப நாடன் பெரியோர்கள் அடியோடு அழிந்தாலும் தம்முடைய வண்மைக் குணத்தை யொழிவார்களோ? என்று முடித்துக் காட்டுகின்றான்.

**தேமுதற் கனியும் காயும்**
**தேனினோடு ஊனும் தெய்வப்**

பூமுத லாய எல்லாம்
மீன்கொளப் பொலிந்த அன்றே
மாமுதல் தருவோடு ஒக்கும்
வானுயர் மானக் குன்றம்
தாமுத லோடுங் கெட்டால்
ஒழிவரோ வண்மை தக்கோர்?[13]

என்பது மேற்குறிப்பிட்ட நிகழ்ச்சியைக் கூறும் கவிதை. ஒரு பொருளின் திறந்தொடங்கிப் பின்னர் அது முடிதற்கு வலியுடைய பிறிதொரு பொருளை உலகறி பெற்றியான் வைத்து மொழிவதை 'வேற்றுப் பொருள் வைப்பணி' என்று குறிப்பர் இலக்கண நூலார். இந்தப் பாடலில் 'பழம், காய் முதலியவை மீனுக்கு உணவாதல்' சிறப்புப் பொருள். 'பெரியோர்கள் அடியோடு அழிந்தாலும் தம் வண்மைக் குணத்தில் ஒழியார்' என்பது பொதுப்பொருள். கவிஞன் சிறப்புப் பொருளைப் பொதுப் பொருளால் வைத்து முடிக்கின்றான்.

இன்னொரு எடுத்துக்காட்டு: வாலி தன்மீது பாய்ந்த அம்பைப் பிடுங்கி அதில் பொறித்துள்ள 'இராமன்' என்ற பெயரைக் காண்கின்றான். இல்லறந் துறந்த நம்பி தங்கள் பொருட்டு வில்லறத்தையும் துறந்தனனே என்று நகைத்து நாணத்துடன் நிற்கும் வாலியின் முன்னர் இராமன் வருகின்றான்.

கண்ணுற்றான் வாலி நீலக்
கார்முகில் கமலம் பூத்து
மண்ணுற்று வரிவில் ஏந்தி
வருவதே போலும் மாலை[14]

என்று வாலி இராமனைக் கண்டதைக் கூறுகின்றான். இங்கு இயல்பாக நிகழும் தன்மையில் கவிஞன் தன்

13. யுத்தகா-சேதுபந்தன—18
14. கிட்கிந்தை. வாலிவதை—81

கருத்தினை ஏற்றிக் கூறியுள்ளான். பொருளிகளிடத்து இயல்பாக நிகழும் தன்மையில் கவிஞன் தன் கருத்தினை (குறிப்பினை) ஏற்றிக் கூறுவது தற்குறிப் பேற்ற அணியாகும். இயல்பாக இராமன் வாலிமுன் வருவதைக் கவிஞன், 'வானத்திலுள்ள நீலக் கார்முகில் தன்னிடம் தாமரை மலர் பூத்து நிற்க, கட்டமைந்த வில்லொன்றைக் கையில் ஏந்திக்கொண்டு வரும் திருமால்' என்று தன்னுடைய கருத்தினை ஏற்றிக் கூறியிருப்பதைக் காண்க. அணிகள் கவிதையனுபவத் திற்குத் துணை செய்வதை அறிந்து மகிழ்க.

தொடைவகை என்பது எழுத்துச் சொற்பொருள் களை எதிரெதிர் நிறுத்தித் தொடுக்கப்பெறுவனவாகிய தொடை விகற்பம். இவை பூத்தொடை போலச் செய் யுட்குப் பொலிவு செய்வனவாகலின், தொடை என்பது மாலையைக் குறிக்கும்.

> காதலியைக் காரிருளிற் கானகத்தே கைவிட்ட
> பாதகனைப் பார்க்கப் படாதென்றோ—நாதம்
> அளிக்கின்ற ஆழிவாய் ஆங்கலவ! ஓடி
> ஒளிக்கின்ற தென்னோ உரை.[15]
>
> [அலவன்—நண்டு]

கார்க்கோடகனை விட்டுப் பிரிந்த நளன் ஒரு நண்டினைப் பார்த்துக் கூறுவதாக அமைந்தது இப்பாடல். முதலடி யில் நான்கு சீர்களிலும் மோனை அமைந்துள்ளதால் இது முற்றுமோனைத் தொடையாகும். இரண்டாவது அடியிலும் மூன்று சீர்களில் மோனை அமைந்துள்ளது.

> முந்தூர்வெம் பணிக்கொடியோன் மூதூரின்
> நடந்துழவர் முன்றில் தோறும்

15 நளவெண்பா-340

நந்தூரும் புனல்நாட்டின் திறம்வேண்டு;
நாடொன்றும் நல்கா னாகில்
ஐந்தூர்வேண் டவையிலெனில் ஐந்திலம்வேண்
டவைமறுத்தால் அடுபோர் வேண்டு;
சிந்தூரத் திலகநுதற் சிந்துரத்தின்
மருப்பொசித்த செங்கண் மாலே.[16]

[நந்து-நத்தை; சிந்தூரம்-ஒரு வகைப் பொடி; திலகம்-பொட்டு; சிந்துரம்-யானை; மருப்பு-தந்தம்]

இப் பாடலிலுள்ள பல்வேறு மோனை எதுகைத் தொடைகள் பாட்டின் ஒலிநயத்திற்குத் துணைசெய்வதுடன் பாட்டின் சுவையையும் மிகுவித்துப் படிப்போரிடம் உயர்ந்த பாட்டனுபவம் தோன்றுமாறு செய்தலை அறிக.

கவிதையைக் கனிவித்துப் படிப்போருக்கு இன்பத்தை அளிப்பது அதில் பொதிந்துள்ள உணர்ச்சி. அவ் வுணர்ச்சியால் உள்ளம் பூரிக்கும் பொழுது பொங்கி வரும் இன்பமே சுவை யாகும். சுவை என்பது நாடகத்திலும் காப்பியத்திலும் வெளிப்படுவது. அஃதாவது, "காணப்படு பொருளாற் காண்போரகத்தின் வருவதோர் விகாரம்" என்பர் இளம்பூரணர். தொல் காப்பியர் சுவைகளை நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என்று எண்வகையாகப் பாகுபடுத்திக் கூறுவர். இவை ஒவ்வொன்றும் தத்தம் தோற்றத்திற்குக் காரணமாக அகத்தே தோன்றும் சுவைப் பொருளுக்கேற்பப் புறத்தே நான்கு வகைப்பட நிகழும் என்று அவற்றின் நுட்பத்தினையும் புலப்படுத்தியுள்ளார். எடுத்துக்காட்டாக அழுகை என்னும் சுவை இழிவு, இழவு, அசைவு, வறுமை என நான்குபற்றித் தோன்றும். இழிவு என்பது

16. வில்லி பாரதம்-கிருட்டினன்தூது-11

பிறரால் இகழப்பட்டு எளியராதல். இழவு என்பது தந்ைதைதாய் முதலிய சுற்றத்தாரையும், இன்பம் பயக்கும் நுகர்ச்சி முதலியவற்றையும் இழத்தல். அசைவு என்பது முன்னைய நல்ல நிலைமை கெட்டு வேறுபட்டு வருந்துதல். வறுமை என்பது போகந் துய்க்கப்பெருத பற்றுள்ளம். இவை நான்கும் தன்கண் தோன்றினும் பிறர்கண் தோன்றினும் அழுகையாம். தன்கண் தோன்றிய இழிவு பற்றிப் பிறக்கும் அவலத்தை அழுகை என்றும், பிறர் கண் தோன்றிய இழிவுபற்றிப் பிறக்கும் அவலத்தைக் கருணம் என்றும் கூறுவர் *பேராசிரியர்*.

உரன் நெரிந்து விழஎன்னை
யுதைத்துருட்டி மூக்கரிந்த
நரன் இருந்து தோள்பார்க்க
நான்கிடந்து புலம்புவதோ?
கரன்இருந்த வனம் அன்றோ?
இவைபடவும் கடவேனோ?
அரன்இருந்த மலை எடுத்த
அண்ணவோ! அண்ணவோ![17]

என்ற பாடலில் தன்கண் தோன்றிய அவலம் காண்க. சூர்ப்பணகையின் நிலையைக் கண்டு அவனது நிலைக்கு ஒருவர் இரங்குவதாக ஒரு பாடலை அமைத்தால் அது பிறன்கண் தோன்றிய அவலமாகும். கவிதையின் பல கூறுகளுள் சுவை மிகவும் நுட்பமானது; கவிதையின் உயிர்நாடியும் அதுவே. கவிதையனுபவம் ஏற்படுவ தற்கு இது மிகவும் இன்றியமையாதது.

தமிழ்க் கவிதைகளைப் பொறுத்தமட்டிலும் கவிதை யுண்மைதான் கவிதைக்கு ஓர் உயர்ந்த தரத்தை நல்குகின்றது. கவிஞன் கூறும் உண்மை நாம் உலகில்

17-ஆரணிய-சூர்ப்பணகைப்-109

காணும் உண்மையைப் போன்றதன்று; அவன் கூறும் உண்மை எப்படி யிருக்கவேண்டும் என்பதை உரைப்பது. பெரும்பாலும் ஊழின் வலியை ஆங்காங்கு எடுத்துரைக்கும் தமிழ்க் கவிதைகள் படிப்போரது உள்ளத்தையே உருக்கிவிடும்; உயர்ந்த கவிதை யனுபவமும் ஏற்படச் செய்துவிடும்.

ஓரஞ்சு பேருளால், அறந்த வாத
உதிட்டரனு தியருரகக் கொடியோன் ஆதி
ஈரஞ்சு பதின்மருளர் தம்பி மார்கள்
இங்கிதங்கள் அறிந்திடையே ஏவல் செய்யப்
பாரஞ்சும் ஒருகுடைக்கீழ் நீயே ஆளும்
பதமடைந்தும் விதிவலியால் பயன்பெ ருமல்
காரஞ்சு கரதலத்தாய்! அந்தோ, அந்தோ
கடவுளர்தம் மாயையினுல் கழிவுற் ருயே.[18]

[உரகம்-பாம்பு; கார்-மேகம்; கரதலம்-கை.]

திருமாலின் 'தரிசனம்' பெற்ற கன்னன் தேர்மேல் இருக்கின்ருன். வைகத்து மன்னரெல்லாம் அவனைப் புடை சூழ இருக்கின்றனர். குருடன் மகன் அருகிருந்து சோகங் கூர்கின்ருன். அன்று மாலைக்குள் கொடையான் மிக்கோன் இறந்துபடுவதாக அசரீரி உரைக்கின்றது. இந்நிலையில் குந்தி தன் உளமுருகக் கண்ணீர் சோரக் குழல்சரியக் கோகோவென்று ஓடிவந்து கன்னன் மீது விழுந்து அழுகின்ருள். மேற்காட்டிய பாடல் அவள் புலம்பலை எடுத்துரைப்பது. 'பாரஞ்சும் ஒரு குடைக்கீழ் நீயே யாளும் பதமடைந்தும்' என்ற தொடர் கன்னனது உயர்ந்த குடிவழிநிலையைக் காட்டுகின்றது. அவன் பிறப்பு சரியான காலத்தில் ஏற்பட்டிருக்குமாயின் இந்த அவனியெலாம் புரக்கும் அதிபனுக விளங்கி யிருப்பான்; சிறந்த தம்பியர்கள் யாவரும் (ஐவரும் நூற்றுவரும்) அவன் ஏவல் கேட்டு நிற்பர். 'விதி

18. வில்லிபாரதம்—பதினேழாம்போர் -256

வலியால் பயன் பெருமல்' என்ற தொடர் குந்தியின் ஊழ் உணர்ச்சியைக் காட்டுகின்றது; அஃது அவளது ஏக்கத்தையும் புலப்படுத்துகின்றது. இத் தொடரே இக் கவிதையின் தரத்தையும் பன்மடங்கு உயர்த்தி விடுகின்றது. படிப்போரின் கவிதையனுபவத்திற்கு ஒரு முத்தாய்ப்பு வைப்பதும் இத் தொடரேயாகும்.

வாழ்க்கை என்பது நிலைபேறுடையது; மானிட இனம் இவ் வுலகில் உள்ளவரைத் தொடர்ந்து நடைபெறுவது. வாழ்க்கையில் இன்பமும் உள்ளது; துன்பமும் நிறைந்திருக்கின்றது. அதில் அல்லல்களும் தொல்லைகளும் காணப்பெறுகின்றன. ஆன்மாவைக் கொல்லும் பாவம் என்ற புற்றுநோய் அங்கு உண்டு; ஆழங்காணமுடியாத காதல் அங்கு காணப்படும். வாழ்வை வளமாக்கும் நம்பிக்கை, புகழ் மணக்கச் செய்யும் துணிச்சல் போன்ற பண்புகள் அதில் இடம் பெறும். இத்தனையும் பல படலங்கள்போல் கவிழ்ந்துள்ள வாழ்க்கை நம்மைக் கவர்கின்றது; ஆனால் அஃது ஒன்று மட்டிலும் நமக்கு மன நிறைவினைத் தருவதில்லை. இத் தகைய வாழ்க்கையைப்பற்றிய உண்மையைக் கவிதை எடுத்துரைக்குங்கால் நாம் மன நிறைவு கொள்ளுகின்றோம். இதனால்தான் ஆங்கிலத் திறனாய்வாளர் **மாத்யூ ஆர்னேல்டு** என்பார் 'வாழ்க்கையின் திறனாய்வே கவிதையாகும்' என்றார். துன்பக் கடல்போன்ற இவ் வுலகில் 'மம்மர் அறுக்கும் மருந்தாக' நின்று இன்பம் பயக்கவல்ல கவிதையை நாம் கவனிக்காவிட்டால், நமக்கு உலகில் ஆறுதல் அளிக்கக்கூடிய பொருளே இல்லையென்றாகிவிடும். கவிதையனுபவம் அவலக் கவலைகளையெல்லாம் மறக்கச் செய்யும் மாமலையிலுள்ள மருந்து போன்றது என்பதை நாம் என்றும் நினைவிலிருத்த வேண்டும்.

# 5. கவிதையும் கற்பனையும்*

ஏதோ ஒருவகையான உண்மையை அடிப்படையாகக்கொண்டு செஞ்சொற்களால் உள்ளங் கவரும் முறையில் உயர்ந்த கவிதையை உண்டாக்குபவனே கவிஞன். இளங்கோ ஒரு கவிஞன்; கம்பன் ஒரு கவிஞன்; சேக்கிழார் ஒரு கவிஞர். உலகிற்கே மாபெரும் உண்மைகளை உணர்த்திய வள்ளுவன் ஒரு மாபெருங் கவிஞன். இவர்கள் இயற்றிய கவிதைகட்குத் தத்துவம் உண்டு. கவிஞன் தான் பெற்ற உணர்ச்சிகளைத் தன் கவிதைகளைப் படிப்போரும் பெறவேண்டும் என்று எண்ணிச் சில யுக்திமுறைகளைக் கையாண்டு கவிதையைப் படைக்கின்றான். அந்த யுக்தி முறைகளால்தான் உணர்ச்சியை அதில் பொதிய வைக்கின்றான். உள்ளத்திலுள்ள அவற்றை உணர்ச்சி பொங்கத் தெள்ளத் தெளிந்த சொற்களால் எடுத்துரைப்பதுதான் கவிதையாகும். கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளையும்,

'உள்ளத் துள்ளது கவிதை—இன்பம்
உருவெ டுப்பது கவிதை
தெள்ளத் தெளிந்த தமிழில்
தெளிந்து ரைப்பது கவிதை'[1]

---

* தினமணி புத்தாண்டு மலரில் (1962) வெளிவந்தது.

1. மலரும் மாலையும்—கவிதை 7

என்று கவிதை இன்ன தென்பதைக் காட்டியுள்ளார். கவிதை சிறப்பது அதனைப் படைக்கும் கவிஞனின் அனுபவத்தைப் பொறுத்தது; அவன் அவ் வனுபவத் தைக் கூறும் முறையினையும் பொறுத்தது.

'ஆங்கத் தனிப்பதர்ச் செய்திகள்
அனைத்தையும் பயன்நிறை அனுபவ மாக்கி
உயிரிலாச் செய்திகட்கு உயிர்மிகக் கொடுத்து
ஒளியிலாச் செய்திகட்கு ஒளியருள் புரிந்து
வான சாத்திரம் மகம்மது வீழ்ச்சி
சின்னப் பையல் சேவகத் திறமை:
எனவரும் நிகழ்ச்சி யாவே யாயினும்
அனைத்தையும் ஆங்கே அழகுறச் செய்து
இலௌகிக வாழ்க்கையில் பொருளினை இணைக்கும்
பேதைமா சத்தியின் பெண்ணே! வாழ்க'' [2]

என்ற பாரதியாரின் 'கவிதைத் தலைவி'யைப்பற்றிய பாடல் இக்கருத்தினை நன்கு விளக்குவதாகும்.

நம்மிடம் உணர்ச்சி இருப்பதாலும், அவ் வுணர்ச்சி யைப் பிறருக்கு உணர்த்தும் திறனை நாம் பெற்றிருப்ப தாலும் நாமும் ஓரளவு கவிஞன் நிலையில்தா னிருக் கின்றோம். ஆனல், கவிஞர்கள் என்று நாம் போற்று பவர்களிடம் இவ்வுணர்ச்சி அதிகமாக இருக்கின்றது; தாம் உணர்ந்தவற்றை மிக நன்ருக, பிறரிடமும் அவ்வுணர்ச்சி கிளர்ந்தெழச் செய்யும் வகையில், வெளி யிடக் கூடிய வன்மையுள்ளவர்களாகவும் உள்ளனர். சுருங்கக் கூறின், அவர்களுடைய புலன்கள் எண்ணற் றவை; மிகக் கூர்மையானவை. அவர்களுடைய குரல் களும் சாதாரண மக்களுடைய குரல்களைவிட மிக அகன்றவை. நாமெல்லோரும் ஓர் அரைக் குருடனைப்

2 பாரதியார் பாடல்கள்- கவிதைத் தலைவி.

போல் ஒளியைக் காண்கின்றோம்; மலை, முகில் அல்லது மலரின் அழகினைப் பார்க்கின்றோம். ஆனால், அவற்றைக் கவிஞன் ஒளிவீசும் அழகுடன் பொலிவதைக் காண்கின்றான்; அப் பொலிவு அவன் உள்ளத்தைக் கவர்ந்து களிப்பால் அவனைக் கூத்தாடச் செய்கின்றது; திரும்பவும் அப்பொருளை அக்கறையாகப் பார்க்க நம்மைத் தூண்டுகின்றது. இன்னும் நாம் ஓர் அருவியின் இசையின் எதிரொலியை அரைச் செவிடன்போல்தான் கேட்க முடிகின்றது. ஆனால், கவிஞன் அதன் முழு இசையினிமையையும் நுகர்ந்து நம்மையும் அதனைக்கவனமாக நோக்கி அதனைப் பெறச் செய்கின்றான். தொலைவிலுள்ள உடுக்கள், கோள்கள் ஆகியவற்றின் இசையையும் கேட்டு நமக்கு உணர்த்த வல்லவன் கவிஞன். இயற்கையின் சூக்குமமான இசைகளையும் அவன் கூரிய காதுகளால் கேட்கமுடிகின்றது. அறிவியலறிஞனும் காண முடியாத வாழ்க்கையுண்மைகளும் அற்புத நிகழ்ச்சிகளும் கவிஞனுக்குப் புலனாகின்றன. நம்மில் பலர் இவ்வுலகிலுள்ள எண்ணற்ற அழகின் பங்களைக் கண்டும் கேட்டும் நுகர இயலாதவர்களாய்க் காலங் கழிக்கின்றனர். பலர் கண்ணிருந்தும் காணமல், காதிருந்தும் கேளாமல், அழகின்பத்தைப் பொறுத்தவரையில் குருடர்களாய்ச் செவிடர்களாய் வாழ்கின்றனர். அந்த அழகின்பத்தைக் கண்டு அனுபவித்த பாரதி,

எத்தனைகோடி இன்பம் வைத்தாய்—எங்கள்
இறைவா! இறைவா! இறைவா!
சித்தினை அசித்துடன் இணைத்தாய்—அங்குச்
சேரும் ஐம்பூதத்து வியனுலகு அமைத்தாய்
அத்தனை உலகமும் வண்ணக் களஞ்சியம்
ஆகப் பலப்பலநல் அழகுகள் சமைத்தாய்.[3]

3. பாரதியாரின் பாடல்கள்—இறைவா! இறைவா.

என்று கூறிக் களிக்கின்றான். கவிஞனின் புலன்காட்சி (perception) நம்முடையதைவிடக் கூரியதாகவும் தெளிவாகவும் உள்ளது.

கவிதை என்பது காணும் பொருள்களை வருணிப்பதில் இல்லை; அப்பொருள்களைக் காணுங்கால் அவனிடம் எழும் மனநிலையில்தான் அஃது உள்ளது. அந்த மனநிலைக்கு ஒரு வடிவம் கொடுத்து அழகிய சொற்களால் ஓவியமாக அமைப்பதே கவிதையாகும். அக் கவிதையைப் படிக்கும் நம்மிடத்திலும் அதே மன நிலையை உண்டாக்கவல்லது அக் கவிதை. திருக்குற்றால மலைக்கு நாம் எத்தனையோ முறை போயிருக்கின்றோம்; பல இயற்கைக் காட்சிகளில் ஈடுபட்டுத் திளைத்திருக்கின்றோம்; ஒருவகை யனுபவத்தையும் பெற்றிருக்கின்றோம். குமரகுருபர அடிகள் பெற்ற அனுபவம் இது:

சிங்கமும்வெங் களிறுமுடன்
விளையாடும் ஒருபால்;
சினப்புலியும் மடப்பிணையும்
திளைத்திடும்அங் கொருபால்;
வெங்கரடி மரையினொடும்
விளையாடும் ஒருபால்;
விடஅரவும் மடமயிலும்
விருந்தயரும் ஒருபால்[4]

இருப்பதைவிட இருக்கவேண்டியதைக் கூறுகின்றார் கவிஞர்; தாம் விரும்பியவற்றைத் தெரிவிக்கின்றார். கற்பனையில் அவர் காணும் காட்சியை நாம் காணும் பொழுது எல்லையற்ற இன்பத்தில் ஈடுபடுகின்றோம்.

4. மீனாட்சியம்மை குறம்—16

குற்றாலத்தில் தங்கும் பொழுதெல்லாம் தேனருவியைப் பார்க்கின்றோம்; அதன் திரைகள் வானின்வழி ஒழுகுகின்ற வண்ணக் காட்சியையும் காண்கின்றோம். சிலசமயம் "அந்த அருவி இன்னும் உயரத்திலிருந்து விழுந்தால் எவ்வளவு அழகாக இருக்கும்!" என்றும் நினைக்கின்றோம். நம்மைப்போலவே அவாக்கொண்ட கவிஞர் திரிகூட ராசப்பர் தன்னுடைய கவிதைப் படைப்பிலே அந்த அவாவைத் தீர்த்துக் கொள்ளுகின்றார்.

"தேனருவித் திரையெழும்பி
வானின்வழி யொழுகும்
செங்கதிரோன் பரிக்காலும்
தேர்க்காலும் வழுகும்"[5]

இந்தக் கவிதையைப் படிக்கும் நம்முடைய அவாவும் ஓரளவு நிறைவேறி விடுகின்றது. இங்ஙனம் கவிஞர்களின் ஆழ்ந்தகன்ற புலன்காட்சிகள் நம்முடைய புலன் காட்சிகளையும் விரிவடையச் செய்கின்றன; கவிஞர்கள் பெற்ற அனுபவத்தையே நாமும் ஓரளவு பெறுகின்றோம்; அவர்களிடம் உண்டான மகிழ்ச்சியே நம்மிடமும் ஏற்படுகின்றது. அவர்கள் மனநிலையே நம்மிடமும் உண்டாகின்றது.

கற்பனை என்பது கவிஞன் படைப்பில் மேற்கொள்ளப்பெறும் ஓர் இன்றியமையாத கூறு; அவன் கையாளும் யுக்திமுறைகளில் மிகவும் முக்கியமானது. கற்பனை என்பது புலன்கள் நேரே ஒரு பொருளை அனுபவியாத காலத்திலும் அந்தப் பொருளை நினைவிற்குக் கொண்டுவந்து அப்பொருளினிடத்து மீண்டும் அனுபவத்தை ஏற்றவல்ல ஒருவகை ஆற்றலாகும். அது கவிதைகளைக் கனிவித்துக் கற்போரின் மனத்தை

திருக்குற் - குறவஞ்சி-44 (கண்ணி-3)

விரிந்த பார்வையில் செலுத்தவல்லது. கவிதைகளின் பிற பண்புகளுக்கெல்லாம் அடிநிலமாக அமைவது இது தான்; முடியாக இருப்பதுவும் இதுவே. இத்தகைய கற்பனையாற்றலை இன்னது என்று சொற்களால் எல்லை கட்டிக் காட்ட இயலாது. ரஸ்கின் என்ற மேனாட்டு நுண் கலைத் திறனாய்வாளர் "கற்பனையின் தத்துவம் அறிவுக்கு எட்டாதது; சொற்களால் உணர்த்த முடியாதது; அதன் பலன்களை மட்டிலும் கொண்டே அஃது அறியப்பெறுவ தொன்றாகும்" என்று குறிப்பிடுகின்றார்.

கவிஞன் பகுத்தறிவைப் பெரிதாக்காமல் கற்பனையை நம்பி வாழ்பவன். கற்பனை என்பது இல்லாததனை இருப்ப தாகவும், இருப்பதை இல்லாததாகவும் எண்ணும் பொறுப்பற்ற விளையாட்டன்று. உள்ளதை உள்ளவாறு கூறாமல், அதனை உள்ளம் விரும்பி உவகையடையு மாறும், பிறருக்கு நேருவதைத் தனக்கு நேருவதுபோல் உணருமாறும் கூறவல்ல ஆற்றலே—திறமையே—கற் பனையாகும். எனவே, உண்மையுலகிற்கும் கற்பனையுல கிற்கும் நெருங்கிய தொடர்பு இருந்தே தீரும். மக்களும், விலங்குகளும், மரம் செடி கொடிகளும் அடங்கிய உலகைப் புலன்களாலும் உணர்வாலும் காண்பது கவிதையின் முதற்படியாகும்; புதிய உலகினைப் படைப் பது இதன் இறுதிப்படியாகும். உலகத்தை வெறுத்தோ அல்லது மறந்தோ கவிதை உருவாகாது. கவிஞனின் படைப்பு நமது உலகினை யொத்தும் ஒட்டியும்தான் இருக்கும்.

கவிஞன் கற்பனை செய்தல் பகற்கனவு காண்பதை யொத்தது. கனவு காண்பவர்கள் உள்ளதை உள்ளவாறு காண்பதில்லை; உள்ளம் விழையுமாறே காண்கின்றனர். நடந்த நிகழ்ச்சிகள் சிலவற்றின் அடிப்படையின்மேல்

நடக்க வேண்டியவற்றைச் சேர்த்துக் காண்கின்றனர். நடக்க வேண்டியவற்றிலும் தம் உள்ளம் விரும்பும் வகையில் அமைத்துக் காண்கின்றனர். அப்பொழுதுதான் மனம் அக்கனவில் நெடுநேரம் திளைத்து இருக்க முடியும். கவிஞர்கள் படைக்கும் கற்பனையிலும் இதே நிலைதான்.

இயற்கையைப்பாடும் கவிஞர்களும் உள்ளதை உள்ளவாறு பாடுவதில்லை. தாங்கள் விரும்புமாறு சில வற்றைக் கூட்டியும், சிலவற்றைக் குறைத்துமே பாடுகின்றனர். இதனால்தான் அவர்களுடைய கவிதை கலைப் பண்புடன் அழியா வாழ்வு பெறுகின்றது. எனவே, உள்ளவாறு அமையும் கற்பனையில் கவிஞனுக்கு ஆர்வம் இல்லை என்பதையும், உள்ளம் விழையுமாறு அமையும் கற்பனையில் அவனுக்கு ஆர்வம் மிகுதி என்பதையும் அறிகின்றோம். இந்த அடிப்படையில் கவிஞன் தான் காணும் உலகத்தைவிடச் சிறந்ததோர் உலகைப் படைக்க விழைகின்றான். இந்த விழைவே அவனது அகத்தெழுச்சிக்குக் (inspiration) காரணமாக நின்று புதியன படைக்கும் ஆற்றலைப் பெறவும் வாய்ப்பாக அமைகின்றது.

சுனையில் சிறிதளவுதான் நீர் உள்ளது. அதனைப் பருகச் சென்ற ஆண்மானுக்கும் பெண்மானுக்கும் அந் நீர் போதாது. அதனை உணர்ந்த ஆண்மான் தான் குடிக்காமல் ஒதுங்கி நின்று பெண்மானைக் குடிக்குமாறு செய்ய எண்ணுகின்றது. பெண்மானும் அவ்வாறே ஒதுங்கி நிற்கின்றது. இதனையறிந்த ஆண்மான் ஒரு தந்திரம் செய்து பெண்மானைக் குடிக்கவைக்க எண்ணுகின்றது; பெண்மானுடன் நீரருகில் சென்று நீரில் வாயைவைத்து உறிஞ்சுவதுபோல் மூச்சுவிட்டுக் கொண்டிருக்கின்றது. பெண் மானின் நீர்வேட்கை தணிய

வேண்டும் என்பதே ஆண்மானின் கவலை. இதனால்தான் நீரின்றி வருந்தும் அளவுக்குத் தியாகம் செய்கின்றது. இந்த நிகழ்ச்சியைக் கவிஞன்,

சுனைவாய்ச் சிறுநீரை எய்தாதென் றெண்ணிப்
பிணைமான் இனிதுண்ண வேண்டிக்—கலைமாத்தன்
கள்ளத்தின் ஊச்சும் சுரம்என்ப; காதலர்
உள்ளம் படர்ந்த நெறி[6]

என்ற கற்பனை ஓவியமாகத் தருகின்றான். இங்ஙனம் நடைபெறுவது இயலாத தொன்று என்பதைக் கவிஞன் நன்கு அறிவான். ஆயின், அன்பின் காரணமாக ஆண்மான் பெண்மானுக்கு வேறு உதவி களைச் செய்தலை அறிந்த அவனுடைய உள்ளம் இவ்வாறு கற்பனை அமைக்க விழைந்தது. ஓரளவு கவிதை மனப்பான்மையுள்ள நாம் அதனைப் படித்து நன்கு அனுபவிக்கின்றோம். கவிஞனுடைய அனுபவம் நம் அனுபவமாக மாறி விடுகின்றது.

மேற்கூறிய உள்ளம் விரும்பும் கற்பனைக்கு வாழ்க்கை அடிப்படையாக அமைகின்றது. வாழ்க்கை யின் அனுபவமே அத்தகைய கற்பனையைத் தூண்டு கின்றது. துன்பம் உறுங்கால் வருந்துவதும், இன்பம் எய்துங்கால் மகிழ்வதும் எல்லா உயிர்கட்கும் பொது வாக இருப்பினும், மனிதவாழ்வில் மட்டிலுமே பழைய உணர்ச்சிகளின் நினைவுகள் மீண்டும் அத்தகைய அனுபவத்தை உண்டாக்குகின்றன. நேற்று உற்ற துன்பத்தையும் நாளைவரும் துன்பத்தையும் நினைந்து வருந்தும் உள்ளம் மனிதனைத் தவிர எந்த உயிர்க்கும் இல்லை; மனிதனிடம் மட்டிலும் அது நினைவு அளவில்

6. ஐந்திணை ஐம்பது-38

நின்று எல்லாக் காலத்திற்கும் உரியதாகின்றது. மனிதனிடம் அமைந்துள்ள இச்சிறப்பியல்பே கலைத் துறையில் வளர்ந்து கற்பனைத் திறனாக அமைந்து விடுகின்றது. இத்தகைய கற்பனைத் திறனால்தான் திருத்தக்க தேவர், இளங்கோவடிகள் போன்ற துறவியரும் காதலுக்குச் சிறந்த வடிவு தந்து பாடமுடிகின்றது. திருவள்ளுவர் போன்ற அறவாழ்வு வாழ்ந்த பெரியோர்களும் வரைவின் மகளிர், கூடாவொழுக்கம் போன்றவற்றையும் சிறந்த முறையில் பாடியுள்ளனர். அன்பு, நட்பு ஆகிய அனுபவங்களைக்கொண்டே அவர்கள் காதல் உணர்ச்சியையும் கற்பனை செய்து பாடியுள்ளனர். ஒருவன்-ஒருத்தி வாழ்க்கையின் அனுபவத்தைக் கொண்டே அதற்கு எதிர்மறையாகவுள்ளவற்றையும் பாடியுள்ளனர்.

உணர்ச்சியுடன் கண்டதொரு நிகழ்ச்சியை உள்ளத்தில் அவ்வனுபவம் முழுதும் தோன்றுமாறு திரும்பக் கொணர்ந்து பாடுதல் ஒருவகை; கற்பனையாகவே ஒன்றைப் படைத்து அதற்கியைந்த உணர்ச்சி முழுவதையும் பெற்று அதைத் தன் அனுபவமாக்கிக் கொண்டு அவ் வனுபவம் வெளிப்படுமாறு பாடுதல் மற்றொரு வகை. முன்னது கைக்கூடும் ஒருவருக்குப் பின்னதும் கைக் கூடும்.

மழவுமுதிர் கனிவாய்ப் பசுந்தேறல்
வெண்டுகில் மடித்தல நனைப்பவம்மை
மணிவயிறு குளிரத் தவழ்ந்தேறி
யெம்பிரான் மார்பினிற் குரவையாடி
முழவுமுதிர் துடியினிற் சிறுபறை
முழக்கியனல் மோலிநீர் பெய்தவித்து
முளைமதியை நெளியரவின் வாய்மடுத்
திளமானின் முதுபசிக் கறுகருத்தி

விழவுமுதிர் செம்மேனி வெண்ணீறு
தூளெழ மிகப்புழுதி யாட்டயர்ந்து
விரிசடைக் காட்டினின் றிருவிழிகள்
சேப்பமுழு வெள்ளநீர்த் துளையமாடிக்
குழவுமுதிர் செல்விப் பெருங்களி
வரச்சிறு குறும்புசெய் தவன்வருகவே
குரவுகமழ் தருகந்த புரியிலருள்
குடிகொண்ட குமரகுரு பரன்வருகவே.[7]

என்பது முருகன் செய்த சிறுகுறும்புக்களைக் காட்டும் குமரகுருபர அடிகளின் சொல்லோவியம்.

முருகனுடைய திருவாயினின்று ஒழுகும் தேன் போன்ற எச்சில் உலகீன்ற அன்னையின் வெண் துகிலை நனைக்க, அவளது அழகிய வயிற்றின்மீது தவழ்ந்து பெருமானின் மார்பில் குரவைக் கூத்தாடுகின்றான். அப் பெருமானின் கையிலுள்ள உடுக்கையைக்கொண்டு சிறு பறை முழக்குகின்றான்; தலையிலுள்ள கங்கை நீரைக்கொண்டு கையிலுள்ள நெருப்பினை அவிக்கின்றான். முடியிலுள்ள பிறை மதியை எடுத்து பெருமானுக்கு அணியாக அமைந்துள்ள அரவின் வாயில் செருகுகின்றான். பெருமானின் கையிலுள்ள மானுக்கு அப் பெருமானின் முடிமீதுள்ள அறுகினை உணவாக அருத்துகின்றான். பெருமானின் செம்மேனி மீதுள்ள வெண்ணீறு தூள் எழுமாறு விளையாடுகின்றான். பெருமானின் விரிசடைக்காட்டிற் பாய்ந்து செல்லும் கங்கையாற்றில் தன் இருவிழிகள் சிவக்கும் அளவுக்கு நீராடி அயர்கின்றான். இந்தக் குறும்புக்களைக் காணும் எம்பிராட்டி பெருமகிழ்ச்சி கொள்ளுகின்றாள் சாதாரணமாகச் சிறு பிள்ளைகள் தம் பெற்றோரிடம் செய்யும் சிறு குறும்புக்களை நேரில்கண்ட அடிகள்

7 முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் — செய். 52

முருகன், மேற்கண்டவைபோன்ற குறும்புக்களைச் செய்த தாகக் கற்பனையில் உணர்ந்து பாடியுள்ளார். இந்தக் கவிதையைப் படிக்கும் நாமும் களிகொண்ட அத்தாயின் மனநிலையைப் பெறுகின்றோம். கவிஞன் கற்பனையில் பெற்ற அனுபவம் நம்முடைய அனுபவமாகி விடுகின்றது. கவிதையை நாம் மெய்மறந்து துய்க்கின்றோம்.

உள்ளதை உணர்ச்சியுடன் கூறும்பொழுது கூட்டலும் குறைத்தலும் திரிபும் நேர்தல் இயல்பு. அறிவு எதனையும் அளந்து அறியும் தன்மையுடையது. உணர்ச்சியோ குறித்த ஒன்றை ஆழ்ந்து உணரும் தன்மையது. எனவே, பின்னைய செயலில் குறித்த ஒன்றினைத்தவிர, ஏனையவை அவ்வளவு தெளிவாக நிற்பதில்லை. ஒரு பொருளின் ஒரு கூறு மட்டிலும் தெளிவாக — மிகுதியாக — உணர்த்தப்பெற, மற்றவை மங்குகின்றன; அல்லது மறைகின்றன. ஒன்றை எடுத்துக்காட்டுவதற்காக மற்றவற்றை வேண்டும் என்றே திரையிட்டு மறைப்பதாகக் கூறுதல் பொருந்தாது. அங்ஙனம் மறைத்துக்கூறுவது கட்சிச் சார்புடைய செய்தித்தாளின் வேலை; அதனால்தான் ஒரே நிகழ்ச்சியினைக் குறித்துப் பல நாளிதழ்கள் பலவாறாகத் தலையங்கம் தீட்டுகின்றன! கவிதையில் உணர்ச்சியின் காரணமாக ஒன்று சிறந்து நிற்றலால் மற்றவை சிறப்பிழந்து மறைகின்றன என்று கொள்வதே ஏற்புடைத்து.

இங்ஙனம் ஒன்றில் சிலவற்றைக் குறைப்பதால் பொருள் விளக்கம் நன்கு ஏற்படுகின்றது. உடலியலை விளக்கும் வண்ணப்படங்களில் உடல் முழுமையும்— தசைகள், நரம்புகள், குருதிக் குழல்கள் முதலியவை அனைத்தையும்—ஒரே படத்தில் எழுதிக் காட்டுவதில்லை.

அதனல் நரம்புகளை மட்டிலும் தெளிவாகக் காண விழைவார்க்குப் பிறவற்றைக் காட்டாமல் உடலமைப் பினை மட்டிலும் காட்டி அதனுள் எல்லா நரம்புகளும் காட்டப்பெறுகின்றன. அங்ஙனமே, எலும்பு அமைப் பினைத் தெளிவாக அறிய விரும்புவோர்க்கு ஏனைய வற்றை யெல்லாம் காட்டாமல் எலும்புகளை மட்டிலும் புலப்படுத்திப் படம் வரையப் பெறுகின்றது. தசை நார்களை மட்டிலும் அறிய விரும்புவோர்க்கு அவை மட்டிலும் தெளிவாக இருக்குமாறு படம் வரையப் பெறுகின்றது. இவற்ருல் நமக்கு யாதொரு ஐயப்பாடும் தோன்றுவதில்லை. இவற்றுள் ஒன்றை மட்டிலுமா கொண்டு உடல் இருக்கின்றது என்று நாம் ஐயப் பாட்டுடன் வினவுவதுமில்லை; ஆராய்ச்சி நடத்துவது மில்லை. இதே முறைதான் கற்பனையிலும் கையாளப் பெறுகின்றது. அதனல்தான் கவிதை, சுவையும் தெளிவும் பெற்றுச் சிறப்பாகத் திகழ்கின்றது.

உளவியலார் கற்பனையைப் பலவாருகப் பாகுபாடு செய்து உரைப்பர். இலக்கியங்களைத் திறனய்வோர் அவற்றை அறிவது சாலப்பயன் தரும். சி. டி. **வின்செஸ்டர்** என்ற ஆங்கிலத் திறனய்வாளர் கற்பனையைப் படைப்புக் கற்பனை, இயைபுக் கற்பனை, கருத்து விளக்கக் கற்பனை என்று மூவகையாகப் பகுத்துப் பேசுவர். இவை ஒவ்வொன்றையும் எடுத்துக்காட்டுக்களால் விளக்கு வோம்.

வாசவதத்தையின் அழகினைக் குறித்துக் **கொங்கு வேளிர்** இவ்வாறு கூறுவர்:

**'யாற்றற லன்ன கூந்தல்; யாற்றுச்**
**சுழியெனக் கிடந்த குழிநவில் கொப்பூழ்;**

வில்லெனக் கிடந்த புருவம்; வில்லின்
அம்பெனக் கிடந்த செங்கடை மழைக்கண்;
பிறையெனச் சுடரும் சிறுநுதல்; பிறையின்
நிறையெனத் தோன்றும் கறையில் வாண்முகம்;
அரவென நுடங்கும் மருங்குல்; அரவின்
பையெனக் கிடந்த ஐதேந் தல்குல்;
கிளியென மிழற்றும் கிளவி; கிளியின்
ஒளிபெறு வாயின் அன்ன ஒள்ளுகிர்;
வாழையந் தாளுறழ் குறங்கின் வாழைக்
கூம்புமுகி ழன்ன வீங்கிள வனமுலை;
வேயெனத் திரண்ட மென்றோள்; வேயின்
விளங்குமுத் தன்ன துளங்கொளி முறுவல்;
காந்தள் முகிழன்ன மெல்விரல்; காந்தள்
பூந்துடுப் பன்ன புனைவளை முன்கை;
அன்னத் தன்ன மென்னடை' ... [8]

இது கேசாதி பாத வருணனை. இதில் கவிஞன் தான் பல சமயங்களில் கண்டவற்றை ஒருங்கு சேர்த்துப் புதிய உருவத்தைப் படைத்திருப்பதால் இது படைப்புக் கற்பனையாகும்.

பறவைகள் குஞ்சு பொரிப்பது நாம் நாள்தோறும் காணும் காட்சி. மக்கள் நாள்தோறும் கூற்றின் வாய்ப்படு வதையும் நாம் காணுமல் இல்லை. இந்த இரண்டு காட்சி களையும் அடிக்கடிக் கண்ணுறும் நம் உள்ளத்தில் எந்த விதமான புதியகருத்தும் எழுந்ததில்லை; எழுவதுமில்லை. வள்ளுவப் பெருமானின் கருத்தில் அக்காட்சி என்ன கருத்தினை எழுப்பிவிட்டிருக்கின்றது |பாருங்கள்.

குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
உடம்பொடு உயிரிடை நட்பு. [9]

8. பெருங்கதை-4-11:64-79 9. குறள் 338

பறவைகள் குஞ்சு பொரிப்பதும் மக்கள் இறந்துபடும் நிகழ்ச்சியும் ஒன்று சேர்ந்து—இயைபுற்று—உயர்ந்த தோர் உண்மையையல்லவா விளக்கி நிற்கின்றன! இதில் பறவைகள் குஞ்சு பொரிக்கும் காட்சி கவிஞனது உணர்ச்சியைத் தூண்டவில்லை. ஆனால், அவன் உள்ளத்தில் படிந்து கிடந்த 'நிலையாமை' என்ற உணர்ச்சியே பறவை குஞ்சு பொரிக்கும் காட்சியை நினைப்பூட்டியது. அவ் வுணர்ச்சிதான் தனக்குப் பொருத்தமான பிறிதொரு காட்சியை நினைவுக்குக் கொணர்ந்து முன்னரே படிந்திருந்த உணர்ச்சியைக் கலையாக மலரச் செய்தது. புறஉலகில் காணும் நிகழ்ச்சி அகத்தில் அடங்கிக் கிடக்கும் உணர்ச்சியைத் தூண்டு கின்றது என்றாலும், பெரும்பாலும் உள்ளனுபவமே (inner experience) அத்தகைய உணர்ச்சியைக் கிளர்ந் தெழச் செய்கின்றது என்று சொல்லலாம். எனவே, கற்பனையாற்றலைத் தூண்டுவதற்கு உள்ளத்தில் அடங்கி யிருக்கும் உள்ளனுபவமே தூண்டுகோலாக அமை கின்றது என்பது தெளிவாகின்றது. இத்தகைய கற்பனைதான் இயைபுக் கற்பனையாகும்.

இயற்கைக் காட்சிகளைக் கண்ணுற்ற கவிஞன் தான் கண்டவற்றை அப்படியே கூறாது அக்காட்சி களால் தன் உள்ளத்தில் கிளர்ந்தெழும் உணர்ச்சிகளை மட்டிலும் சித்திரிப்பது கருத்து விளக்கக் கற்பனையாகும். உலக வாழ்வில் கேடும் ஆக்கமும், இறப்பும் பிறப்பும் மாறிமாறி வந்துகொண்டிருப்பதைச் சங்கப்புலவர் ஒருவர் காண்கின்றார். ஒருநாள் வானத்தில் திங்களை உற்று நோக்கிக்கொண்டிருந்த அவருக்கு அத்திங்களின் வாழ்விலும் கேடு, ஆக்கம், மறைதல், பிறத்தல் ஆகியவை இருத்தல் நினைவிற்கு வருகின்றன. இந்த உண்மையை உணர்த்துவதற்காகத்தான் அறியாத

வரையும் அறியச்செய்யும் நோக்கத்தோடு திங்கள் வானத்தில் பலரும் காணத் திரிவதாகக் கருதுகின்றார். இவ்வுணர்ச்சி,

> மாய்தல் உண்மையும் பிறத்தல் உண்மையும்
> அறியா தோரையும் அறியக் காட்டித்
> திங்கட் புத்தேள் திரிதரும்[10]

என்று வடிவெடுத்தது. உண்மையில் திங்கள் வானத்தில் திரியவும் இல்லை; உலகத்தார்க்கு இவ்வுண்மையை உணர்த்த வேண்டும் என்ற நோக்கமும் அது கொள்ள வில்லை. இந்த உண்மை திங்கட்குத் தெரியவும் தெரியாது. இங்ஙனம் கற்பித்துக் கூறுவதுதான் கருத்து விளக்கக் கற்பனையாகும்.

ஒரு காட்சியில் காணும் அனைத்தையும் வெளிப்படை யாகக் கூறுவதைவிட அதில் உணர்ந்த பகுதிகளை மட்டிலும் எடுத்துக்காட்டுவது சாலப் பயன்தரும். ஊனக் கண்ணால் பார்க்கும் பொருள்களின் அழகை மனக் கண்ணால் காணும்பொழுது பன்மடங்கு அது சிறந்து பொலிவுறும். மனம் அவ்வழகில் ஈடுபடும் பொழுதுதான் நமக்கு எல்லையற்ற மகிழ்ச்சி யுண்டாகின்றது. மனத்தில் எழும் கற்பனையாற்றல் பொருள்களில் பொலிந்து நிற்கும் உணர்ச்சி பாவனைகளை மட்டிலும் தேர்ந்தெடுப் பதால் அவை மனத்தில் நிலையாகப் பதிவுபெறுகின்றன.

பொதுவாகக் கற்பனை மனத்தின் வளர்ச்சிக்கு உறு துணையாக அமைகின்றது என்பது உளவியலாரின் கருத்து. மனத்தின் உரம் அதன் கற்பனையாற்றலில் உள்ளது என்றும், அத்தகைய உணர்வைத்தருவது கவிதை என்றும் ஆபர்குரோம்பி என்ற திறனாய்வாளர்

10 புறம்-27

கருதுகின்றார். எனவே, கற்பனையை நன்கு உணர்ந்து கவிதையை நுகரவேண்டும் என்கின்றது. இவ்விடத்தில் பி. அலெக்சாந்தர் என்ற உளவியலறிஞர் கூறியது நினைவுகூர்தற்பாலது: "உளம் அல்லது ஆன்மாவின் ஆற்றலே கற்பனை என்பது; காரணம், அதுதான் மனச்செயல்களனைத்தையும் ஒருங்கு பிணைப்பது. அது புலன்களின் (senses) ஆணையினின்று விடுபட்டதால் புலன் காட்சியினின்றும் (perception) வேறுபட்டது. அது நினைவினின்றும் (memory) வேறுபட்டது; காரணம், நினைவு முன்னர் அனுபவித்த ஒன்றை இருத்துதலை மட்டிலும் செய்கின்றதேயன்றி, புதிதாக ஒன்றைப் பெறுவதில்லை. அஃது உள்ளக்கிளர்ச்சியினின்றும் (emotion) வேறுபட்டது; காரணம், கற்பனை ஓர் ஆற்றலேயன்றி ஊக்கி (motive) அன்று. அது புரிந்துகொள்ளுதலினின்றும் வேறுபட்டது; காரணம், கற்பனை தன்வயமாக்குவதில் செயற்படுவதேயன்றிக் கண்டபொருள்களின் தன்மையை நோக்கிக் கோவைப்படுத்துவதன்று. அது மன உறுதியினின்றும் வேறுபட்டது; காரணம் மனவுறுதி (will) கடிவாளம் தாங்கி அத்தேரினை இவர்ந்து செல்லும் தேரோட்டியேயன்றி, கற்பனைபோல் அத்தேரில் அமர்ந்து செல்லும் தலைவன் அன்று. இவை ஒவ்வொன்றினின்றும் கற்பனை வேறுபடினும், அவற்றையும் கற்பனை அணைத்துக்கொள்கின்றது. ஏனெனில், கற்பனை செய்வதற்கு முழுமனமும் செயற்பட்டாக வேண்டும். அழகினால்தான் உலகம் வளர்கின்றது; அழகானவற்றைப் படைத்தலே கற்பனையின் கடமையாகும்". கற்பனை குழந்தைப் பருவத்தில் இயல்பாகவே அமைந்தது. சிறுவயதில் குழந்தை கற்பனை செய்வதைப் போலவே, கவிஞனும் கற்பனை செய்கின்றான்; மணிமயமான பாக்களைப் படைக்கின்றான். கற்பனை யூற்று நம்மிடம் என்றும் சுரந்து கொண்டிருந்தால்தான்

கவிதைகளை நன்கு சுவைக்கலாம்; நுகரலாம். கற்பனை யால்தான்,

இருந்தமிழே உன்னால் இருந்தேன் இமையோர்
விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன்.-[11]

என்று சொல்லித்திளைக்கும் அளவுக்குக் கவிதைச்சுவை நம்மிடம் வளரும்; கவிதையனுபவமும் நம்மிடம் நிலைத்து நிற்கும்.

11. தமிழ்விடுதூது-கண்ணி 151

# 6. கவிதையும் நீதியும் *

இவ்வுலக வாழ்க்கை நீதியை அடிப்படையாகக் கொண்டது. கவிஞர்கள் எல்லோரும் இவ்வுண்மையை நன்ருக உணர்ந்துதான் தமது கவிதைகளில் நீதி பற்றிய கருத்துக்களைப் பொதிந்து வைத்திருக்கின்றனர். தமிழ் இலக்கியத்தைப் பொறுத்தமட்டிலும் தமிழ்க் கவிஞர்கள் வாழ்க்கையைச் செம்மைப் படுத்துவதே இலக்கியத்தின் நோக்கம் என்ற கொள்கையினை யுடையவர்களாக இருந்தனர் என்று சொல்லலாம். இதனை,

உரத்தின் வளம்பெருக்கி யுள்ளிய தீமைப்
புரத்தின் வளமுருக்கிப் பொல்லா—மரத்தின்
கனக்கோட்டந் தீர்க்குநூ லஃதேபோன் மாந்தர்
மனக்கோட்டந் தீர்க்குநூன் மாண்பு.[1]

என்ற வெண்பாவால் அறியலாகும். நூலானது உடம்பி னுள்ளிருக்கின்ற ஞானத்தை வளர்வித்துத் தீமையாகிய அஞ்ஞான வளத்தைக் கெடுத்துக் கெட்ட மரத்தினது கோணலைப் போக்கும் எற்று நூலைப்போல் மாந்தரது மனக் கோட்டத்தைத் தீர்க்கும் என்பது இதன் கருத்து.

* 'குமரிமலரில்' (அக்டோபர் 1950) வெளிவந்தது. 1. நன்னூல்-நூற்-25

இதனால் மக்களினத்தின் அறியாமையைப் போக்கி அறிவு கொளுத்துதல் கவிதையின் முதன்மையான வேலையாயிருத்தல்வேண்டும் என்பது பெறப்படுகின்றது.

மேலை நாட்டினர் படிக்கும்போது இன்பத்தை உண்டாக்க வேண்டும் என்பதைக் குறிக்கோளாகக் கொண்டிருக்கும் பாடல்களை ஒரு பகுதியாகவும், ஒழுக்கம் கற்பிக்கும் பாடல்களை மற்றொரு பகுதியாகவும் கொண்டுள்ளனர். பின்னையதை அறங் கூறும் கவிதை (didactic poetry) என்று அவர்கள் கூறுவர். அத்தகைய தனியான பாகுபாடு தமிழ்ப் பாடல்களில் காணுவது அரிதாகும். எனினும், இடைக் காலத்தில் தோன்றிய பழமொழி, ஆசாரக்கோவை, திரிகடுகம், நான்மணிக் கடிகை ஆகிய நூல்களை நோக்கும்போது இத்தகைய ஒரு பிரிவு தமிழ்க் கவிதைகளுக்கும் தேவை என்று கருதவேண்டியுள்ளது. உரைநடை அதிகம் பயிலாத காலத்தில் பாட்டைக் கருவியாகக் கொண்டு அறவுரை வழங்கி வந்தனர். இவை பாவடிவில் இருப்பினும் சிறந்த கவிதைகள் ஆகா. இவற்றை வெறும் நீதிகளையும் கொள்கைகளையும் கொண்டுள்ள பெட்டகங்கள் என்று கூறலாமேயன்றி உள்ளத்தைத் தொடும் சிறந்த கவிதைகள் என்று கூற முடியாது.

தமிழ்க் கவிதைகளில் பெரும்பான்மையானவை பயிலும்போது இன்பந்தருவதுடன் உள்ளத்தைத் திருத்தும் பண்பைப் பெற்றிருப்பதால், படிப்போரின் வாழ்க்கையைச் செம்மைப் படுத்துவனவாக இருக்கின்றன. பேரிலக்கியங்களிலிருந்து சிற்றிலக்கியங்கள் வரை இப் பண்பு ஊடுருவியிருப்பதை எளிதில் அறியலாம். அறங் கூறுவதையே நோக்கமாகக் கொண்ட திருக்குறளை வெறும் நீதிநூல் என்று மட்டும் கூறுவது பொருத்தமன்று.

நாளென ஒன்றுபோல் காட்டி உயிரீரும்
வாளது உணர்வார்ப் பெறின்[2]

நன்றாங்கால் நல்லவாக் காண்பவர் அன்றாங்கால்
அல்லற் படுவ தெவன்[3]

அழக்கொண்ட எல்லாம் அழப்போம்; இழப்பினும்
பிற்பயக்கும் நற்பா லவை.[4]

இந்த மூன்று குறள் மணிகளிலும் கூறப்பெறும் உண்மைப் பொருள்கள் எவ்வளவு ஆழமானவை? இவற்றில் கவிதைக்குரிய இயல்பு ஒரு சிறிதும் கெடாதிருப்பதை அறிக. இங்ஙனமே, நூலிலுள்ள குறட்பாக்கள் அனைத்தும் நீதியை உணர்த்துவதுடன் கவிதைக்குரிய எல்லா இயல்புகளுடனும் சிறந்து பொலிகின்றன. கற்பனை, அனுபவம், உணர்ச்சி ஆகியவற்றில் அவை தோய்ந்து நிற்பதால் அவை உயர்ந்த கவிதை நிலையைப் பெற்றுத் திகழ்கின்றன. அவை படிப்போரது வாழ்க்கையைச் செம்மைப் படுத்தும் ஆற்றலையும் பெற்று விளங்குகின்றன.

கவிதையின் தலைமைப் பண்பு அஃது உணர்த்தும் உண்மையில்தான் இருக்கின்றது. மனித அனுபவத்திலும் இயற்கையிலும் நாம் சாதாரணமாகக் காணாத் புலனுணர் ஆற்றலுடைய அழகுகளையும் ஆழ்ந்த உண்மைகளையும் அது காட்டுகின்றது. நம்மில் ஒரு சிலருக்குக் கவிதை யுண்மையும் உட்காட்சியும் (insight) ஓரளவு அமைந்திருக்கின்றன. ஆனால், இவர்களுள் பெரும்பாலோரிடம் இத்தகைய கவிதைத் திறன் அன்றாட வாழ்க்கையின் இருப்பு நிலைகளால் நெருக்குண்டு, அவ் வாழ்க்கையின் கூறுகளாகவுள்ள உலோகாயதக் கவர்ச்சிகளால் குன்றச் செய்யப்பெற்று, சில சமயம் நனவு நிலையிலும் அல்லது நனவிலி நிலை

2. குறள்-334. 3 குறள்-379. 4 குறள்-659

யிலும் தாக்கப்பெறுகின்றது. ஆனால், உண்மைக் கவிஞனிடம் உலகப் பொருள்களின் அழகினையும், ஆழ்ந்த உண்மையினையும் காணுந்திறன் ஈடு எடுப் பற்ற அளவிலுள்ளது. அன்றியும், தான் காண்ப வற்றையும் கேட்பவற்றையும் தெளிவாக வெளியிட்டு விளக்கம் கூறும் திறனும் அமைந்து கிடக்கின்றது. இவ் விளக்கத்தைப் படிக்கும் நம்முடைய கற்பனையும் ஒத்துணர்ச்சியும் துடிப்புப் பெற்று அவற்றை அக்கவிஞ னுடன் சேர்ந்து காணவும் உணரவும் செய்து விடு கின்றது. இவ்விடத்தில் கோலரிட்ஜ் என்ற ஓர் ஆங்கிலப் பெரியார் கவிஞனைப்பற்றிக் கூறுவதைத் திரும்பக் கூறுவது மிகவும் பொருத்தமாகும். அவர் கூறுவதாவது: "உலக வாழ்வில் பழக்க வழக்கங்களின் காரணமாகவும், உலோகாயதத்தின் காரணமாகவும் உறங்கிக் கிடக்கும் நம் கவனத்தைக் கவிஞன் எழுப்பி அதனை உலகப் பொருள்களில் உறைந்து கிடக்கும் அழகினைக் காணச் செய்கின்றான்; நாம் அப்பொருள்களுடன் நெருங்கிப் பழகுவதாலும், 'மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசை' காரணத்தாலும் என்றுமே வற்றாத அவ் வழுக்குக் கரு வூலத்தைக் கண்ணிருந்தும் பார்க்க முடிகின்றதில்லை; காதிருந்தும் கேட்க முடிகின்ற தில்லை; உள்ளம் இருந்தும் உணரவும் புரிந்து கொள்ளவும் முடிகின்ற தில்லை.". எனவே, கவிதை நமக்குக் கவிஞனின் உள் நோக்குடன் நாமாகவே வாழ்க்கையைக் கூர்ந்து நோக்கிப் பொருளுணரக் கற்பிக்கின்றது; நம்முடைய பார்வையையும் ஒத்துணர்ச்சியையும் உரம்பெறச் செய்கின்றது. இவ்வாறாக அது நம்மிடம் மறைந்து கிடக்கும் கவிதைப் பண்பினையும் வளர்க்கின்றது.

சிறந்த கவிதைகள் யாவும் உண்மைகளைக் கற்பனை, அனுபவம் என்ற இரண்டுடன் கலந்து அழகு வடிவான

கலைப்பிண்டங்களாகப் பொலிவுறும், பண்டைத் தமிழ் இலக்கியங்களைப் பொறுத்தவரை, புறநானூற்றில் இத்தகைய அறங்கூறும் கவிதைகள் பல இருக்கின்றன. செவியறிவுறூஉ, வாயுறை வாழ்த்து முதலிய துறைகளில் வரும் பாக்களை இப்பகுதியில் அடக்கலாம். நெறியறியாது இறை வாங்கிய பாண்டியன் அறிவுடை நம்பிக்குப் *பிசிராந்தையார்* என்ற புலவர் கூறிய பாட்டை செவியறிவுறூஉக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகக்கொள்ளலாம்.

காய்நெல் லறுத்துக் கவளங் கொளினே
மாநிறை வில்லதும் பன்னாட் காகும்;
நூறுசெறு வாயினும் தமித்துப் புக்குணினே
வாய்புகு வதனினும் கால்பெரிது கெடுக்கும்;
அறிவுடை வேந்தன் நெறியறிந்து கொளினே
கோடியாத்து நாடுபெரிது நந்தும்;
மெல்லியன் கிழவ னாகி வைகலும்
வரிசை யறியாக் கல்லென் சுற்றமொடு
பரிவுதப வெடுக்கும் பிண்ட நச்சின்
யானை புக்க புலம்போலத்
தானும் உண்ணான் உலகமும் கெடுமே.[5]

"களிற்று யானைக்கு உணவாகும் நெல்லை அது விளையும் நிலத்திலிருந்து கொண்டு வந்து கவளம் கவளமாகக் கொடுத்தால் ஒரு மா அளவு சிறிய நிலத்தின் விளைவும் பன்னாட்கட்கு உணவாக அமையும்; அவ்வாறன்றி,யானையே நிலத்தினுட் புகுந்து தானாக உண்ணத் தொடங்கினால் ஒரு வேலி நிலத்தின் விளைவும் வாயில் புகுவதைவிடக்கால்களால்கெடுவது மிகுதியாகிச்சின்னாட்களுக்கும் உணவுக்குப் போதாது. அதுபோல அரசன் நெறியறிந்து இறைகொண்டால் அதிகப் பொருளை

5. புறம்-184

யீட்டித் தானும் சிறப்பாக வாழலாம்; அங்ஙனமின்றி குடிகளை வருத்தி இறை வாங்கின், அரசனுக்கும் பொருள் சேராது; நாடும் அழிந்து படும்". இது பாட்டின் கருத்து. நீதியைக் கூறும் நோக்கமாக எழுந்த கவிதையாயினும் கற்பனையும் அனுபவமும் கலந்து வந்துள்ளதால், கவிதை சிறப்புற்று விளங்குகின்றது.

"முற்பருவத்துக் கைத்தும் (கடுத்தும்) பிற்பருவத்து உறுதி பயக்கும் வேம்பும் கடுவும் போல வெய்யவாய சொல்லினைத் தடையின்றிப் பிற்பயக்குமெனக் கருதிப் பாதுகாத்துக் கிளக்குங் கிளப்பினுன் மெய்யாக அறிவுறுத்தும்" வாயுறை வாழ்த்துக்கு,

எருமை யன்ன கருங்கல் லிடைதோ
ஆனிற் பரக்கும் யானைய முன்பின்
கானக நாடனை நீயோ பெரும
நீயோ ராகலி னின்னொன்று மொழிவல்
அருளும் அன்பும் நீக்கி நீங்கா
நிரயங் கொள்பவரொ டொன்றாது காவல்
குழவி கொள்பவரின் ஓம்புமதி
அளிதோ தானேயது பெறலருங் குரைத்தே.[6]

என்ற பாட்டை எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம். இது நரிவெரூஉத் தலையார் என்ற சங்கப்புலவர் ஒள் வாட்கோப்பெருஞ் சேரலிரும் பொறை என்ற அரசனுக்குக் கூறியது. 'அருளும் அன்புமின்றிப் பாவஞ் செய்து நரகத்தைத் தமக்கு இடமாகக் கொள்ளும் பாவிகளுடன் நீ சேராது ஒரு குழந்தையை வளர்ப்பது போன்று உனது நாட்டினைப் பாதுகாப்பாயாக' என்பது இதன்

6. புறம்-5

கருத்து. இத்தகைய நீதிகள் பொதிந்த பாடல்கள் புறநானூற்றில் பல இருக்கின்றன. அவற்றுட் சில:

நீரின் றமையா யாக்கைக் கெல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே.[7]

நிலம்புடை பெயர்வ தாயினும் ஒருவன்
செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென
அறம்பா டிற்றே.[8]

உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே.[9]

நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்.[10]

செல்வத்துப் பயனே ஈதல்
துய்ப்பேம் எனினே தப்புந பலவே.[11]

யாதும் ஊரே யாவரும் கேளிர்
தீதும் நன்றும் பிறர்தர வாரா.[12]

ஈயென இரத்தல் இழிந்தன்று அதனெதிர்
ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று
கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந்தன்று அதனெதிர்
கொள்ளேன் என்றல் அதனினும் உயர்ந்தன்று.[13]

இவை யாவும் உலகம் உள்ளளவும் மக்கட்கு அறிவு கொளுத்தி நிற்கும் பொய்யா மொழிகளாக விளங்குகின்றன. நரி வெரூஉத் தலையார் அக்காலத்துச் சான்றோர் சிலருக்குப் பொருண் மொழிக் காஞ்சி என்ற துறையில் அறிவுறுத்திய,

7. புறம்–18 8. புறம்–34. 9. புறம்–183. 10. புறம்–186. 11. புறம்–189
12. புறம்–192 13. புறம்-204.

நல்லது செய்தல் ஆற்றி ராயினும்
அல்லது செய்தல் ஓம்புமின் அதுதான்
எல்லாரும் உவப்ப தன்றியும்
நல்லாற்றுப் படூஉ நெறியுமா ரதுவே.[14]

என்ற பாடல் மக்களாகப் பிறந்தார் அனைவருக்கும் சிறந்ததோர் அறவுரையாக மிளிர்கின்றது. மேற் கூறிய பாடற்பகுதிகள் இவ்வுலகம் உள்ளளவும் மன் பதைக்கு அறிவு கொளுத்தி நிற்கும் பொய்யா மொழி களாகப் பொலிவுறும். "யோசிக்கும் வேளையில் பசிதீர உண்பதும் உறங்குவதுமாக முடியும்" வாழ்க்கை நிலையி லிருந்து கவிதையை நோக்கினால் கவிஞன் கூறும் உண்மையை உணர இயலாது. கவிஞன் பேசும் உண்மைகள் யாவும் குறிக்கோள் நிலையைப்பற்றியவை; இருப்பதைப்பற்றிப் பேசாமல் இருக்கவேண்டியவற்றைப் பேசுபவை. உலக வாழ்வைப் பேசினாலும் அவை அதில் நாம் காணாத புதுமைகளையே எடுத்துரைக்கின்றன. இக் காரணம்பற்றியே கோலரிட்ஜ்என்பாரும், "ஒப்பற்றமெய்ப் பொருளறிஞனாக இல்லாத ஒருவன் என்றுமே சிறந்த கவிஞனாக இருந்ததில்லை" என்றும், எமர்சன் என்ற பேரறிஞரும், "சிறந்த கவிஞர் எனப்படுவோர் அவர் பிறர் மனத்தைத் தூண்டக்கூடிய மனநிலையைக் கொண்டே முடிவு செய்யப்பெறுவர்" என்றும் கூறிப் போந்தனர். எனவே, கவிதை உயர்ந்த பீடத்தினின்றே பேசவேண்டும் என்றாகின்றது

கவிஞன் காட்டும் வாழ்க்கையும் குறிக்கோள் தன் மையுடையது. வாழ்க்கை எவ்விதம் அமைந்தால் நலம் என்று கவிஞன் கருதுகின்றானோ, அங்ஙனமே அக் குறிக்கோளையும் ஆக்குகின்றான்; அதற்கேற்றவாறு

14. புறம்-195

கவிதைகளையும் தொடுக்கின்றான். நம் நாட்டுக் காவியங்கள் யாவும் இந்த அடிப்படையிலேயே எழுந்தவை. நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரம் தமிழில் தோன்றிய தலைசிறந்த கவிதைகளில் ஒன்று. சிலம்பு காரணமாக எழுந்த அக்கதையை உலகோர் புகழும் பெருங்காப்பிய வடிவில் இளங்கோவடிகள் ஆக்கித் தந்துள்ளார். மூன்று பெரு நீதிகளை அடிப்படையாகக் கொண்டு நூல் இலங்குகின்றது.

அரசியல் பிழைத்தோர்க் கறங்கூற் றாவதும்
உரைசால் பத்தினிக் குயர்ந்தோர் ஏத்தலும்
ஊழ்வினை உருத்துவந் தூட்டும் என்பதூஉம்
சூழ்வினை சிலம்பு காரண மாகச்
சிலப்பதி காரம் என்னும் பெயரால்
நாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யுள்.[15]

எனக் கூறி இளங்கோவடிகள் நூலைத் தொடங்கினார் என்று பதிகம் கூறுகின்றது. இவ்வறவுரைகளை நிலை நாட்ட இளங்கோ வடிகள் நூலைப் படைத்தாலும், அதைப் பயில்வாருக்கு இந்நீதி நினைவே தோன்றுவதில்லை. இந் நீதிகளைக் கலை யுணர்ச்சியுடன் கலந்து கவிதையில் பின்னி விட்டார் அடிகள். வெறும் நீதியாக மட்டிலும் இருந்தால் படிப்போருக்கு அது வெறுப்பினையே விளைவிக்கும். நீதி கலைப் பண்புடன் சேர்ந்து விட்டதால் படிப்போர் அறியாமலேயே அஃது அவர் மனத்தில் புகுந்து அவர் வாழ்க்கையைச் செம்மைப் படுத்தி நிற்கின்றது. இது பல ஊட்டச் சத்துக்களை யுடைய வலிமை தரும் மருந்தினை (டானிக்) உண்பது போலாகும். அதை உண்ணுங்கால் மருந்தினை உண்பது போன்ற உணர்ச்சி நம்மிடம் தோன்றுவதில்லை அல்லவா?

15. பதிகம்-வரி (55-60)

தாடகை தவத்திற்குரிய ஆசிரமங்களையும் குளிர் பூம்பொழில்களையும் அழித்து மருத நிலமாக இருந்த வனத்தைப் பாலை நிலமாக்குகின்றாள். இதனைக் கம்ப நாடன்,

உளப்பரும் பிணிப்புறு உலோபம் ஒன்றுமே
அளப்பரும் குணங்களை அழிக்கும் ஆறுபோல்
கிளப்பரும் கொடுமைய அரக்கி கேடிலா
வளப்பரு மருதவைப்பு அழித்து மாற்றினள்.[16]

என்று கூறுகின்றான். தாடகையை உலோபத்தோடு ஒப்புமைப்படுத்தி அவளது பழிநிலையையும் இழி செயலையும் வெளிப்படுத்திய கவிஞன் வாக்கு நினையுந் தோறும் புதுப் புதுப் பொருளைத் தந்து நிற்கின்றது.

உலோபம் என்பது பொருள்மேல் மண்டி மருள் கொண்டுள்ள பேராசை. அது மனிதனுடைய மனத்தைக் கவர்ந்து எவ்வழியும் மீள முடியாதபடி தன்வயப் படுத்தி நிற்கும் வன்மையுடையது. ஆகலின், கவிஞன் இதை 'உளப்பரும் பிணிப்பு' எனக் குறித்துள்ளான். உள்ளத்தைப் பிணித்து நிற்கும் உலோபம் என்ற இழி குணம் நல்ல குணங்களையெல்லாம் நாசப்படுத்துவது போல, தாடகை ஒருத்தியே அவ்வனத்திலுள்ள இனிய கனிமரங்கள் அனைத்தையும் அழித்துத் தொலைத்தாள். நற்குணங்கள் நிறைந்தவர்களாக இருந்தாலும் உலோப குணம் அவர்களிடம் இருந்தால் அவர்கள் பிறரால் இகழப்படுவதை இன்றும் நாம் காணலாம். இந்த ஒரு குணம் ஏனைய குணங்களையெல்லாம் அழித்து விடுகின்றது.

முதல் நாட்போரில் இராவணன் இலக்குவன் மீது வேலாயுதத்தை ஏவி அவனை மூர்ச்சையடையச் செய்

16. பால-தாடகை வதை 1-42

கிருன். இராமனுக்குக் கடுஞ் சீற்றம் உண்டாகின்றது. அநுமன் தோளில் ஏறிக்கொண்டு இராவணனுடன் பெரும்போர் புரிந்து அவன் சேனை முழுவதையும் நீருக்குகின்ருன்; இராவணன் முடிகளைத் தகர்த்தெறிந்து அவனையும் நிராயுதனுக்குகின்ருன். அப்போது இராவணன் நின்ற நிலையைக் கம்பநாடன்;

> அறங்க டந்தவர் செயலிது என்(று)உலகெலாம் ஆர்ப்ப
> நிறங்க ரிந்திட நிலம்விரல் கிளைத்திட நின்ருன்.[17]

என்று காட்டுகின்ருன். இதில் முதலடி இராவணனது கொடுமைகளை யெல்லாம் அடக்கிக் காட்டுதலைக் காண்க. மீண்டும் இராமன் வாய்மொழியாக,

> அறத்தினுலன்றி அமரர்க்கும் அருஞ்சமம் கடத்தல்
> மறத்தி னுலரிது என்ப(து) மனத்திடை வலித்தி.[18]

என்று கம்பன் கூறும் நீதி உலகம் உள்ளளவும் மன்பதைக்கு அறவுரையாக விளங்குவதில் என்ன தடை?

இலக்குவனது 'நற்ருதையும் தனி நாயகனும் பெற்ருயுமான' இராமன் காட்டிற்குப் போக நேரிட்டதைக் குறித்து இலக்குவன் சீற்றங் கொண்டு நிற்கின்ருன்; 'கால்தாக்க நிமிர்ந்து புகைந்து கனன்று பொங்கும் ஆருக் கனல்'போல் விளங்குகின்ருன். இக்கனலை ஆற்றும் அஞ்சன மேகமென்ன இராமன் அவனிடம் வருகின்ருன்; வந்து பல நியாயங்களைத் தம்பிக்கு எடுத்துக் கூறுகின்ருன்.

> நதியின் பிழையன்று நறும்புனலின்மை; அற்றே
> பதியின் பிழையன்று; பயந்து நமைப்பு ரந்தான்
> மதியின் பிழையன்று; மகன்பிழை யன்று மைந்த!
> விதியின் பிழை; நீஇதற்குஎன்னை வெகுண்டது?...[19]

17. யுத்தகாண்-முதற்போற்-250. 18. ஷை-252. 19. அயோ- நகர்நீங்-129

என்று 'ஊழிற் பெருவலி யாவுள?' என்ற வள்ளுவன் கருத்தை நயமாக எடுத்துக் காட்டுகின்றான். கம்பன் காட்டும் இந்நீதி இடத்திற்கேற்றவாறும் கவிதைப் பண்புகளுடனும் வெளிப்படும்போது அறங்கூறும் நோக்கத்தை நாம் உணர்வதே இல்லை; நம்மையறியாது விதியின் வலிமை நம் உள்ளத்தில் பதிகின்றது. வாழ்க்கையின் உயர்ந்த அடிப்படை யுணர்ச்சிகளாகவுள்ள அன்பு, வீரம், காதல் தியாகம் போன்ற பண்புகள் அமைந்து அவற்றின் வாயிலாக உயிர்கள் எல்லாவற்றினுடனும் இயைந்து உணரும் விழுமிய அனுபவம் பெறத்தக்கதாக விளங்கினால்தான் கவிதை சிறந்த நிலைத்த இன்பம் தருவதாகின்றது. இந்த விழுமிய உணர்ச்சியின் அடிப்படையில் அமைந்த கவிதைதான் பெருங்கவிதை (great poetry) என்ற நிலையையும் அடைகின்றது. கவிஞன் இவற்றையெல்லாம் மனத்தில் கொண்டு கவிதையைப் படைக்க முடியாது; அப்படி முயன்றாலும் அக்கவிதை தான் விரும்பியபடி அமையாது. ஆனால், தான் பெற்ற விழுமிய உணர்ச்சியைப் — அனுபவத்தைப் — பிறரும் பெற வேண்டும் என்ற நோக்கம் மட்டிலும் கவிஞனிடம் இருந்தால் கவிதை தானாகக் கவிஞனின் விருப்பம்போல் நன்கு அமைந்து விடும்.

இயற்கைப் பொருள்கள் இன்பமயமான சமாதியில் அடங்கிக் கிடக்கின்றன. அந்த அமைதி நிலையைக் கலைக்காமல் அதனுடன் கலந்து கொள்ளும் இயல்புடையவனே கவிஞன். அவன் இயற்கையோடு பழகும்—தோய்ந்து நிற்கும்—அனுபவம் வாய்ந்தவன். இயற்கையுடன் அவன் ஒன்றி நிற்கும் நிலையே தனி. உறங்கும் குழந்தையைத் தாய் அணைவதைக் கண்டுள்ளோம் அன்றோ? தாய் குழந்தையை மார்போடு சேர்த்தே

தழுவிக்கொள்வாள். என்றாலும், அவ்வாறு அணைவதில் குழந்தையின் துயில் கெடுவதில்லை; அடுத்தக் கணத்தில் அவளும் தன்னை மறந்து உறங்கிவிடுவாள். அவ்விதமே கவிஞனும் இயற்கையை அதன் இன்ப அமைதி கலை யாமல் தழுவுவான். தன்னையும் உடனே மறந்து விடுவான்; இன்பப் பெருக்கில் மிதப்பான். அதிலிருந்து வெளிவந்தவுடன் இன்பவெறி பிடித்தவன்போல் சில சமயம் பாடுவான். அவன் அனுபவித்த இன்பப் பெருக்கில் ஒன்றிரண்டு திவலைகள் அவன் பாடிய கவிதையில் அமைகின்றன. அதைப் பார்த்தே நாம் உயர்ந்த கவிதை என்று உள்ளம் பூரிக்கக் கொண் டாடுகின்றோம். வால்மீகியின் உள்ளம் சுவைப் பெருக்கால் பூரித்திருக்கும்பொழுது இராமாயணத்தின் மூல சுலோகம் பிறந்ததாக வடமொழி வரலாறு கூறுகின்றது.

இவற்றையெல்லாம் நன்கு உணர்ந்த வடமொழி வாணர்கள் தலைவன் ஏவலாளர்க்குக் கூறுதல் போன்றவை அற நூல்கள் என்றும், நண்பர் ஒருவர்க் கொருவர் கூறும் முறையில் அமைந்தவை புராணங்கள் என்றும், கணவனுக்கு மனைவி உரைப்பது போன்றவை காவியங்கள் என்றும் ஒருவகைப் பாகுபாடு செய்து உள்ளனர். இல்வாழ்க்கையில் சொற்களை விட உள்ளத்து உணர்ச்சிகளே ஆற்றல் மிக்கவை என்பதும், சொற்களால் உணர்த்துவதைவிடக் குறிப்பால் உணர்த் துவதே மிகுதி என்பதும் நாம் அறிந்தவை. இக்கார ணத்தால்தான் ஒரு சில வரிகளாலான அகத்துறைச் சங்கப் பாடல்கள் உணர்ச்சியைக் கொட்டி நம் உள்ளத் தைக் கொள்ளை கொள்ளுகின்றன. இத்தகைய உணர்ச்சிதான் காவியங்களிலும் அமைந்து கிடக் கின்றது. ஒழுக்கம், அறம் முதலியவற்றை அதிகமாகச்

சொற்களால் கூறி வற்புறுத்தாமல் கற்பனை யனுப வத்தின் வாயிலாக அப்பாடல்கள் உள்ளத்தில் தாமே சென்று பதியும் முறையில் அமைந்து விடுகின்றன.

மேற் கூறியவற்றை நோக்குங்கால் கவிதை வாழ் வுடன் இணைந்த உறவுகளைப்பற்றியே பேசுகின்றது என்றும், அது நம் எல்லா மன நிலைகட்கும் முறையீடு செய்கின்றது என்றும் அறிகின்றோம். எந்தப்பொருளாக இருந்தாலும், அப்பொருளைக்கொண்டு தக்க முறையில் கவிதை வடிக்கப்பெற்றால் அது கவிதையழகினையும் உயர்ந்த குறிக்கோளையும் தரும் என்பதற்கு ஐயமில்லை. அது கூறும் முறையிலும் புதிய பொருளையே புலப் படுத்தி நிற்கும்.

உண்ட வெறியில் முன்னொருநாள்
　　உண்ட கலத்தை உடைத்தெறிந்தேன்
துண்டு துண்டாய்ப் போனகலம்
　　துணிந்து மெல்ல எனைநோக்கிப்
'பண்டு யானும் உன்வாழ்வைப்
　　பாரில் அடைந்தேன் நீயுமெனக்(கு)
அண்டும் இந்த வாழ்வைஇனி
　　அடைவாய் உண்மை' என்றதடா.[20]

என்ற பாடலின் உண்மையை நோக்கின் இது பெறப் படும். இதிலிருந்து கவிஞர்கள் யாவரும் பெருமைக் குரிய நிபந்தனைகளை நிறைவேற்று வதற்காக அறம் உரைக்கும் நோக்கத்துடன் கவிதை புனைய வேண்டும் என்பது நம் கருத்தன்று; சதா வாழ்விற்குரிய கருத்துக் களையே உணர்த்த வேண்டுமென்பதும் நம் கோட்பா டன்று. பிரசாரகனது வேலைக்கும் கவிஞனது வேலைக்கும் வேறுபாடு உண்டு; நாம் இரண்டயும் வைத்துக் குழப்ப

20. கவிமணி-உமர்க்கய்யாம் பாடல்கள்-பா 37

வேண்டிய தில்லை. பிரசாரகன் குறிப்புக்களைத் தந்து வழிகாட்டுவான்; கவிஞனே நமக்குக் கிளர்ச்சி யூட்டிப் புத்துணர்ச்சி தருவான்; அகத்தெழுச்சியைத் தூண்டி, புது ஆற்றலைத் தந்து, மகிழ்ச்சியூட்டுவான். வொர்ட்ஸ் வொர்த் போன்ற ஆங்கிலக் கவிஞர்கள் மெய்ப்பொருளை அடிப்படையாகக் கொண்டே கவிதை புனைந்தனர். எவர் எப்படிச் செய்தாலும், எந்த நோக்கத்தைக் கொண்டு கவிதை புனைந்தாலும் நீதியைக் கற்பனை, அனுபவம், உணர்ச்சி ஆகியவற்றுடன் கலந்துதந்தால் அக் கவிதை வாழ்க்கையின் பேருண்மைகளைப் புதியதோர் ஆற்றலுடனும் மதிப்புடனும் பெற்று விளங்கும் என்பதற் கையமில்லை.

தமிழ் இலக்கியத்தைப் பொறுத்தவரை கவிதையின் சிறப்புக்கு ஓசை, சொல்லடுக்கு முதலியவை இன்றி யமையாதனவாக இருப்பினும், கவிதையின் பொரு ளமைப்பே முக்கியமானதாகக் கொள்ளப் பெறுகின்றது. தமிழர்கள் இன்பம் என்ற சொல்லுக்குக் கண்டபொருள் மிகவும் ஆழமுடையது. நிலைபேருடைய இன்பத்தைத் தருவது எதுவாயினும் அஃது உண்மையும் ஆழமும் உடையதாயிருத்தல் வேண்டும் என்பது அவர்கள் கொள்கை. மேனாட்டுத் திறனாய்வாளர்களிலும் சிலர் இக்கொள்கையை யுடையவர்கள். "கவிதையை ஆராயுங் கால், நம்முடைய முதற்கவனம் கவிஞன்பால் செல்ல வேண்டும்; அவனுடைய ஆளுமையிலும் அவன் உலகைப்பற்றிக் கொண்டுள்ள மனப்பான்மையிலும் செல்லவேண்டும்; வாழ்க்கையை எவ்வாறு நோக்கி விளக்கந் தருகின்றான் என்பதையும் கவனிக்கவேண்டும். இது வெளிப்படையாகவும் இருக்கலாம்; குறிப்பாகவும் இதனைப் பெறவைக்கலாம். கலை, வடிவம், வரலாறு போன்ற செய்திகளில் நாம் எவ்வளவு ஆழ்ந்திருந்த

போதிலும், மேற்கூறிய கவிதையின் முதனிலைக்கூறுகள் எவ்விதத்திலும் நம் பார்வையினின்று நழுவாமல் காக்க வேண்டும்'', என்று ஹட்சன் கூறுவதை ஈண்டுச்சிந்திக்க வேண்டும். இது கருதியே கவிதையைப்பற்றிக் கூற வந்த தொல்காப்பியரும்,

'இழுமென் மொழியால் விழுமியது நுவலல் ,[21]

என்று கூறிப் போனார். தமிழ்க் கவிதைகள் பெரும்பாலும் அறங்கூறும் இயல்பும் கவிதை இயல்பும் கொண்டே திகழ்கின்றன.

21. செய்யுளி-நூற் 230

# 7. மொழியும் சமயமும்*

தமிழ் மொழியின் தோற்றம் முதல் அதன் இலக்கியம் இமயமலைபோல் வளர்ச்சியடைந்ததுவரை அதன் வரலாற்றை நோக்கினால் யாவும் சமயச் சார்பாகவே இருப்பதை அறியலாம். இன்று மொழி வரலாற்று வல்லுநர் மொழியின் பிறப்பைப்பற்றிப் பல கருத்துக்களைக் கூறினாலும், பண்டையோர் வடமொழியும் தென்மொழியும் முறையே சிவபெருமானால் பாணினிக்கும் அகத்தியருக்கும் வழங்கப்பட்டவை என்றுதான் கூறி வந்தனர்.

வடமொழியைப் பாணினிக்கு
 வகுத்தருளி அதற்கிணையாத்
தொடர்புடைய தென்மொழியை
 உலகமெலாந் தொழுதேத்துங்
குடமுனிக்கு வலியுறுத்தார்
 கொல்லேற்றுப் பாகர்;[1]

என்று சிவஞான முனிவர் தமது காஞ்சிப் புராணத்தில் கூறியிருப்பது இதனை வலியுறுத்தும். மொழியின் பிறப்பு இவ்வாறாக, அம்மொழியிலுள்ள இலக்கிய வளர்ச்சியும்

---

* குமரி மலரில் (ஜூன்-1952) வெளிவந்தது. 1. காஞ்சிப்புராணம்

சமயத் தொடர்பாகவே இருக்கின்றது. சங்க காலத்திலிருந்து இன்றுவரை தோன்றியுள்ள இலக்கியங்களைக் கூர்ந்து நோக்கினால் இவ்வுண்மை விளங்காமற் போகாது. சங்க காலத்தில் சமயத் தொடர்பு கொண்ட இலக்கியங்கள் அதிகம் தோன்றாது போயினும், அதற்குப் பிறகு தோன்றித் தமிழ் மொழியை வளம்படுத்திய இலக்கியங்கள் பெரும்பாலும் சமயச் சார்பாகவே இருக்கின்றன.

சங்ககாலத்தில், சமயம் ஒரு தனிக் கலையாகக் கருதப் பெறவில்லை. அப்போது சமயம் உணர்வு நிலையில் தான் இருந்தது; சமயம் அறிவு நிலையில் வைத்து எண்ணப்பட்ட காலத்திலிருந்துதான் தனிக் குறியீடுகளும் இலக்கணங்களும் தோன்றலாயின. இயற்கை வாழ்வு வாழ்ந்த சங்ககால மக்கள் இறையுணர்வு கொண்டிருந்தனர். கடவுள், உயிர், உலகம் என்ற அளவில் சமயம் முடிந்தது என்று சொல்லி விடலாம். அவர்கள் வழிபாடு இயற்கையோடு ஒட்டியிருந்தது.

மாயோன் மேய காடுஉறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெரும்புனல் உலகமும்;[2]

என்ற தொல்காப்பிய நூற்பாப் பகுதி ஒருவாறு இதனை விளக்கி நிற்கின்றது. சங்க இலக்கியங்களில் சில பாட்டுக்கள்தாம் கடவுளைப்பற்றி யிருக்கின்றன. பத்துப் பாட்டில் ஒன்றாகிய திரு முருகாற்றுப்படை முருகனைப் பற்றியது. எட்டுத் தொகை நூல்களில் கடவுள் வாழ்த்தாக வந்துள்ள பாட்டுக்கள் இறைவனைப் பற்றியவை. பரிபாடலில் உள்ள பாட்டுக்களில் எட்டு செவ்வேளைப்

2. தொல்-பொருள்-அகத்திணை-நூற். 5

பற்றியவை; ஆறு பாட்டுக்கள் திருமாலைப்பற்றியவை. புறநானூற்றிலுள்ள பல பாட்டுக்களில் கடவுளைப்பற்றிய குறிப்புக்கள் மட்டிலுந்தான் காணக் கிடக்கின்றன. திருக்குறளில் கடவுள் வாழ்த்து என்ற அதிகாரம் கடவுளைப்பற்றியது; துறவறவியலில் சமய சம்பந்தமான கருத்துக்கள் பல வந்திருக்கின்றன. கடவுளை நோக்கி வழிபடுகின்ற அடியார்கள் உணர்வுத் தெளிவை அடைதலையே தமது நோக்கமாகக் கொண்டிருந்தனர். ஆண்டவனிடமிருந்து உயிர்கள் விரும்பத்தக்கவை எவை என்பதை,

யாஅம் இரப்பவை
பொருளும் பொன்னும் போகமும் அல்ல; நின்பால்
அருளும் அன்பும் அறனும் மூன்றும்
உருளிணர்க் கடம்பின் ஒலிதா ரோயே.[3]

என்ற பரிபாடலின் அடிகள் விளக்கி நிற்கின்றன. சங்க காலத்தில் சமயம் என்று ஒன்று இராவிட்டாலும் சமய சம்பந்தமான கருத்துக்கள் மொழியில் புகுந்து கொண்டிருந்தன என்ற அளவில்தான் மொழிக்கும் சமயத்திற்கும் தொடர்பு இருந்தது என்று சொல்லலாம். அக் காலத்தில் சமயச் சார்பாகவே யாதொரு தனி இலக்கியமும் தோன்றவில்லை என்பதை மட்டிலும் உறுதியாகச் சொல்ல முடியும்.

சங்க காலத்திலேயே பௌத்த சமயம், ஆருகதம் எனப்படும் சமண சமயம், வைதிக சமயம், ஆசீவக சமயம் என்ற நான்கு வடநாட்டுச் சமயங்கள் தமிழ் நாட்டிற்கு வந்துவிட்டன. ஒன்றற்கொன்று முரண்பட்ட கொள்கைகளையுடைய இவற்றுள் பௌத்த சமயம் தமிழ் நாட்டில் முதலில் வேர் ஊன்றி வலிமையை

3. பரிபாடல்- 5 (வரி: 78-81)

அடைந்துவிட்டது. கி. பி. 13-ஆம் நூற்றுண்டுவரை பௌத்த சமயம் தமிழ் நாட்டில் இருந்ததாக வரலாற்றுல் அறியலாம். பௌத்தர்கள் தமிழ் நாட்டில் செல்வாக்குப் பெற்றிருந்த காலத்தில் பல தமிழ் நூல்களை இயற்றித் தமிழ் மொழியை வளமடையச் செய்தனர். அவர்கள் இயற்றிய நூல்கள் யாவும் தங்கள் சமயக் கொள்கையை மக்களிடம் பரப்புவதற்காகவே தோன்றியவையாகும். அவற்றுள் ஒன்றிரண்டு நூல்களைத் தவிர ஏனையவை யாவும் அழிந்துபட்டன. பௌத்த சமயத்தின் பிறவிப் பகைவர்களான சமணரும் வைதிகரும்தாம் இவற்றை அழித்திருக்க வேண்டும் என்று நினைக்கவேண்டி யிருக்கின்றது. இன்று எஞ்சியுள்ள பௌத்த நூல்கள் இரண்டே. அவற்றுள் ஒன்று இலக்கியம்; மற்றொன்று இலக்கணம். ஐம்பெருங் காப்பியங்களில் மணிமேகலையும் குண்டலகேசியும் பௌத்தர்களால் இயற்றப்பட்டவை. இவற்றுள் மணிமேகலை ஒன்றுமட்டிலுந்தான் இன்று உளது; குண்டலகேசி பெயரளவில்தான் கேட்கப்படுகின்றது. குண்டலகேசி இறந்து பட்டாலும் அவற்றின் சில செய்யுட்கள் புறத்திரட்டு என்ற நூலிலும், தொல்காப்பிய உரை, யாப்பருங்கல விருத்தியுரை, வீரசோழிய உரை என்னும் இவற்றிலும் காணப்படுகின்றன. மணிமேகலை பலதிறத்தாலும் சிறப்புடையதாய்த் தமிழ்த்தாயினை அலங்கரிக்கும் *மணிமேகலையாகவே* விளங்குகின்றது. இந்நூல் பௌத்த சமயக் கொள்கைகளின் களஞ்சியம் என்று சொல்லலாம். பௌத்தர்களால் இயற்றப்பட்டு இன்று முழு வடிவாக இருக்கும் மற்றொரு நூல் வீரசோழியம்; இஃது ஐந்திலக்கணங்களையும்சுருக்கமாகக் கூறுவது. இதனை இன்று தமிழ் மக்கள் வழக்கொழிந்த இலக்கண நூலாகக் கருதுகின்றனர். இவ்வாறு பௌத்தர்கள் தங்கள் சமயத்தைப் பரப்புவதையே

நோக்கமாகக் கொண்டிருந்தாலும், அவர்கள் தமிழ் மொழிக்குச் செய்த தொண்டு இன்றளவும் நினைவில் இருக்குமாறு அவர்கள் இயற்றியுள்ள இலக்கியங்கள் விளங்குகின்றன.

பௌத்த சமயத்திற்கு அடுத்தபடியாகத் தமிழ் நாட்டில் செல்வாக்குப்பெற்றது சமண சமயமாகும், நாளடைவில் இஃது 'அரசாங்க சமயம்' என்ற நிலையையும் அடைந்தது. பாண்டிய மன்னர்களும் பல்லவ அரசர்களும், சோழ வேந்தர்களும் இச் சமயத்தைத் தழுவினர். சமணர்கள் தமிழ் மொழியில் பல நூல்களைச் செய்திருக்கின்றனர். அவர்கள் செய்த நூல்களைத் தேவார காலத்திற்கு முன்னர்ச் செய்தவை. தேவார காலத்திற்குப் பின்னர்ச் செய்தவை என்று இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கலாம். தேவார காலத்திற்கு முன்பு நாலடியார், அறநெறிச்சாரம் போன்ற அறம் உரைக்கும் நூல்களை மட்டிலுந்தான் செய்தனர்; வரலாறு கூறும் தமிழ் இலக்கியங்களை அதிகமாகச் செய்யவில்லை. செய்த ஒரு சிலவற்றுள்ளும் சிலப் பதிகாரத்தைத் தவிர மற்றவை மக்கள் மனத்தைக் கவர்வனவாக இல்லை. சிலப்பதிகாரம் மட்டிலும் தமிழ் மக்களிடம் ஓர் உன்னத இடத்தைப் பெற்றிருக்கின்றது. தமிழ்நாட்டுக்குச் சொந்தமான ஒரு சிறந்த தமிழ்க் கதையைப் பொருளாகக் கொண்ட முதல் காப்பிய நூல் இதுவே. படிப்பதற்கு விறைப்பாக உள்ள அகவல் நடையைக் கொண்டிருந்தாலும், அந்நடையிலேயே அற்புதமான கொடுமுடிகளையும் உயர்ந்த பண்பு கலந்த கவிதைகளையும் கொண்டுள்ளது; இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழுக்கு இலக்கியமாகவும் விளங்குகின்றது.

தேவார காலத்திற்குப் பிறகு சமணர்கள் தமிழ் மொழிக்குச் செய்த தொண்டால்தான் அழியாப் புகழ்

பெற்றனர். தமிழர்கள் கூட்டத்தில் வழங்கிய சமய நூல்களைப் பயின்று அவற்றைப்போல் சிறு நூல்களையும் இலக்கியங்களையும் தமிழில் செய்தனர். திருக்கலம்பகம், திருநூற்றந்தாதி, நரிவிருத்தம் போன்ற சிற்றிலக்கியங்களும் சிந்தாமணி, சூளாமணி, மேருமந்தர புராணம் போன்ற பேரிலக்கியங்களும் சமண சமயக்கருத்துக்களைத் தாங்கி நிற்கின்றன. இவற்றுள் சிந்தாமணி இன்னிசையும் நல்ல கவிதையும் மலிந்த ஒரு சிறந்த நூலாகும். தேவாரப் பெரியார்கள் காலத்தில் மக்கள் மனத்தைக் கவர்ந்த விருத்தப்பாவையே தேவர் கையாண்டிருப்பதால், காவியம் சிறந்து விளங்குகின்றது. இந்தச் சமணக் காவியத்தில் ஈடுபட்டு மகிழ்ந்து கொண்டிருந்த சோழனைச் சைவ சமயத்தின்பால் இழுக்கவே சேக்கிழார் பெரிய புராணம் பாடினார் என்றால், இதன் பெருமையை எடுத்துச்சொல்லத் தேவையில்லை. சூளாமணியும் எளிமை, இனிமை, கவிதை நயம் முதலிய பண்புகளைக்கொண்ட விருத்த யாப்பில் இயற்றப்பட்ட காவியமாகும்.

சமணர்களால் செய்யப்பட்ட இலக்கணங்கள், நிகண்டுகள்கூடச் சமண சமயக் கருத்துக்களைக் கொண்டிருக்கின்றன. சின்னூலை இயற்றிய **குணவீர பண்டிதர்** தம் சமயப் பொருட்குரிய வணக்கம் கூறிச் செல்லுகின்றார். நன்னூலை இயற்றிய பவணந்தி முனிவர் காப்புச் செய்யுளில் சமயக் கருத்தைப் புகுத்துவதுடன் நின்று விடாது எழுத்தின் இலக்கணத்திலும் புகுத்தியிருக்கின்றார்.

> 'மொழிமுதற் காரண மாமணுத் திரளொலி
> எழுத்து' [4]

4. நன்னூல்-நூற்பா: 58.

'நிறையுயிர் முயற்சியின் உள்வளி துரப்ப
எழும் அணுத் திரள்,[5]

என்ற நூற்பாக்களிலுள்ள "அணுத்திரள் ஒலி" என்பது சமண சமயக் கருத்தாகும். சூடாமணி நிகண்டு இவர்கள் செய்ததாகும். விருத்தப்பாவிலேயே இதனையும் ஆக்கியுள்ளனர். அதிலும் விருப்பப்படியெல்லாம் சமயக் கருத்துக்களைப் புகுத்தியிருக்கின்றனர். காப்புச் செய்யுள்,

முடிவில் இன்பத்து மூவா முதல்வனைப் போற்றி

என்று தொடங்குகின்றது. பகவன் என்ற சொல்லுக்குப் பொருள் கூறுமிடத்து,

பகவனே ஈசன் மாயோன் பங்கயன் சினனே புத்தன்

என்று கூறப்பட்டிருக்கின்றது. இவ்வாறு பல இடங்கள் உள்ளன. இங்ஙனம் சமணர்கள் சமயத்திற்குச் செய்த தொண்டுகள் யாவும் மொழித் தொண்டுகளாகவே வடிவு கொண்டு பல அரும்பெருந் தமிழ் நூல்களைத் தமிழ் மொழி பெற்றிருக்கின்றது.

சமண பௌத்த சமயங்களின் செல்வாக்குத் தமிழர்களிடம் ஒரு நூதன உணர்ச்சியையும், எதிர்த்து நிற்கும் ஆற்றலையும் உண்டாக்கிற்று. சைவமும் வைணவமும் நாளடைவில் பேராற்றலைப் பெற்றன. இவற்றுள் சைவசமயம் வீறுடன் வளர்ந்து பிற சமயங்களைத் துரத்தி அவைகளில் ஈடுபட்டிருந்த அரசர்களையும் தன்பால் இழுத்துக்கொண்டது. திருஞான சம்பந்தரால் கூன்பாண்டியன் மீண்டும் சைவ சமயத்தைத் தழுவியதும், திருநாவுக்கரசரால் மகேந்திர

5. ஷை-நூற்பா 74.

வர்மப் பல்லவன் சமண சமயத்தைவிட்டுச் சைவ சமயத்திற்கு வந்ததும், சிந்தாமணி என்ற நூலில் ஆழ்ந்த பற்றுக்கொண்டு சமண சமயத்தைத் தழுவியிருந்த இரண்டாம் குலோத்துங்க சோழனைச் சேக்கிழார் பெருமான் பெரிய புராணம் பாடிச் சைவ சமயத்தைத் தழுவும்படி செய்ததும் வரலாற்றுப் புகழ்பெற்ற நிகழ்ச்சிகளாகும். அப்பர், சுந்தரர், திருஞானசம்பந்தர், மாணிக்கவாசகர் ஆகிய நால்வரும் தேனினும் இனியவையும் கவிச்சுவை நிறைந்தனவும், அருள் உணர்ச்சியின் சுடர்போன்றனவும் ஆன தோத்திரப் பாக்களைப் பாடிக் குவித்திருக்கின்றனர். அப்பர், சுந்தரர், ஞானசம்பந்தர் ஆகிய மூன்று சமய குரவர்களும் பாடிய தேவாரப் பாக்கள் ஏழு திருமுறைகளாகவும், மாணிக்கவாசகர் அருளிய திருவாசகம் எட்டாம் திருமுறையாகவும் இன்று தமிழர்களின் கையில் திகழ்கின்றன. சேக்கிழார் அருளியுள்ள பெரிய புராணம் பக்திரசம் சொட்டும் சிறந்த தமிழ்க் காப்பிய இலக்கியமாக விளங்குகின்றது; சைவர்களுக்கு அஃது ஒரு பாராயணம் செய்யும் நூலாகவும் இருக்கின்றது. இதைத் தவிர, இன்று பரஞ்சோதியார் திருவிளையாடற் புராணம், கச்சியப்பருடைய கந்தபுராணம் ஆகியவை சிறந்த சைவ இலக்கியங்களாகக் கருதப்படுகின்றன.

சைவம் ஓங்கிய காலத்தில் வைணவமும் ஓங்கியது. வைணவ சமயத்தைப் பரப்பிய பன்னிரு ஆழ்வார்களும் தங்களுடைய பக்திப் பெருக்கையும், சமயக் கொள்கைகளையும், தத்துவங்களையும் கவிதை மணத்துடன் நெஞ்சை உருக்கும் செஞ்சொற் பாசுரங்களில் பாய்ச்சி இருக்கின்றனர். ஆழ்வார்கள் பாடும் பாசுரங்கள் யாவும் இன்று 'நாலாயிர திவ்வியப் பிரபந்தம்' என்ற நூல் வடிவில் தமிழர் கையில் இருக்கின்றன. இவை இயற்றப்

பட்டிராமல் இருந்தால், தமிழ் இலக்கியக் கருவூலம் அளவில் எவ்வளவு குறைவுபட்டிருக்கும் என்று சொல்லத் தேவையில்லை.

சமணர்களுக்குக் காவியமாகச் சிந்தாமணியும் சைவர்களுக்குக் காவியமாகத் பெரிய புராணமும் விளங்குவதுபோல, வைணவர்களுக்குக் கம்பராமாயணம் சிறந்த காவியமாக விளங்குகின்றது. உலக மகா காவியங்களில் தலை சிறந்தது என்ற பெரும் புகழையும் பெற்று விளங்குகின்றது; இதில் தமிழ்க் கவிதா மண்டலத்தின் உன்னதமான கொடுமுடியும், கற்பனை உலகத்தின் விரிவும், பொலிவும், தமிழர்களின் கலைவளமும் பிறவும், தமிழ்ச் சொற்களின் ஆற்றலும், தமிழ் நடையின் சிறப்பும் ஒருங்கே விளங்குகின்றன.

படிகொண்ட கீர்த்தி இராமாயணம் என்னும்
பக்தி வெள்ளம்

என்பது இராமானுச நூற்றந்தாதியின் அடி. இது பக்தியாற் பிறந்த நூல் என்பதைக் காட்டுகின்றது.

புதிய ஊக்கத்துடன் தமிழ் நாட்டில் ஏற்பட்ட சமய உணர்ச்சி பலப்பட்டு வந்ததன் காரணமாக அரசர்களும் அதில் ஈடுபட்டுச் சமய வளர்ச்சிக்கு ஆதரவு அளித்தனர். சமயப் பற்றுால் கல்வியில் ஈடுபட்டு அதைச் சமயப் பிரசாரத்திற்கும் முக்கிய கருவியாகக் கருதினர். அதன் காரணமாக இலக்கியங்கள் வளர்ச்சியடைந்தன. கற்ற அறிஞர்கள் சமயங்களில் ஈடுபட்டதால் முறையான தத்துவ நூல்கள் பிறந்தன. சங்கரர், இராமானுசர் போன்ற அறிஞர்கள் ஒரு சில முதனூல்களுக்குப் பேருரைகளைச் (பாஷ்யங்கள்) செய்தனர். சைவர்களும் சிவஞான போதம், சிவஞான சித்தியார் போன்ற சமய

நூல்களை இயற்றித் தமது சமயத்தை ஒரு தனித் தத்துவ முறையில் அமைந்தனர்.

இதன் பிறகு பல உரையாசிரியர்கள் தோன்றித் தமிழ் இலக்கியங்களின் வளத்தைத் தமிழர்களுக்கு விளக்கினர். பண்டைத் தமிழ் இலக்கியங்களுக்கு இவர்கள் செய்த உரைகளையன்றி சமய நூல்களுக்கும் உரைகளைச் செய்துள்ளனர். இத்துறையில் நச்சிஞர்க்கினியர், பரிமேலழகர் போன்றவர்கள் சிறந்தவர்கள். சைவ சமயத்தைச்சார்ந்த நச்சிஞர்க்கினியர், சமண இலக்கியமாகிய சிந்தாமணிக்கும் உரை செய்திருக்கின்ருர்! சமய நூல்களுக்கு உரை செய்தவர்களில் திவ்வியப் பிரபந்தத்திற்கு உரை செய்த பெரியவாச்சான் பிள்ளை தலைசிறந்தவர். சிவஞான போதத்திற்குச் சிவஞான முனிவர் சிவஞான மாபாடியம் என்ற பேருரை ஒன்று கண்டிருக்கின்ருர். உரையாசிரியர்களின் நுண்மாணுழை புலம் நுட்பமான சமயக் கருத்துக்களை விளக்கி நிற்கின்றது.

சோழப் பேரரசுகள் வலி குன்றித் தேய நேர்ந்த காலத்தில் சமய முறைகளை ஆட்சி செய்யவும் தத்துவ அறிவை வளர்க்கவும் மடங்கள் நிறுவப்பெற்றன. சைவத்திற்கும் வைணவத்திற்கும் மடங்கள் ஏற்பட்டன. மடங்களின் ஆட்சி முதிர்ந்த பற்றற்ற துறவிகள் வசம் ஒப்புவிக்கப்பெற்றது, திருவாவடுதுறை ஆதீனம், தருமபுர ஆதீனம், காஞ்சீபுரம் ஞானப்பிரகாசர் ஆதினம், சூரிய நயினர்கோயில் ஆதீனம் போன்றவைகளும் வீரசைவ மடங்களும் சமயத் தொண்டுடன் தமிழ்த் தொண்டையும் செய்து வந்தன. இக்காலத்தில் தல புராணங்கள் ஏராளமாகத் தோன்றின. இவ்வாறு தல புராணங்களை மிகுதியாக இயற்றியவர் சென்ற

நூற்றுண்டில் இருந்த திரிசிரபுரம் மகா வித்துவான் *மீனுட்சிசுந்தரம் பிள்ளை* அவர்கள் ஆவர். அவர்கள் மட்டிலும் பன்னிரண்டு தல புராணங்களை இயற்றி இருக்கின்றனர். இத்தல புராணங்களுள் காஞ்சிப் புராணம், திருத்தணிகைப் புராணம் என்பவை இலக்கிய நயமுடையவை. இப்புராணங்கள் யாவும் பெருங்காப்பிய நடையில் எழுதப்பட்டுள்ளன. இவை யாவும் கவிதைப் பண்புகள் இல்லாத வெறும் செய்யுட் குவியல்களாகக் (heap of verses) காட்சியளிக்கின்றன.

சமய நூல்கள் புராணங்களாக ஆக்கப்பட்டு வருவதைக் கண்ட இஸ்லாமியர்களும் கிறித்தவர்களும் தத்தம் சமய நூல்களையும் தமிழில் புராண வடிவில் ஆக்க எண்ணினர். இவற்றைப் படித்தால் மக்கள் தம் சமயங்களை நாடுவர் என்றும் கருதினர்; சமயம் மாறிய மக்கள் படிக்கவும், புராண வடிவில் தம் சமயக் கருத்துக்களை உணர்த்தவும் தக்க நூல்கள் தேவையாக இருந்தன. முதன் முதலாக இத்தாலிய நாட்டுப் பாதிரியான *வீரமாமுனிவர்* என்பார் தமிழில் 'தேம்பாவணி' என்ற ஓர் உயர்ந்த காவியத்தைப்பாடினுர். இஃது ஏசுநாதரின் வளர்ப்புத்தந்தையாகிய சூசையப்பர் வரலாற்றைக் கூறுவது; முப்பத்தாறு படலங்களையும் 3615 திருவிருத்தங்களையும் கொண்டது. நமது நாட்டுக் கிறித்தவப் பெரியார் *அரிகிருஷ்ணபிள்ளை* என்பார் 'இரட்சண்ய யாத்ரீகம்' என்ற காவியத்தைச் செய்திருக்கின்ருர். இஃது ஆங்கிலப் புலவர் *ஜான் பனியன்* இயற்றிய 'யாத்ரீகனின் முன்னேற்றம் (Pilgrim's Progress) என்ற கற்பனை நூலைத் தழுவி எழுதப்பட்டதாகும்; ஐந்து பருவங்களையும் 3800 செய்யுட்களையும் கொண்டது இந்நூல். இவரால் இயற்றப்பட்ட 'இரட்சண்ய மனோகரம்' என்ற நூலிலுள்ள பாட்டுக்கள்

தேன்போல் இனிமை சொட்டும் தேவாரப் பாடல்கள் போலிருக்கின்றன. சொல்லா விட்டால் அவற்றை எவரும் தேவாரப் பாடல்கள்தாம் என்றே கருதுவர்.

கடிகைமுத்துப் புலவரின் சீடரும் எட்டையபுர மன்னரின் அவைக்களப் புலவருமான உமறுப் புலவர் என்ற இஸ்லாமியர் சுமார் ஆறுயிரம்பாட்டுக்கள் அடங்கிய சீருப் புராணத்தை இயற்றியிருக்கின்றார்; இது கவிதைச் சுவையும் இலக்கிய இன்பமும் செறிந்த ஓர் உயர்ந்த தமிழ்க் காவியம் ஆகும். குமணங்குடி மஸ்தான் சாயபுப் பாடல்களும் சதகங்களும் கிட்டத்தட்ட தமிழ் நாட்டுச் சித்தர்கள் பாடிய பாடல்களின் முறையில் அமைந்திருக்கின்றன என்று சொல்லலாம்.

சில நூற்றுண்டுகளில் மடங்களின் ஏற்றம் குறைந்து. உண்மையான சமய உணர்ச்சியும், ஒழுக்க நெறியுமற்ற துறவிகள் மடாதிபதிகளின் இடத்தைப் பெற்றபோது சமயங்களின் உண்மையொளி மங்கிற்று. ஆனல், இக்காலத்தில் வைணவத்தில் வேதாந்த தேசிகரும், சைவத்தில் சிவஞான முனிவரும் பல நல்ல நூல்களை இயற்றியுள்ளனர். தாயுமான அடிகள், இராமலிங்க அடிகள், குமரகுருபர அடிகள், பட்டினத்து அடிகள் போன்ற பெரியார்கள் ஏராளமான கவிதைகளைப் பொழிந்திருக்கின்றன; இசைச் சுவை நிறைந்த அவை பக்திச் சுடருடன் திகழ்கின்றன. இவை யாவும் சமய சம்பந்தமான பாடல்களே.

இஸ்லாமியர் படையெடுப்பாலும் பிற அரசியற் குழப்பங்களாலும் அமைதியற்றிருந்த நாடு விசய நகர அரசர்களது ஆட்சியிலும் அவர்களின் பிரதிநிதிகளின் கீழும் ஒருவாறு அமைதியுடன் இருந்தது. இக்காலத்தில்

பாமர மக்களின் மனத்தின்மீதும் இலக்கிய வானம் கவிந்தது. அவர்கள் சுவைத்து அநுபவிக்கக் கூடிய முறையில் கவிதை வெள்ளம் பெருக வேண்டும் என்ற கருத்து கருக்கொண்டு வளர்ந்து வெற்றியும் பெற்றது. புதுக்காப்பியஞ் செய்யப் புகுந்த கவிஞர்கள் தாமறிந்த மக்களையும் அவர்கள் வாழ்க்கையையும் பொருளாக அமைத்துப் பாடினர். அக் காவியங்கள் யாவும் சாதாரணமாகக் கடவுள்மீதுதான் அமைந்தன. இவற்றுள் *திரிகூட ராசப்பக் கவிராயர்* செய்த 'குற்றாலக் குறவஞ்சி'யும், *மதுரகவிராயர்* செய்த திருக்கச்சூர் 'நொண்டி நாடக'மும், பெயர் தெரியாத ஆசிரியர் ஒருவர் செய்த 'முக்கூடற் பள்ளு'ம் மிகவும் சிறப்படைந்தன. இதே காலத்தில் தோன்றிய *அருணாசலக் கவிராயரின்* 'இராம நாடகம்', *கோபாலகிருஷ்ண பாரதியாரின்* 'நந்தன் சரித்திரம்', *அண்ணாமலை ரெட்டியாரின்* 'காவடிச்சிந்து', *அருணகிரியாரின்* 'திருப்புகழ்' என்பன மக்கள் மனத்தைக் கவர்ந்துள்ளன இவை யாவும் சமயச் சார்புள்ள நூல்களே.

தாங்கள் சமயப் பிரசாரம் செய்யும் பொது மக்களிடையே போதுமான தமிழறிவு இல்லாததற்குக் காரணம் தமிழில் உரைநடை நூல்கள் இன்மையே என்று மேனாட்டுக் கிறித்தவ அறிஞர்கள் அறிந்தனர். முதன் முதலில் *வீரமா முனிவர்* பொதுமக்களுக்கென்று 'பரமார்த்த குருகதை' என்ற நகைச்சுவை ததும்பும் உரை நடை நூல் ஒன்றை வெளியிட்டார். இதுதான் தமிழில் தோன்றிய முதல் உரை நடை நூல் என்று அறிஞர்கள் கருதுகின்றனர், பின்னர், அவர் கிறித்தவ மத போதகர்களுக்கென "வேதியர் ஒழுக்கம்" அல்லது "உபதேச ரத்னாகரம்" என்ற உரை நடை நூலை எழுதினார். பாதிரிமார்கள் தங்கள் சமய நூல்களை மொழி

பெயர்த்தது போலவே, தமிழர்களும் பாரதத்தையும் கம்பராமாயணத்தையும் உரை நடையில் எழுதினர். சைவப் பெரியார் யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலர் ஆங்கிலமும் கற்றுப் பெரிய புராணம், திருவிளையாடற் புராணம் முதலிய சைவ இலக்கியங்களை உரை நடையில் வெளியிட்டுப் பாதிரிமார்களை எதிர்த்துப் பிரசாரம் செய்தார். இவ்வாறாக முதலில் தோன்றிய உரை நடை நூல்கள் யாவும் சமயச் சார்பாகவே இருத்தல் கவனிக்கத் தக்கது.

இந்த நூற்றாண்டில் தேசீய உணர்ச்சியால் பாடப் பெற்ற பாடல்கள் யாவும் சமயச் சார்பாக இராவிடினும், தமிழ்த்தாய், பராசக்தி, காளிதேவி, கண்ணன் ஆகியவர்கள் மீது பாடப்பெற்றுள்ள பாட்டுக்கள் யாவும் சமயச் சார்பற்றவை என்று சொல்வதற்கில்லை. சுதந்திரத்தேவி மீது பாடியுள்ள பாட்டுக்களில் தெய்வ உணர்ச்சியின் மணம் கமழத்தான் செய்கின்றது.

ஆகவே, சங்க காலத்திலிருந்து இன்று வரை தமிழில் தோன்றியுள்ள இலக்கியங்களில் பெரும்பாலானவை சமயச் சார்பாக உள்ளன என்பதும், சமயப் பிரசாரத்திற்கு இலக்கியங்களைத் துணையாகக் கொண்டனர் என்பதும், இந்நாட்டில் பிறந்த சமயங்களும் புகுந்த சமயங்களும் செய்த சமயத் தொண்டுகளே இலக்கியச் செல்வத்தை மிகுவித்தன என்பதும் நாம் அறியும் உண்மைகளாகும். ஆதலால் பண்டிருந்தே மொழிக்கும் சமயத்திற்கும் நெருங்கிய உறவு ஏற்பட்டு அந்த உறவால் இரண்டும் வளர்ந்து வளமடைந்து வருகின்றன என்பது ஆராய்ச்சிக் குரியது.

# 8. பௌத்தர்கள் வளர்த்த பைந்தமிழ்*

நமது நாட்டைப் பொறுத்தவரை சமயத் தொண்டும், மொழித் தொண்டும் இணைந்து செல்கின்றன என்று கூறலாம். தமிழ் இலக்கிய வரலாற்றைப் பார்த்தால் சமயவளர்ச்சி தமிழ் வளர்ச்சிக்கு எவ்வாறு துணைபுரிந்திருக்கின்றது என்பது தெரியவரும். சமய மாற்றம் செய்வதற்காக நமது நாடு போந்த சமயத் தொண்டர்கள் யாவரும் தாய்மொழியின் ஆற்றலை நன்குணர்ந்தவர்கள். பிறந்தது முதல் இறக்கும்வரை மக்கள் கருத்தினைப் பிறருக்கு உணர்த்தி உதவக்கூடிய தாய்மொழி மூலம்தான் கருத்துக்களை எளிதாக உணர்த்த முடியும் என்ற பேருண்மையை நன்கறிந்த மூதறிஞர்கள் அவர்கள். இந்த உண்மையை இன்றைய அரசியலாரும் கல்வி நிபுணர்களும் ஓரளவு உணர்ந்து வருகின்றனர். ஓரளவு உணர்ந்தாலும் விரைந்து செயலாற்றத் தயங்குவது வருந்தத்தக்கதாகும்; விடுதலை பெற்ற நாட்டில் அது நாணப்படத்தக்க செய்தியுமாகும்.

*பௌத்த சமயம் தமிழ்நாட்டில் பரவிய காலம்:* வடநாட்டிலிருந்து தமிழ் நாடு போந்து செல்வாக்குப் பெறுவதற்காகப் போட்டியிட்ட பௌத்தம், சமணம்,

---

* 'குமரிமலரில்' (ஜுலை - 1956) வெளிவந்தது.

வைதிகம், ஆசீவகம் ஆகிய நான்கு சமயங்களில் முதன் முதலாக வெற்றியடைந்து செல்வாக்குப் பெற்றது பௌத்த சமயமே. பௌத்த சமயப் புலவர்கள் இயற்றிய ஒரு சில செய்யுட்கள் கடைச் சங்க காலத் தொகைநூல் களுள் காணப்பெறுவதால் பௌத்த சமயம் கடைச்சங்க காலத்துக்கு முன்பே தமிழ்நாட்டில் நன்கு வளர்ச்சி பெற்றிருக்கவேண்டும் என்று ஊகிக்க இடமிருக்கின்றது. எடுத்துக்காட்டாக, 'மணிமேகலை' என்ற காவியத்தை இயற்றிய *மதுரை கூலவாணிகன் சாத்தனூர்* இயற்றிய பாடல்கள் அகநாநூறு, புறநாநூறு, நற்றிணை, குறுந்தொகை என்னும் எட்டுத் தொகை நூல்களில் காணப்படுகின்றன. *இளம்போதியார்* என்ற பௌத்தப் புலவர் இயற்றியுள்ள செய்யுள் ஒன்று நற்றிணையில் 72-ஆம் பாட்டாகத் தொகுக்கப் பெற்றிருக்கின்றது; அன்றியும், அசோகர் வெட்டுவித்த கல் வெட்டுக்கள்[1] வாயிலாகவும் பௌத்த சமயம் கடைச் சங்க காலத்துக்கு முன்பே தமிழ்நாடு போந்தமை அரண் செய்யப்பெறு கின்றது. இக் கல்வெட்டுக்கள் அசோகச் சக்கரவர்த்தி காலத்தில் நமது நாட்டிலும், தமிழ் நாட்டிலும், பிறநாடு களிலும் மருத்துவ நிலையங்களை அமைத்த செய்தியையும் பௌத்த நெறியைப் பரப்பியதையும் தெரிவிக்கின்றன. எனவே, கி. மு. மூன்றும் நூற்றுண்டிலேயே பௌத்த சமயம் தமிழ்நாட்டில் பரப்பப் பெற்றமையை அறிகின்றோம்.

***'சங்கத்தின்' மூலம் தொண்டு:*** பௌத்தர்களால் போற்றப்பெறும் மும்மணிகளில் ஒன்ருகிய சங்கத்தின் மூலமாகத்தான் பௌத்தபிட்சுக்கள் பௌத்த சமயத்தை

1 Rock Edict (ii); Rock Edict (iii)

உலகெங்கும் பரப்பினர். புத்தர் நிர்வாண நிலையை எய்திய பிறகு அவரைப் பின்பற்றி யொழுகிய பிட்சுக்கள் பல நாடுகளுக்குச் சென்று சங்கங்களை அமைத்துக் கொண்டு தம் சமயத்தைப் பிரசாரம் செய்தனர். தமிழ் நாட்டில் அரசர்கள், வணிகர்கள், செல்வர்கள் முதலி யோரிடம் பொருளுதவி பெற்று ஆங்காங்கு விகாரை களையும் பள்ளிகளையும் நிறுவிச் சமயப்பணி புரிந்தனர். பௌத்தத் துறவிகள் தம்மிடம் வரும் பிணியாளர்கட்கு இலவசமாக மருந்து கொடுத்தும், சிறுவர்கட்கு இலவசக் கல்வி நல்கியும் பணியாற்றினர். சாதிவேறுபாடு கருதாது அவர்கள் அளித்த தொண்டு மிகவும் பாராட்டற்பாலது. தாய்மொழி மூலம் தற்சமயம் தமது கோட்பாட்டை பரவச் செய்யும் கருத்துடைய இவர்கள் தமிழ்நாட்டிலிருந்த போது தமிழ் மொழியைக் கற்று அதன் மூலம் தம் சமயக்கருத்துக்களைப் பரப்பினர். சிறுவர்களுக்கும் தாய் மொழியைக் கற்பித்து வந்தனர். 'பள்ளிக்கூடம்' என்ற சொல்லே இதனை நன்கு விளக்கும். பௌத்த பிட்சுக்கள் வாழ்ந்த மடங்களைப் 'பள்ளி'என வழங்குவர். அப்பள்ளி களின் கட்டிடங்களில் பாடசாலைவைத்து சிறுவர்களுக்குப் பயிற்றினதால் அந்த இடங்களுக்குப் 'பள்ளிக்கூடம்' என்ற பெயர் உண்டாயிற்று. பௌத்த சமயம் நம் நாட்டைவிட்டு மறைந்த பிறகும் 'பள்ளிக்கூடம்' என்ற சொல் தமிழ் மொழியில் நிலைத்து விட்டது. பௌத்தர்கட் யகுரி சிறப்பான நாட்களில் பொதுமக்களைத் தம் பள்ளிகளுக்கழைத்து திரிபிடகம், புத்தஜாதகக் கதைகள், புத்த சரித்திரம் முதலிய நூல்களை ஓதி அவர்கட்குச்சமய போதனையை அளித்தனர். இன்று தமிழ்நாட்டிலுள்ள கிறித்துவப் பாதிரிமார்கள் அவ்வாறுதானே தம் சமயத்தைப் பரப்பி வருகின்றனர்? கல்வி நிலையங்களையும் ஓரளவு சமயத்தைப் பரப்பும் சாதனங்களாகக் கொண்டுள்ளதை எவரும் எளிதில் அறியலாம்.

**தமிழ் பௌத்தப் புலவர்களும் அவர்கள் இயற்றிய நூல்களும்:** பௌத்த சமயம் தமிழ் நாட்டில் செல்வாக்குப் பெற்றிருந்த காலத்தில் பல பௌத்த சமயப் புலவர்கள் வாழ்ந்திருந்தனர். சீத்தலைச் சாத்தனுர், இளம்போதியார் நாதகுத்தனுர், புத்தமித்திரர், பெருந்தேவனுர் போன்றவர்கள் யாவரும் புத்த சமயத்தைச் சேர்ந்தவர்களே. இவர்கள் பல தமிழ் நூல்களை இயற்றித் தமிழ் மொழிக்கு ஏற்றம் அளித்தனர். அவ்வாறு இயற்றப் பெற்ற நூல்களுள் ஒரு சிலவற்றைத் தவிர எல்லா நூல்களும் அழிந்து பட்டன. பௌத்த சமயத்திற்குப் பெரும்பகைவர்களாக இருந்த சமணரும் வைதிகரும் அவற்றை அழித்திருக்க வேண்டும் என்று ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர். பௌத்த சமய வீழ்ச்சிக்குப் பிறகு நடைபெற்ற சமயப் போரில் வைதிக மதம் சமணமதத்தை அழித்துவிட்ட போதிலும், ஒரு சில சமணர்கள் தமிழ்நாட்டில் ஆங்காங்கு இல்லாமல் இல்லை. எனவே, சமண நூல்களை இவர்கள் காத்து வந்தனர். தமிழ் நூல்களைப் பாதுகாக்கத் தமிழ்ப் பௌத்தர்கள் இல்லாமையால் அவை அழிந்துபட்டன. இலங்கை, பர்மா முதலிய நாட்டு பௌத்தர்கள் பாது காத்தமையால் பாலிமொழியிலுள்ள தமிழ் நாட்டுப் பௌத்த ஆசிரியர்கள் இயற்றிய நூல்கள் மட்டிலும் அழிந்துபடாமல் இன்றும் நின்று நிலவுகின்றன. இப்போது தமிழில் இறந்து படாமலுள்ள பௌத்த நூல்கள் இரண்டே; ஒன்று. **மணிமேகலை** என்ற பௌத்த காவியம்; மற்றொன்று, **வீரசோழியம்** என்ற இலக்கணம். இவை இரண்டுதாம் முழுநூல்களாகக் கிடைத்திருப்பவை. இவற்றைத் தவிர நாலைந்து நூல்களின் பெயர்கள் மட்டிலும் வழங்கப்படுகின்றன. இனி, தமிழிலுள்ள பௌத்த நூல்களை ஒரு சிறிது நோக்குவோம்.

*மணிமேகலை:* மணிமேகலை ஐம்பெருங் காப்பியங்களில் ஒன்று. சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி ஆகிய ஐந்தும் ஐம்பெருங் காப்பியங்களாம். இவை பௌத்தர், சமணர் என்னும் இரு சமயத்தாராலும் இயற்றப்பெற்றவை. இவற்றுள் மணிமேகலை, குண்டலகேசி ஆகிய இரண்டும் பௌத்த நூல்கள். மணிமேகலை ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்ருகவைத்து எண்ணப்பட்டபோதிலும், அது சிலப்பதிகாரத்துடன் தொடர்புடையது. இதனை,

> மணிமேகலை மேல் உரைப்பொருள் முற்றிய
> சிலப்பதிகாரம் முற்றும்[2]

என்ற சிலப்பதிகார அடிகளால் அறியலாகும். மணிமேகலையை இயற்றியவர் *சீத்தலைச் சாத்தனர்:* இவர் மதுரையிலிருந்த ஒரு கூலவாணிகர். இவர் செங்குட்டுவன் அவைக்களத்தில் புலவராக இருந்திருக்கக் கூடும் என்று சிலர் கருதுகின்றனர். சேரன் செங்குட்டுவன் மலைவளங் காணச்சென்றிருந்த பொழுது மலைவாணர் மூலமாய்க் கண்ணகியின் செயலைக் கேட்டுத் திகைத்து நிற்க, இவர் அவள் வாலாற்றைத் தொடக்க முதல் இறுதிவரை விரிவாக எடுத்துரைத்தமையிலிருந்து இஃது உறுதிப்படுகின்றது.[3]

மணிமேகலை என்னும் காவியம் முழுவதும் ஆசிரியப் பாவினுல் அமைந்தது. இது 'கதை பொதி பாட்டு' என வழங்கும் பதிகத்தைத் தவிர 'விழாவறை காதை' முதலாகப் 'பவத்திறமறுகெனப் பாவை நோற்ற காதை' இறுதியாக முப்பது கதைகளையுடையது. இதற்கு **'மணிமேகலைத் துறவு'** என்ற மற்ருெரு பெயரும் உண்டு.

2. வஞ்சிக் காண்டம்: நூற்கட்டுரை: வரி (17—18)
3. வஞ்சிக் காண்டம்-காட்சிக் காதை: வரி (69-92)

சாத்தனார் இந்நூலை இளங்கோவடிகள் முன்னிலையில் அரங்கேற்றினர். இவற்றை

இளங்கோ வேந்தன் அருளிக் கேட்ப
வளங்கெழு கூல வாணிகன் சாத்தன்
மாணவன் டமிழ்த்திற மணிமேகலைத்துற
வானறம் பாட்டினுள் அறிய வைத்தனனென்[4]

என்ற அடிகளால் அறியலாம். மணிமேகலை சொல்நயம், பொருள் நயம் செறிந்து விளங்கும் ஒரு சுவை மலிந்த காவியம். பண்டைத் தமிழ் நாட்டின் வரலாறு, கலைகள், நாகரிகம், சமயங்கள், ஒழுக்கங்கள் முதலியவற்றை அறிந்துகொள்ளப் பெரிதும் பயன்படுகின்றது. சுருங்கக் கூறின், இந்நூல் தமிழ்த் தாயை அணி செய்யும் ஒரு மணிமேகலையாகவே இலங்குகின்றது.

*வீரசோழியம்:* 'வீரசோழியம் என்பது தமிழில் ஐந்திலக்கணங்களையும்[5] சுருக்கிக் கூறும் இலக்கண நூல்களில் முதலாவது. இந்நூலை இயற்றியவர் 'பொன்பற்றி' என்னும் ஊரிலிருந்து சிற்றரசு புரிந்த 'புத்த மித்திரர்' என்பவர்; பௌத்த சமயத்தினர். இவற்றை,

மிக்கவன் போதியின் மேதக் கிருந்தவன்
மெய்த்தவத்தால்
தொக்கவன் யார்க்குத் தொடாவொண் ணாதவன்
தூயனெனத்
தக்கவன் பாதந் தலைமேற் புனைந்து
தமிழுரைக்கப்
புக்கவன் பைம்பொழிற் பொன்பற்றி மன்புத்த
மித்திரனே.

[மன் - அரசன்]

4 மணிமேகலை-பதிகம்-வரி (95-98) 5 ஐந்திலக்கணம்-எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்பவற்றின் இலக்கணமாகும்.

என்ற இந்நூற் பாயிரத்தின் முதற் செய்யுளால் அறியலாம். இந்நூலை இயற்றுவித்தவன் வீர இராசேந்திர சோழ மன்னனுவான். இதனை இந்நூற் பெயராலும், 'தேமேவிய தொங்கல் தேர்வீர சோழன் திருப் பெயரால் பூமேல் உரைப்பன்' என்ற பாயிரத்தின் மூன்றும் செய்யுட் பகுதியாலும் அறியலாம். 'மேவிய வெண்குடைச் செம்பியன் வீர இராசேந் திரன்றன், தாவியல் செந்தமிழ்' என்ற இந்நூலுக்கு உரை இயற்றியவர் பெருந்தேவனுர் என்பவர்; இவர் புத்தமித்திரனுரின் மாணுக்கர். இவர் பாரதம் பாடிய பெருந்தேவனுரினும், பிற்காலத்திலிருந்தபாரதவெண்பா பாடிய பெருந்தேவனுரினும் வேருனவர்.[6]

இந்நூலுக்கு 'வீர சோழியக் காரிகை' என்ற பிறி தொரு பெயரும் உண்டு. இது எழுத்ததிகாரம், சொல் லதிகாரம், பொருளதிகாரம், யாப்பதிகாரம், அலங்காரம் என்ற ஐந்து அதிகாரங்களைக் கொண்டது. எழுத்ததி காரம் சந்திப்படலம் என்னும் ஒரே படலத்தையுடைய 28 செய்யுட்களைக் கொண்டது. சொல்லதிகாரம் 9 செய்யுட்களை யுடைய வேற்றுமைப் படலம், 6 செய்யுட்களை யுடைய உபகாரகப் படலம், 8 செய்யுட்களை யுடைய தொகைப்படலம், 8 செய்யுட்களையுடைய தத்திதப்படலம், 11 செய்யுட்களை யுடைய தாதுப் படலம் 13 + 2 செய்யுட்களையுடைய கிரியா பதப் படலம் என்னும் ஆறு படலங்களையுடையது. ஏனைய பொருள், யாப்பு, அணி என்ற மூன்று அதிகாரங்களும் முறையே 21, 36, 41 செய்யுட்களையுடைய பொருட்படலம், யாப்புப் படலம், அலங்காரப் படலம் என்னும் ஒவ்வொரு படலமுடையன. நூற்பாயிரம் மூன்று செய்யுட்களைக் கொண்டது.

6 உரையில் இக் காலத்தில் வேறு எவ்விடந்தும் காணம்பெருத பல நூற்பாக்களும், பல செய்யுட்களும் உள்ளன; அவை இன்ன நூலைச் சார்ந்தவை என்று சொல்ல முடியவில்லை.

இந்நூல் இன்று வழக்கிலில்லை. கச்சியப்ப முனிவர் கந்த புராணத்தை இயற்றி அரங்கேற்றியபொழுது அப் புராணத்தில் வருகின்ற 'திகட சக்கரம்' என்னும் சொற்புணர்ச்சிக்கு இலக்கணம் காட்டும்படி அவையிலுள்ளோர் தடை நிகழ்த்தினர் என்றும், அதற்கு இந்நூலிலிருந்து இலக்கணம் காட்டப்பெற்ற தென்றும், பின்னர் அவையிலிருந்தோர் அப்புணர்ச்சியை ஒப்புக்கொண்டனர் என்றும் ஒரு வரலாறு கூறப்பெறுகின்றது. இதிலிருந்து அக்காலத்திலேயே இந்நூல்வழக்கொழிந்து விட்டமை பெறப்படுகின்றது.

இந்நூலும் இதன் உரையும் தமிழ்நாட்டின் வரலாறு, பௌத்த சமயக் கொள்கைகள் முதலியவற்றை அறியச் சிறிதளவு துணை புரிகின்றன. சோழர்கள் கூடல்சங்கமம் போன்ற இடங்களில் அயல் நாட்டு வேந்தரை வென்ற செய்திகளை உரையில் காட்டப் பெறும் மேற்கோட் செய்யுட்களால் அறியலாம். இவை கல்வெட்டுக்களால் உறுதி செய்யப்பெறுகின்றன. யாப்புப் படல உரையில் மேற்கோள்களாக வரும் புத்தரைப்பற்றிய அழகான பாடல்களினின்றும் பல பௌத்த சமயக்கொள்கைகளையும், புத்தர் பெருமானின் வரலாற்றுக் குறிப்புக்களையும் அறிந்துகொள்ளலாம். அவற்றையன்றி பௌத்தசமயம்பற்றிய செய்திகளை அறிவதற்கு வேறு கருவி நூல்கள் தமிழில் இல்லை. டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் அவர்கள் மணிமேகலைக் குறிப்புரை எழுதுவதற்கு அவை சிறந்த கருவியாக இருந்தன என்று கூறியுள்ளனர். குண்டலகேசி விருத்தம், கலிவிருத்தம், எலி விருத்தம், நரி விருத்தம், உதயணன் காதை, நியாய சூடாமணி, புதியா நுட்பம், யாப்பருங்கலம், தண்டியலங்காரம், வச்சத்தொள்ளாயிரம்

முதலிய நூல்களின் பெயர்கள் இந்நூலின் உரையில் கூறப்பெற்றுள்ளன.

இலங்கையில் சிங்களவர் தமிழ் பயின்றபொழுது பௌத்தரால் இயற்றப்பெற்ற இந்த இலக்கண நூலைக் கற்றிருக்கவேண்டும் என்று ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர்.

*இறந்துபட்ட ஒரு சில நூல்கள்:* குண்டலகேசி, சித்தாந்தத் தொகை, திருப்பதிகம், பிம்பசாரக் கதை ஆகிய நூல்கள் யாவும் இறந்து பட்டவை. இவற்றைப் பற்றிய ஒரு சில குறிப்புக்களை மட்டிலும் ஈண்டு தருவோம்.

*குண்டலகேசி;* குண்டலகேசி என்பது ஒரு தருக்கநூல்; பௌத்தசமயச் சார்பானது. ஒரு வணிகக் கன்னிகை புத்தர் பெருமானின் உபதேசம் பெற்று அருக சமயத்தை வென்று புத்த சமயத்தை யாண்டும் பரப்பிய கதையைக் கூறுவது. இது பெரும்பாலும் விருத்தப் பாவினால் யாக்கப்பெற்றதாதலின் இதனைக் '*குண்டலகேசி விருத்தம்*' என்றும் வழங்குவர். இந்நூலாசிரியர் *நாதகுத்தனார்* என்பவர். இந்நூல் இயற்றப்பெற்ற காலம் தெரியவில்லை. குண்டலகேசிக்கு விடையிறுத்துச் சமணக் கொள்கையை நிலைநாட்ட இயற்றப்பெற்றது *நீலகேசி* என்னும் நூல். சமயப் பொறாமையின் விளைவால் நீலகேசி நின்று நிலவ, குண்டலகேசி அழிந்துபட்டது. இவ்வாறு சமயக் காழ்ப்பு தமிழ்நாட்டிற்குப் பெருந் தீங்கை விளைவித்திருக்கின்றது.

அழிந்துபட்ட குண்டலகேசிச் செய்யுட்கள் "புறத்திரட்டு" என்னும் நூலில் காணப்படுகின்றன. தொல்காப்பிய உரை, யாப்பருங்கல விருத்தியுரை,

வீரசோழிய உரை ஆகியவற்றில் சில குண்டலகேசிச் செய்யுட்கள் மேற்கோள்களாகக் காட்டப்பெற்றுள்ளன. கீழ்க்கண்ட செய்யுட்களால் நூலின் செய்யுள் நடைப் போக்கை ஓரளவு அறியலாம்.

முன்றான் பெருமைக்க ணின்றான் முடிவெய்து காறும்
நன்றே நினைந்தான் குணமே மொழிந்தான் தனக்கென்
றொன்றானும் உள்ளான் பிறர்க்கே யுறுதிக் குழந்தான்
நன்றே யிறைவன் அவன்றாள் சரணங்க ளன்றே.

பாலையாந் தன்மை செத்தும் பாலனாந் தன்மை செத்தும்
காளையாந் தன்மை செத்தும் காமுறும் இளமை செத்தும்
மீளுமிவ் வியல்பு மின்னே மேல்வரு மூப்பு மாகி
நாளுநாட் சாகின் றேமால் நமக்குநாம் அழாத தென்னோ.

இந்நூலால் தமிழ்நாட்டின் பழக்க வழக்கங்கள், வரலாற்றுக் குறிப்புக்கள், அக்காலத்திலிருந்த சமயங்கள் அவற்றின் கொள்கைகள் முதலியவற்றையும் சிறப்பாக பௌத்த சமயக் கொள்கைகளையும் அம்மதத்தின் நிலைமையையும் அறிந்துகொள்ளக்கூடும்.

*சித்தாந்தத் தொகை:* இஃது இறந்துபட்ட நூல்களுள் ஒன்றாகும். இதனை இயற்றிய ஆசிரியர் பெயர், இயற்றப்பெற்ற காலம் முதலியவற்றை அறியக்கூடவில்லை. இது பௌத்தசமயக் கொள்கைகளைத் தொகுத்துக்கூறும் நூலாகும். *சிவஞானசித்திரியார்* என்னும் சைவ சமய நூலுக்கு ஞானப்பிரகாசரால் எழுதப்பெற்றுள்ள உரையில் கீழ்க்கண்ட செய்யுள் மேற்கோளாகக் காட்டப்பெற்றுள்ளது.

அருள்நெறியாற் பாரமிதை
யாறைந்தும் உடனடக்கி
பொருள்முழுதும் போதியின்கீழ்
முழுதுணர்த்த முனிவரன்றன்

அருள்மொழியா னல்வாய்மை
யறிந்தவரே பிறப்பறுப்பார்
மருள்நெறியாம் பிறநூலும்
மயக்கறுக்கு மாறுளதோ

அன்றியும், நீலகேசி புத்தவாதச் சருக்கம் 64-ஆம் பாட்டுரையில் 'மருள்தரு மனம்வாய் மெய்யிற் கொலை முதல் வினைபத்தாமே' என்பது சித்தாந்தத் தொகை'' என்றும் கூறப்பெற்றுள்ளது. இவற்றைத் தவிர இந்நூல்பற்றிய தகவல்கள் வேறொன்றும் கிடைக்க வில்லை.

***திருப்பதிகம்:*** இதுவும் இறந்துபட்ட நூலே. நூலின் பெயரைக் கொண்டு இது புத்தர் பெருமான்மீது பாடப்பெற்ற ஒரு தோத்திர நூல் என்று ஊகிக்க இடமுண்டாகின்றது. இந்நூல் இயற்றிய ஆசிரியர், இயற்றப்பெற்ற காலம் முலலியவற்றை அறியக்கூட வில்லை. சிவஞான சித்திரியார் உரையில்,

எண்ணிகந்த காலங்கள் எம்பொருட்டான் மிகவுழன்று
எண்ணிகந்த காலங்கள் இருள்தீர வொருங்குணர்ந்தும்
எண்ணிகந்த தானமும் சீலமும் இவையாக்கி
எண்ணிகந்த குணத்தினன் எம்பெருமான் அல்லனே.

என்ற செய்யுளை மேற்கோள் காட்டி 'இது திருப்பதிகம் எனக் கொள்க' என்று குறிப்பிட்டுள்ளார் ஞானப் பிரகாசர்.

***விம்பசாரக் கதை:*** இந்தப் பெயர்கொண்ட பௌத்த நூல் ஒன்றிருந்ததாக நீலகேசி 190-ஆவது பாட்டுரை யினால் அறியலாகும். நீலகேசி உரையாசிரியர்,

'உலும்பினி வனத்துள் ஒண்குழைத் தேவி
வலம்படு மருங்குல் வடுநோய் உருமல்
ஆன்றேன் அவ்வழித் தோன்றினன் ஆதலின்
ஈன்றேன் ஏழ்நாள் இன்னுயிர் வைத்தாள்.

என்ற நான்கு அடிகளையும் மேற்கோள் காட்டி, "இது விம்பசாரக்கதை என்னும் காவியம்; பௌத்தருடைய நூல்; அதன்கட் கண்டு கொள்க" என்று குறிப்பிட்டுள்ளார். இதே அடிகள் ஞானப்பிரகாசராலும் சிவஞானசித்தியார் உரையில் காட்டப்பெற்றுள்ளன. செய்யுள் நடையை நோக்கினுல் இக் காப்பியம் மணிமேகலையைப் போன்று ஆசிரியப்பாவினுல் அமைந்திருக்க வேண்டும் என்று கருத இடம் உண்டு.

*எழுத்துக்கலைத் தொண்டு:* பௌத்தர்களின் தமிழ்த்தொண்டு இலக்கிய வளர்ச்சியுடன் நின்றுபோக வில்லை; மொழித்துறையிலும் அவர்கள் தொண்டாற்றினர். *பிராமி எழுத்தைத்* தமிழ்நாட்டில் புகுத்தியவர்கள் பௌத்தர்களே. பிராமி எழுத்து புத்தர் பிரானுல் கண்டறியப் பெற்றது என்பது பௌத்தர்களின் நம்பிக்கை. இச்செய்தி **க்ஷேமேந்திரர்** என்பவரால் அவர் இயற்றிய 'புத்த ஜனனம்' என்னும் நூலில் கூறப்பெற்றுள்ளது. கி. மு. மூன்ரும் நூற்ருண்டில் அசோக மன்னரும் அவரால் பிறநாடுகளுக்கு அனுப்பப்பெற்ற பௌத்த பிட்சுக்களும் பிராமி எழுத்தை எல்லா இடங்களிலும் பரவச் செய்தனர். அசோகர் தமது கல்வெட்டுக்களில் பிராமி எழுத்தைப் பயன்படுத்தியதால் பிராமி எழுத்தை **அசோகர் எழுத்து** என்றும் வழங்குகின்றனர். பிராமி எழுத்து தமிழ்நாட்டில் வழங்கி வந்தமைக்கு இரண்டு சான்றுகள் உள்ளன. **ஒன்று:** பாண்டிய நாட்டிலுள்ள அழகர்மலை, திருப்பரங்குன்றம், கீழைவளவு, குன்றக்குடி,

சித்தர்மலை, கழுகுமலை முதலிய இடங்களிலுள்ள குகைகளில் பிராமி எழுத்துக்கள் காணப்பெறுகின்றன. இந்தச் சாசனங்கள் தமிழ் மொழியிலிருப்பினும், எழுத்துக்கள் பிராமி எழுத்தாக உள்ளன. **இரண்டு:** புதுச்சேரிக்குத் தெற்கே பத்துக் கல் தொலைவிலுள்ள **அரிக்கமேடு** என்று வழங்கப்பெறும் சிற்றூரில் பூமிக்கடியில் தோண்டி எடுக்கப்பெற்ற மட்பாண்டங்களில் காணப்படும் எழுத்துக்கள் பிராமி எழுத்துக்களே. எனவே, கி. பி. 1800-க்கு முன்னதாகவே தமிழ்நாட்டில் பிராமி எழுத்து வழங்கிவந்த செய்தி அறியப்படுகின்றது.

பிராமி எழுத்து வழங்கப்பெறுவதற்கு முன்னர் தமிழ் நாட்டில் ஏதோ ஒருவகை எழுத்து இருந்தது. கி. மு. மூன்றும் நூற்றுண்டிற்குப் பிறகு பிராமி எழுத்து வந்தவுடன் பழைய தமிழ் எழுத்து வழக்கொழிந்து விட்டது. என்றலும், நீண்டகாலமாக பிராமி எழுத்தில் இல்லாததும் தமிழில் மட்டிலும் உள்ளதுமான '*ற, ழ*' போன்ற எழுத்துக்களை மட்டிலும் விலக்காமல் பிராமி எழுத்துடன் சேர்த்துப் பண்டைத் தமிழர்கள் வழங்கியிருத்தல் வேண்டும் என்று ஊகம் செய்ய இடம் உண்டு. கடைச் சங்க காலத்தில் பிராமி எழுத்தே வழக்கில் இருந்திருக்கவேண்டும். பிராமி எழுத்திலிருந்து தோன்றியது **வட்டெழுத்து** ஆகும். நெடுங்காலம் தமிழர் இவ்வட்டெழுத்தையே வழங்கி வந்தனர். தமிழ்நாட்டிலுள்ள பௌத்தர்களும் சமணர்களும் பிராமி எழுத்திலிருந்து *கிரந்த எழுத்து* என்ற ஒரு புதுவகை எழுத்தை உண்டாக்கி அதைக் கொண்டு தம் சமய நூல்களை எழுதிவந்தனர். இந்தக் கிரந்த எழுத்திலிருந்துதான் இன்று வழங்கப் பெறும் தமிழ் எழுத்து உண்டாக்கப்பெற்றது; இதையும் கிரந்த எழுத்து என்றே வழங்குகின்றனர். சோழ நாட்டில்

மட்டிலும் இந்த எழுத்துவழக்கத்தில் இருந்தது. ஆனால், பாண்டிய நாட்டில் பழைய வட்டெழுத்தையே மக்கள் வழங்கி வந்தனர். கி. பி. பத்தாம் நூற்றாண்டில் சோழமன்னர்கள் கிரந்த எழுத்தைப் பாண்டிய நாட்டிலும் புகுத்தினர் என்பதைக் குற்றாலத்திலுள்ள கல்வெட்டுக்களால் அறியலாம். ஆனால், இன்றைய ஆராய்ச்சியாளர்கள் வட்டெழுத்து பிராமி எழுத்திலிருந்து தோன்றியதல்ல என்று கூறுகின்றனர்.

இவ்வாறு சமயத்தொண்டாற்றிய பௌத்தர்கள் தமிழையும் வளர்த்தனர். சமயத்தொண்டு, மொழித் தொண்டையும் இணைத்துச் செல்கின்றது. தமிழ் மொழியைப் பொறுத்தவரை சமயமும் மொழியும் பிரிக்க முடியாதவை.

# 9. கிறித்தவர்களின் தமிழ்த் தொண்டு*

தமிழ்மொழி தமிழகத்திலுள்ள எல்லாச் சமயத்தார்க்கும் உரிய செம்மொழியாக வழங்கி வருவதை எண்ணிப் பார்ப்பார் எளிதில் உணர்வர். தமிழகத்தில் பிறந்த சமயங்களும் புகுந்த சமயங்களும் தமிழைப் பேணி வளர்த்தமை, தமிழ் இலக்கிய வரலாறு காட்டும் சிறந்ததோர் உண்மை. தமிழ்மொழிக்குத் தொண்டு செய்தவர்களில் ஐரோப்பியரும் உளர்; ஆங்கிலேயரும் உளர். இவர்களில் பெரும்பாலோர் மேலை நாட்டு மொழிகளைப் பழுதற ஓதிப் பயன்பெற்ற பெரியார்கள். இவர்களில் சிலர் தமிழரின் கலைச்செல்வத்தை மேலை நாட்டாருக்குக் காட்டி, 'தேமதுரத் தமிழோசை உலகமெலாம் பரவும் வகை' செய்தனர். தமிழில் உரை நடைச் செல்வத்தை வளர்த்து, தமிழ்த் தாயைப் பேணினர் சிலர். இன்னும் சிலர் தமிழ் மொழியின் உயிர்நாடியாகவுள்ள இலக்கணங்களைத் தெளிவுபெறக் கற்று நம்மொழியின் தொன்மையையும் செம்மையையும் உணர்த்தி மேலை நாட்டார் நம் மொழியின் உயர்வை மெச்சும்படி செய்தருளினார். சிலர் தமிழ் மொழிக்கே புதியதோர் மொழியாராய்ச்சித் துறையை வகுத்துக்காட்டி 'திராவிட மொழிகள்' என ஒரு குடும்பம் உளது என்று

---

* 'குமரிமலரில்' (திசம்பர்-1953) வெளிவந்தது.

உலகோர்க்குணர்த்தி அழியாத புகழ் பெற்றனர். மற்றும் சிலர் மேனாட்டு முறையில் அகராதி தொகுத்து நம்மொழி கற்பவருக்குப் புதியதோர் வாயில் அமைத்தனர். இதனால் மேனாட்டார் 'தெள்ளூற்ற தமிழமுதின் சுவை' காண்பதற்கு எளிதாயிற்று. கற்கும்போது அகராதியின் அரிய துணையை அறிந்த நமக்கு இவ்வுண்மை எளிதிற் புலனாகும். இவ்வாறு தமிழ் மொழிக்கு ஏற்றத்தை அளிப்பதற்கு உழைத்த கிறித்தவப் பெரியார்களின் தமிழ் தொண்டை ஓரளவு ஆராய்வோம்.

*அச்சுப்பொறிகள்*: நமது நாட்டில் ஐரோப்பியர் தொடர்பு ஏற்பட்ட பிறகுதான் அச்சுப் பொறிகள்வந்தன. முதன் முதலாகக் கிறித்தவ சமயத்தை நம்நாட்டில் பரவச்செய்த ஏசுவின் சபைப் பாதிரிமார்கள் தாம் அச்சுப் புத்தகங்களை உண்டாக்கினர். இந்திய மொழிகளிலேயே முதன்முதலில் தமிழில்தான் அச்சுப் புத்தகங்கள் உண்டாயின என்பதை நாம் அறியும்போது உண்மையிலேயே பெருமிதங்கொள்ளுகின்றோம். பதினாறுவது நூற்றாண்டின் பிற்பகுதியில் நமது நாட்டில் பல இடங்களில் அச்சுப்பொறிகள் அமைக்கப்பட்டன. மலையாள நாட்டில் கொச்சியிலும், திருநெல்வேலியில் புன்னைக் காவல் என்ற இடத்திலும் பிறகு வைப்புக்கோட்டை, அம்பலக்காடு முதலிய இடங்களிலும் அச்சுப் பொறிகளை அமைத்தனர். அச்சுப் பொறியும் காகிதமும் ஏற்பட்ட பிறகுதான் கல்வி நாடெங்கும் விரைவில் பரவலாயிற்று. தோட்டி முதல் தொண்டைமான் வரை, பாமரர் முதல் பாவலர்வரை குறைந்த செலவில் நூற்களை வாங்கிப் படிக்க வாய்ப்பு ஏற்பட்டது. படித்தவர்களிடையே சமய உண்மைகள் பரவினால்தான் நல்ல பலன் காணலாம்

என்பதை நன்கு உணர்ந்த பாதிரிமார்கள், கல்வி பாமரரிடையேயும் சிறுவரிடையேயும் பரவுவதற்கு முதன் முதலில் சிறு சிறு தமிழ் நூல்களை எழுதி அச்சிட்டனர். எவரும் எழுதில் அறிந்துகொள்ளும்படியாகத் தமது சமய நூற் கொள்கைகளைத் தமிழில் எழுதச் செய்து சிறு சிறு நூல்களாக வெளியிட்டனர். 'பரதீஸ் தோட்டம்' (Garden of Paradise) 'ஞானக்கண்ணுடி' (True Christianity). 'கிறித்தவ வேதோபதேசம்' (Flos Sanctorum), 'கிறித்தவ வணக்கம்' (Doctrina Christiana) ஆகிய நூல்கள் அவற்றுள் சில. இவற்றைத் தவிர, போர்த்துகீஸ் தமிழ்ப் புத்தகம் (Portuguese Tamil Vocabulary), தமிழ் விவிலியம் (Tamil Bible) போன்ற நூல்களும் சிறு சிறு அகராதிகளும் நாளடைவில் வெளி வந்தன. சிறுவர்க்குப் பயன்படும் வரலாற்று நூல்கள், பூகோள நூல்கள், அறிவியல் நூல்கள், இயற்கைப் பொருள் நூல்கள், பிராணி நூல்கள் முதலிய நூல்களும் எழுதப் படிக்கத் தெரிந்தவர்கட்குப் பயன்படும் முறையில் செய்தித் தாள்கள், வார, திங்கள் இதழ்கள் முதலிய வெளியீடுகளும் வெளியிடப்பெற்றன. தமிழ்த் தாள் (Tamil Magazine), சுவிசேஷ பிரபல விளக்கம், சன சிநேகன், உதய தாரகை, சிறுபிள்ளையின் நேசத்தோழன், தினவர்த்தமானி, அருணோதயம், தத்துவ போதினி, விவேக விளக்கம், அமிர்தவசனி, கத்தோலிக் பாதுகாவலன், சத்தியவேதக் கொடி முதலியவை அத்தகையவெளியீடுகளுள் சில.

*தமிழ்நாட்டுக் கலைச் செல்வத்தைப் பரப்புதல்:* சமயப் பணிபுரிந்த கிறித்தவப் பெரியார்கள் நந்தமிழ் மொழியின் இலக்கண இலக்கியங்களை யெல்லாம் கற்று அவற்றை மேலை நாட்டில் பரவச் செய்தனர்.

திறமான புலமையெனில் வெளிநாட்டார்
அதை வணக்கம் செய்தல்வேண்டும்'![1]

என்று பாரதியாரின் கூற்றுப்படி நமது கலைச் செல்வங்களை மேனாட்டு மொழிகளில் பெயர்த்து மேனாட்டு மக்களிடையே பரவச் செய்தனர். *வீரமாமுனிவர்* (Father C. J. Beschi) என்ற வித்தகர் தமிழ் நூல்களுள் தலைசிறந்து விளங்கும் திருக்குறளில் அறத்துப்பாலையும் பொருட்பாலையும் இலத்தீன் மொழியில் பெயர்த்திட்டார். இந்த நூலே ஏனைய ஐரோப்பிய மொழிகளில் திருக்குறளைப் பெயர்த்திடப் பெருந்துணையாக இருந்தது. இதைத் துணையாகக் கொண்டுதான் *கிரால்* என்பவர் திருக்குறள் முழுவதையும் செருமானிய மொழியிலும், *போப்பையர்* (G. U. Pope) ஆங்கிலத்திலும் மொழி பெயர்த்திட்டனர். *ஏரியல்* என்ற அறிஞர் திருக்குறளின் ஒரு பகுதியைப் பிரெஞ்சு மொழியில் பெயர்த்திட்டார். *எல்லீசர்* என்பார் (Francis Whyte Ellis) பதின் மூன்று அதிகாரங்களில் சில பகுதிகளையும், *துருவர்* என்பார் அறுபத்து மூன்று அதிகாரங்களையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார். போப்பையர் திருக்குறளுடன் தம் மொழி பெயர்ப்பு வேலையை நிறுத்திக் கொள்ளவில்லை. நாலடியார், திருவாசகம் ஆகிய இரண்டு நூல்களையும், புறநானூறு, புறப்பொருள் வெண்பாமாலை ஆகியவற்றின் சில பகுதிகளையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்திருக்கின்றனர். சிலர் ஒலி என்பதெல்லாம் செந்தமிழ் முழக்கமாகவும், ஒளி என்பதெல்லாம் தமிழ்க் கலைகளாகவும் கண்டிருக்கின்றனர்.

---

1-கவிதைகள்—தமிழ்மொழி.

தாயெழிற் றமிழை, என்றன்
　　தமிழரின் கவிதை தன்னை
ஆயிரம் மொழியிற் காண
　　இப்புவி அவாவிற் றென்ற
தோயுறும் மதுவின் ஆறு
　　தொடர்ந்தென்றன் செவியில் வந்து
பாயுநாள் எந்த நாளோ?[2]

என்று இக்காலக் கவிஞன் கண்ட கனவை மேனாட்டுக் கிறித்தவப் பெரியார்கள் ஓரளவு நிறைவேற்றியிருக்கின்றனர்.

*பாட்டால் பனுவல் இயற்றிவர்கள்:* முறையாகத் தமிழ் கற்ற மேனாட்டு வித்தகர்கள் சிறந்த கவிஞர்களாகவும் திகழ்ந்தனர். நவில் தொறும் நூல்நயம் காட்டும் குறள், செழுஞ்சுவை சொட்டும் சிந்தாமணி, கவிதை இன்பம் கொழிக்கும் கம்பனின் இராம காதை ஆகிய நூல்கள் வீரமாமுனிவரின் மனத்தைக் கவர்த்தன. அந்நாளில் சிறந்த தமிழாசிரியர்களாகத் திகழ்ந்த *சுப்பிரதீபக் கவிராயர்* போன்றவர்களிடம் தமிழ் கற்ற முனிவர், சமண சமயத்தை விளக்கி நிற்கும் சிந்தாமணிபோல் தமது சமயத்தை விளக்கி நிற்கவல்ல ஒரு பெருங் காவியத்தைத் தமிழில் செய்ய அவாக்கொண்டார். அந்த ஆசையே தேம்பாவணி என்னும் அருங்காவியமாக வடிவெடுத்தது. இயேசு பெருமானைக் கைத்தாதையாக வளர்த்த சூசையப்பர் வரலாறுதான் இக்காவியத்தின் பொருள். இக்காவியத்தில் திருக்குறளின் சாறு பிழியப்பட்டு, கம்பர் கவிமணம் கமழும்படி பாடல்கள் வார்க்கப் பெற்றுள்ளன. காவியத்திலுள்ள பல பாடல்கள் கம்பன் பாணியில் அமைந்திருப்பதைக் காணலாம். இவர் இயற்றிய

2 பாரதிதாசன்—கவிதைகள்

இன்னொரு நூல் திருக்காவலூர்க் கலம்பகம் ஆகும். கொள்ளிட நதியின் வடகரையிலுள்ள ஏலாக் குறிச்சி என்ற சிற்றூரே திருக் காவலூர். அவ்வூரில் கட்டிய கோவிலில் எழுந்தருளியிருக்கும் தேவமாதா மரியம்மையின்மீது பாடப்பட்டதுதான் இப்பிரபந்தம். அடியார்களைக் காத்தருளும் அடைக்கல மாதாவின்மீது முனிவர் பாடிய பாக்களில் தமிழ்மணங் கமழ்கின்றது. நூலிலுள்ள பாக்கள் ஆழ்வார்களின் பாணியில் அமைந்திருக்கின்றன. நெடியோன் குன்றத்தின்மீது குலசேகராழ்வார் கொண்ட காதலால், மண்ணரசையும் விண்ணரசையும் விரும்பாது அம்மலையில் ஒரு மரமாக நிற்கவும், படியாகக் கிடக்கவும், ஆறுகப் பாயவும், மீனாகத் திரியவும் ஆசை கொள்ளுகின்றார்.[3]

ஆனாத செல்வத்து அரம்பையர்கள் தற்சூழ
வானாளும் செல்வமும் மண்ணரசும் யான்வேண்டேன்
தேனார் பூஞ்சோலைத் திருவேங்க டச்சுனையில்
மீனாய்ப் பிறக்கும் மதியுடையேன் ஆவேனே.

என்பது ஆழ்வாரின் ஆசைக்கனிகளில் ஒன்று. இத்தகைய ஆசைதான் வீரமாமுனிவரின் பாட்டிலும் காணப்படுகின்றது.

தாள்அணிந்த மதிமுதலாத் தமியனும்அக்
　　கமலத்தாள் தாங்கி லேனே
கோள்அணிந்த குழலணிதார் குடைவண்டாப்
　　புகழ்பாடி மதுவுண் ணேனே
வாள்அணிந்த வினைப்படைவெல் வலிசிங்கம்
　　ஈன்றஒரு மானாய் வந்தாள்
கேள்அணிந்த காவல்நல்லூர்க் கிளர்புனத்துப்
　　பசும்புல்லாய்க் கிடவேன் நானே.

*3. பெருமாள் திருமொழி: நாலாயிர திவ்வியப் பிரபந்தம்: பாசு. 677—687

என்பது வீர மாமுனிவரின் ஆசை. வேங்கட மலையில் எவ்வாறேனும் இருந்து வாழ விரும்பிய ஆழ்வாரைப் போலவே, வீரமாமுனிவரும் திருக்காவலூர்ச் சோலையில் புல்லாக நிற்கவும், வண்டாகத்திரிந்து மதுவுண்டு மரியம் மையின் மீது கீதம் பாடவும் விரும்புகின்றார். இன்னும் இவர் கிறித்தவசமயத்துறையில் தொண்டாற்றிய போர்த்துக்கீசிய நாட்டு நங்கையார் கித்தேரி அம்மாள் மீது ''கித்தேரியம்மாள் அம்மானை'' என்ற ஒரு பிரபந்த நூலையும் இயற்றியுள்ளார்.

நம் நாட்டில் பிறந்து கிறித்தவ சமயத்தில் புகுந்து சமயப் பணியாற்றியவர்களுள் நெல்லை நாட்டில் ரெட்டியார் பட்டி என்ற சிற்றூரில் தோன்றிய *அரிகிருட்டினப்பிள்ளை* என்ற புலவர்மணி தலைசிறந்தவர். அந்நாளில் சிறந்த தமிழ்ப் புலவராக விளங்கிய *திருப்பாடற்கடல்நாதன் கவிராயரிடம்* முறையாகத் தமிழ்க் கற்றவர். ஆங்கிலத்தில் ஜான் பனியன் என்பார் இயற்றிய The Pilgirim' s Progress (யாத்ரீகனின் முன்னேற்றம்)என்ற நூலின் கதையைத்தமிழில் 'இரட்சணிய யாத்திரிகம்'என்ற காவியமாக யாத்தார். பெருங்காப்பியம் தன்னிகரில்லாத் தலைவனுடையதாய் இருக்கவேண்டுமென்பது பெருங்காப்பிய இலக்கணம். பாவச்சேற்றில் படிந்து வாடிக் கவலையுற்ற உயிர் ஆன்ம இரட்சகரான கிறித்துப் பெருமான் அருளால் நிரந்தரத் தன்மையைப் பெற்றுப் பேரானந்தம் அடைந்த வரலாற்றை விரித்துரைக்கும் இக்காவியம் கிறித்துப் பெருமானையே தன்னேரில்லாத் தலைவனாகக்கொண்டு இலங்குகின்றது. சுமார் நாலாயிரம் பாடல்களில் அமைந்த இக்காவியத்தில் கம்பனின் காம்பீரியத்தையும் கற்பனைகளையும் வண்ணங்களையும் ஆசிரியர் கையாண்டு இருப்பதைக் காணலாம். ஆனந்தசைலப் படத்திலுள்ள

பாடல்களைக் கம்பனின் இராம காதையில் நாட்டுப்படலம், ஆற்றுப் படலம் ஆகியவற்றிலுள்ள பாடல்களுடன் ஒப்பிட்டுப் படிப்பார் ஓரளவு இவ்வுண்மையை எளிதில் உணர்வர். இவர் இயற்றிய 'இரட்சண்ய மனோகரம்' என்ற நூல் பல தோத்திரப் பாடல்களைத் தன்னகத்தே கொண்டது. இவை இயேசு பெருமானைப்பற்றிய பாடல்கள் என்று சொல்லாவிட்டால், அவற்றைப் படிப்போர் தேவாரப் பாக்களாகவே கருதுவர். இரட்சண்ய நவநீதப் படலத்திலுள்ள பாடல்கள் இறைவனது பேரின்ப வெள்ளம் பொங்கிப் பெருகி நிற்கும் நிலையினைக்கண்டு அதனைப் பருகுமாறு பரிந்தழைக்கும் தாயுமான அடிகளின் பாடல்களை நினைவுக்குக் கொண்டுவரும்.

கிருட்டிணப்பிள்ளையின் காலத்துக்குப்பல்லாண்டுகள் முன்னர் இருந்த **மாயூரம் வேதநாயகம் பிள்ளையும்** (மாவட்ட நீதிபதியாக இருந்தவர்) அவருடைய காலத்துக்குச் சற்று முன்னர் இருந்த தஞ்சை **வேதநாய சாஸ்திரியாரும்** சில செய்யுள் நூல்களைச் செய்திருக்கின்றனர். இருவருமே இசைத் தமிழில் ஆர்வம் மிக்கு பல கீர்த்தனைகளையும் இயற்றியுள்ளனர். பராபரன் மாலை, ஞானக்கும்மி, ஆதியானந்தம் முதலியவை சாஸ்திரியார் இயற்றியவை. அவர் காலத்தில் சிறப்பாகப் பாமர மக்களிடையே வழங்கிய குறவஞ்சி, பள்ளு, நொண்டி நாடகம் போன்ற பிரபந்தங்களின் பாணியில் 'பெத்தலேம் குறவஞ்சி' என்ற குறவஞ்சி நாடகத்தையும், 'சென்னப் பட்டணப் பிரவேசம்' என்ற நொண்டி நாடகத்தையும் இயற்றியுள்ளார். வேதநாயகம் பிள்ளை இயற்றிய நூல்களில் நீதி நூல், பெண்மதி மாலை, சர்வசமயக் கீர்த்தனம் ஆகியவை இன்றும் நம்மிடையே சிறப்பாக வழங்கி வருகின்றன.

*உரைநடைச் செல்வர்கள்:* ஐரோப்பியர் நம்நாட்டிற்கு வருவதற்கு முன்பு தமிழ் மொழியில் உரைநடை இல்லையென்றுதான் சொல்ல வேண்டும். அவர்கள் தொடர்பு ஏற்பட்ட பிறகுதான் தமிழில் தனி உரைநடை நூல்கள் முதன் முதலாக உண்டாக்கப்பட்டன. தமிழில் மட்டுமல்ல; எல்லா இந்திய மொழிகளிலும் ஐரோப்பியரின் தொடர்பிற்குப் பிறகுதான் தனி உரைநடை நூல்கள் தோன்றிப் பல்கின என்பதற்கு ஐயமில்லை. தமிழறிந்த ஐரோப்பியர்களில் காலத்தால் முற்பட்டவர் இத்தாலி நாட்டைச் சார்ந்த *தத்துவ போதகசாமி* (Robert de Nobili) என்ற அறிஞர் ஆவர். இவர் தமிழில் பல உரைநடை நூல்களை இயற்றினர். தமிழில் ஞானேபதேச காண்டம், மந்திர மாலை, ஏசுநாதர் சரித்திரம், தமிழ் போர்ச்சுகீசு அகராதி முதலிய பதினெட்டு நூல்களை இயற்றியிருப்பதாக அறிஞர்கள் குறிப்பிட்டிருக்கின்றனர். இவர் காலத்தில் தமிழ் நாட்டில் அச்சுப்பொறி இல்லாது இவர் நூல்கள் அச்சிடப்படாததாலும், அவற்றினைப் போற்றுவாரின்மை யாலும் அந்நூல்கள் யாவுமே இறந்துபட்டன.

இவருக்குப் பிறகு வந்த இத்தாலி நாட்டு அறிஞர் வீரமாமுனிவர்தான் தமிழில் உரைநடை நூல்களை எழுதி முதன் முதலில் அச்சிட்டவர் என்று சொல்லலாம். கிறித்தவ சமய போதகர்க்காக 'வேதியர் ஒழுக்கம்' என்ற உரைநடை நூலை முதன் முதலாக எழுதி வெளியிட்டார். அடுத்தபடியாக 'பாரமார்த்திக குருகதை' என்ற நகைச்சுவை ததும்பும் கதையை எழுதினர். எழுத்து வாதம், சொற்போர் செய்வதில் இவர் வல்லவரான படியால் வேத விளக்கம், பேதம் அறுத்தல் என்ற வாத நூல்களையும் உரைநடையில் எழுதி வெளியிட்டுள்ளார். புலவரும் சாதாரண மக்களும் படிப்பிதற்கு

ஏற்றபடி இருவித உரைநடை நூல்களை எழுதும் ஆற்றலைப் பெற்று விளங்கினார் முனிவர்.

வீரமாமுனிவருக்குப் பிறகு இத்துறையில் தொண்டாற்றியவர் *சீகன்பால்கு அய்யர்* (Berthalomew Ziegenbalg) ஆவார். இவர் செருமானியர். இவர் நூல்கள் ஒன்றும் இயற்றாதுபோயினும் தமிழ் நாட்டுப் பொது மக்களின் உபயோகத்திற்காகத் தமிழ் நூல்களை அச்சிட்டு வழங்கினார். தோட்டி முதல் தொண்டைமான் வரையில் அச்சுப் புத்தகங்களை வாங்கிப் படிக்க வாய்ப்பளித்த பெருமை இவரைச் சாரும். *எல்லிஸ் துரை* என்ற ஆங்கிலேயரும், தாம் ஒன்றும் தனியாக நூல்களை இயற்றாது போயினும் வீரமாமுனிவர் இயற்றிய நூல்கள் அனைத்தினையும் அச்சிடுவதற்கு உதவி புரிந்தார். இவர் தமிழ், வடமொழி ஆகிய இரண்டிலும் நல்ல புலமையுடையவர். தமிழ்மொழியின் வரலாற்றைத் தொகுத்து இவர் எழுதி வைத்திருந்த ஆராய்ச்சிக்குறிப்புக்கள் நூல் வடிவு காணப்பெறாது மதுரையில் தீக்கிரையாயின.

இவருக்குப் பிறகு செருமானிய நாட்டிலிருந்து நம் நாடு போந்த *இரேனியஸ் அய்யர்* (Charles Theophilus Edward Rhenius) பேச்சாலும் எழுத்தாலும் தமிழ்த் தாய்க்குத் தொண்டாற்றினார். தம் கருத்துக்களைத் தெளிவாகப் பிறர் உணரும்படி பல உரைநடை நூல்களை எழுதினார். 'சமய சாரம்' போன்ற உரைநடை நூல்களில் அழகு, இனிமை, வகுத்தும் தொகுத்தும் கூறும் வனப்பு முதலிய பண்புகளைக் காணலாம்.

நம் நாட்டுக் கிறித்தவ அறிஞர்களில் தலைசிறந்த உரைநடைச் செல்வர் ***மாயூரம் வேதநாயகம்பிள்ளை*** ஆவர். அவரது பிரதாப முதலியார் சரித்திரம்

தலை சிறந்த ஒரு தமிழ் வசன காவியம்; நகைச் சுவை ததும்பி நிற்பது; புலவரும் பொது மக்களும் விரும்பிக் கற்கும் பெற்றி வாய்ந்தது. இந்நூலில்தான் தற்காலத் தமிழ் உரைநடை முதன் முதலாக உரு எடுத்திருக்கின்றது என்று சொல்ல வேண்டும்; நூலின் நடையில் எவ்வித விறைப்பும் இல்லை. வாக்கியங்கள் நல்ல சொற்களால் தொகுக்கப்பெற்று இலக்கியச் சுவையுடன் கருத்துக்களை நேராகத் தெளிவுபடுத்திச் செல்கின்றன. அவரது உரைநடை பின் வந்தோர்கட்கெல்லாம் ஒரு முன் மாதிரியாக இருந்தது என்று கூடச் சொல்லலாம்.

*தமிழ் இலக்கணத் தொண்டர்கள்:* மேனாட்டுக் கிறித்தவ அறிஞர்களில் *வீரமாமுனிவர்* மட்டிலுந்தான் தமிழில் எல்லாத் துறைகளிலும் தொண்டாற்றியுள்ளார். இவர் இலக்கணத் துறையிலும் தொண்டாற்றி அதனை வளப்படுத்தியிருக்கின்றார். முனிவர் தமிழ் மொழியிலுள்ள தொல்காப்பியம் முதல் நன்னூல் ஈறாகவுள்ள இலக்கண நூல்கள் அனைத்தையும் கற்று இலக்கணத்துறையில் நல்ல புலமையடைந்திருந்தார். எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்று ஐந்திலக்கணங்களும் அடங்கிய "தொன்னூல் விளக்கம்" என்ற அரியதோர் இலக்கண நூலை இயற்றினார். "அருந்தமிழ் இலக்கணம் ஐந்தையும் விரித்து விளக்கினன் வீரமாமுனியே" என்று அவர் நூலின் சிறப்புப் பாயிரம் கூறும். மேலைநாட்டுக் கருத்துக்களும் நூலில் அமைந்து அதனைச் சிறப்பிக்கின்றன. பேச்சு வழக்கிலும் நூல் வழக்கிலும் உள்ள மொழியின் வேற்றுமையை நன்கறிந்து இரண்டிற்கும் தனித்தனி இலக்கணங்களை இலத்தீன் மொழியில் எழுதினார். பேச்சுத் தமிழ் இலக்கணத்தைக் 'கொடுந்தமிழ் இலக்கணம்' என்ற பெயரால் குறித்தார். இவ்விரண்டு நூல்களும் இப்போது

ஆங்கில மொழியில் பெயர்க்கப்பெற்றுள்ளன. தமிழில் குற்றெழுத்தையும் நெட்டெழுத்தையும் எளிதில் அறிந்து கொள்வதற்கு அவற்றின் வரிவடிவத்தைச் சிறிது மாற்றியமைத்தார். இன்றுள்ள வடிவங்கள் அவர் அமைத்தவையே.

வீரமாமுனிவரை அடுத்துத் தமிழ இலக்கணத் தொண்டராக விளங்கியவர் *போப் அய்யர்* (Rev G. U. Pope) ஆவர். இவர் மகாவித்துவான் இராமானுச கவிராயரிடம் கல்வி கற்றவர். இன்று நாம் சிறுவர்க்கென எழுதப்பட்ட 'போப்பையர் இலக்கணத்தைக்' கேள்விப்படத்தான் செய்கின்றோம். இந்நூல் மூன்று பாகங்களாக உள்ளது. முதல் இரண்டு பாகங்களும் மணுக்கர் எளிதில் படிக்குமாறு வினவிடையில் அமைந்தவை; மூன்றும் பாகம் விரிவானது; இலக்கண நுட்பங்களை நன்கு உணர்த்துவது.

*மொழிநூலறிஞர்கள்*: மேனாட்டார் தொடர்பு ஏற்பட்ட பிறகுதான் தமிழுக்கு 'மொழிநூல் துறை' என்று புதியதோர் துறை ஏற்பட்டது. திராவிட மொழிகள் என்ற ஒரு தனிக்குடும்பம் இருப்பதை உலகோர் அறிவதற்கு நல்ல வாய்ப்பும் ஏற்பட்டது. இத்துறையில் உழைத்த அறிஞர்களுள் தலைசிறந்தவர் *ராபர்ட் கால்டுவெல் அய்யர்* (Right Rev. Robert Caldwell) ஆவர். கால்டுவெல் இந்தியாவுக்கு வந்த காலத்தில் இந்தியாவில் பேசப்பட்ட மொழிகளனைத்தும் ஆரிய இனத்தைச் சார்ந்தவை என்று ஐரோப்பிய மொழி நூலறிஞர்கள் கருதி வந்தனர். நேப்பாள நாட்டில் நீண்டகாலம் உயர் அலுவலராக இருந்த *டாக்டர் ஹாட்சன்* (Dr. Hodgson) என்பார் நடு இந்தியாவிலும் தென்னிந்தியாவிலும் வழங்கி வந்த

மொழிகளிலமைந்த சொற்களைத் தொகுத்தும் வகுத்தும் ஆராய்ந்து ஆங்கிலப் பத்திரிகைகளில் வெளியிட்டார். அவற்றை ஊன்றிக் கற்ற மேனாட்டு அறிஞர்கள் ஆரிய இனத்தைச் சேராத மொழிகளும் இந்திய நாட்டில் உள்ளன என்ற உண்மையை அறிந்தனர். பம்பாய் நகரில் பல்லாண்டுகள் உயர்தர நீதிமன்றத் தலைவராக இருந்த பெறி என்ற பெரியார் இமயம் முதல் குமரி வரை வழங்கும் மொழிகளையெல்லாம் ஆராய்ந்து தாம் கண்ட உண்மைகளைக் கட்டுரை வாயிலாக வெளிப்படுத்தினார்; வடநாட்டில் வழங்கும் மொழிகள் ஆரிய இனத்தைச் சேர்ந்தவை என்றும், தென்னாட்டில் வழங்கும் மொழிகள் தமிழ் வகுப்பைச் சேர்ந்தவையென்றும் தமது கொள்கையை வெளியிட்டார். இக் கொள்கை பல மேனாட்டு அறிஞரின் சிந்தையைக் கவர்ந்தது.

தென்னாட்டில் பல துறைகளிலும் பணியாற்றிய ஐரோப்பிய அறிஞர்கள் தென்னாட்டில் வழங்கிய மொழிகளில் தமது ஆராய்ச்சியைச் செலுத்தினர். டாக்டர் குண்டெர்ட் (Dr. Gundert) என்பார் கேரள நாட்டில் வழங்கும் மலையாள மொழியைச் செவ்வனே கற்று 'வடமொழியில் திராவிடக் கூறுகள்' (Dravidian Elements in Sanskrit) என்ற ஆராய்ச்சிக் கட்டுரையைக் கி. பி 1869-இல் செருமானியக் கீழ்நாட்டுக்கலைக் 'கழத்தின் பத்திரிகையில் (The Journal of the German Oriental Society) வெளியிட்டார். பின்னர் டாக்டர் கிட்டல் (Dr. Kittel) என்ற அறிஞர் கருநாடக நாட்டில் வழங்கும் கன்னட மொழியை முட்டறுத்துணர்ந்து கி. பி. 1872-ஆம் ஆண்டில் 'வடமொழி அகராதிகளில் திராவிடச் சொற்கள்' என்ற கட்டுரையை வெளியிட்டார். தாம் எழுதின கன்னட அகராதியிலும் வடமொழி கடன் வாங்கின சொற்கள் என 420 சொற்களை வகைப்படுத்திக்

காட்டினர். ஆந்திர நாட்டில் அலுவல் பார்த்த சி. பி. பிரௌன் என்ற அறிஞர் தெலுங்கு மொழியினைத் துருவி யாராய்ந்து தமது கருத்துக்களைக் கட்டுரைகளாக வெளிப்படுத்தினர். நீலகிரியில் வாழும் தோடர் மொழிச் சொற்களைப் போப்பையர் திரட்டி வெளியிட்டார். இந்த நிலையில்தான் கால்டுவெல் தென்னுட்டிற்கு வந்து தமிழ் மொழியிலுள்ள நூல்களை முறையாகக் கற்ருர்; மொழியாராச்சியில் முன்னணியில் நின்ற செருமானிய அறிஞர்கள் எழுதியுள்ள நூல்களையெல்லாம் கற்று அறிவதற்காகச் செருமானிய மொழியையும் கற்ருர். ஏற்கெனவே அறிஞர்கள் வெளியிட்டிருந்த கருத்துக்களையும் தாம் பெற்ற தமிழ் அறிவையும் கொண்டு தமது நுண்ணறிவால் திராவிட மொழி நூல் ஒன்றை வரைய எண்ணங்கொண்டார். அங்ஙனமே கி. பி. 1856-ஆம் யாண்டில் "திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்"(A Comparative Grammar of Dravidian Languages) என்ற நூலை ஆங்கில மொழியில் வெளியிட்டார். இதுதான் முதன் முதலாகத் தோன்றிய திராவிட மொழி நூல். இதை வெளியிட்ட பெரியாரை "திராவிட மொழிநூலின் தந்தை" என்று இன்று அறிஞர் உலகம் பாராட்டுகின்றது.

திராவிட மொழிக் குடும்பத்தில் பன்னிரண்டு மொழிகள் உள்ளன என்று கால்டுவெல் விளக்கிப் போந்தார். தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளுவம், குடகு என்ற ஆறு மொழிகளும் திருந்திய மொழிகளாகும். நீலகிரியில் வாழும் தோடர் பேசும் **துதம்** மொழியும், அதேமலையில் உறையும் கோதகர்கள் பேசும் **கோதம்** மொழியும், நடு இந்தியாவில் குன்றுகளிலும் காடுகளிலும் வாழும் மக்கள் பேசும் **கோண்டு** மொழியும், கோண்ட வனத்தின் கிழக்குப் பாகத்திலும்

ஒட்டர நாட்டின் (Orissa) குன்றுகளிலும் வாழும் மக்கள் பேசும் *கந்தம்* அல்லது கு மொழியும், வங்க நாட்டைச் சேர்ந்த இராச மாமலையில் வாழும் மக்கள் பேசும் *இராஜ் மஹால்* மொழியும் சூடிய நாகபுரியிலும் அதைச் சுற்றிலும் வாழும் மக்கள் பேசும் *ஒராவோன்* மொழியும் திருந்தாத திராவிட மொழிகளாகும். இந்திய நாட்டின் வடமேற்கு எல்லையிலமைந்த பெலுச்சிஸ்தானத்தில் வழங்கும், *பிராஹீயு* மொழியும் திராவிடக் குடும்பத்தில் சேர்க்கப்பெற்றுள்ளது. இங்ஙனம் மேனாட்டு அறிஞர்களால் மொழி நூல் துறை நம் மொழியில் தோன்றியது.

*அகராதி ஆசிரியர்கள்:* மேனாட்டு அறிஞர்கள் வருவதற்குமுன் தமிழ் மொழியில் சொற்பொருள் உணர்த்தும் கருவி நூல்களாக 'நிகண்டுகள்' வழங்கி வந்தன. தமிழில் அவற்றை 'உரிச்சொல்பனுவல்' என்று வழங்குவர். இத் தமிழ்ப்பெயர் மறைந்து 'நிகண்டு' என்ற சொல்தான் வழக்கிலிருந்து வருகின்றது. நிகண்டிலிருந்து ஒரு சொல்லின் பொருளை அறியவேண்டுமானால் எவ்வளவோ சிரமம். காரணம், நூலின் அமைப்பே அங்ஙனம் உள்ளது என்றுதான் சொல்லவேண்டும். முதலாவது: நிகண்டுகள் செய்யுள் வடிவில் இருக்கின்றன. சொல்லின் பொருள் காணச் செய்யுளின் பொருள் விளங்கவேண்டும். இரண்டாவது: இவ்வகை நூல்களில் தெய்வப் பெயர்கள், மக்கட்பெயர்கள், விலங்குப்பெயர்கள் என்ற பல தொகுதி களில் சொற்கள் அமைந்திருக்கும். நாம் பொருள் அறிய வேண்டிய சொல் எப்பகுதியைச் சார்ந்தது என்று தெரிந்து. பிறகு அத்தொகுதிச் சொற்கள் முழுவதையும் படித்துப் பொருள்காண வேண்டும். மூன்றாவது: மனப் பாடம் செய்வதற்கென்றே இந்நூல்கள் இயற்றப்

பெற்றுள்ளன. இஃது எவ்வளவு சிரமமான காரியம் என்பது நமக்குத் தெரியும்.

இந்தச் சங்கடங்களை யெல்லாம் நீக்கி எவரும் எளிதில் சொற்பொருள் காண மேனாட்டு அறிஞர்கள் அகராதியைத் தொகுத்தனர். அகராதியில் சொற்கள் தமிழ் நெடுங்கணக்கின் வரிசையில் தொகுக்கப்பெற்று இருப்பதால் எவரும் எளிதில் சொற்பொருளை அறிந்து கொள்ள முடியும். முதன் முதலில் அகராதியை எழுதும் முறையைத் தமிழருக்குக் காட்டியவர் *வீரமாமுனிவர்;* ஆதலால் 'தமிழ் அகராதியின் தந்தை' என்று அவரை வழங்கலாம். அவர் எழுதி கி. பி. 1732-இல் வெளியிட்ட 'சதுரகராதி'தான் பிற்காலத்தில் எழுந்த பேரகராதிகட்கெல்லாம் அடிப்படையாக இருந்தது.

தமிழ் மக்களிடையே சமயத்தைப் பரப்ப வேண்டுமானால் தமிழில்தான் போதிக்கவேண்டும் என்று உணர்ந்தனர் பாதிரிமார்கள். அதனால் தாமும் தமிழ் கற்க வேண்டிய இன்றியமையாமை ஏற்பட்டது. இதைக் கற்பதற்குக் கருவியாக அகராதி ஒன்று இயற்றவேண்டி நேரிட்டது. இந்த அவசியத்தை உணர்ந்த வீரமாமுனிவர் அகராதியை இயற்றும் பணியை நிறைவேற்றினர். இவரைப் பின்பற்றி **பெப்ரீஷியஸ், இராட்லர், டெயிலர், உவின்ஸ்லோ** என்ற பல மேனாட்டுப் பாதிரிமார்கள் பலவித அகராதிகளைப் பல்வேறு சந்தர்ப்பங்களில் இயற்றினர். இவ்வாறு பலர் அகராதியை வெளியிடும் பணியில் இறங்கியதன் விளைவாகப் பல இடர்ப்பாடுகளையறிந்து இத்துறையில் நல்ல அனுபவம் ஏற்பட்டது. இந்த அனுபவத்தைக் கொண்டு சென்னைப் பல்கலைக் கழகத்தினர் 'தமிழ் லெக்ஸிகன்' என்ற அகராதியை வெளியிட்டனர்.

இதிலும் குறைகள் இல்லாமல் இல்லை. அகராதி வேலைக்கு ஒருவரும் முற்றுப்புள்ளி இடமுடியாது. மொழி வளர்ச்சிக்குச் சொற்களின் வளர்ச்சி ஒரு சிறந்த அறிகுறி என்று சொல்லலாம். சொற்கள் பெருகப் பெருக அகராதியின் வேலைக்கு முடிவே இராது.

ஆகவே, சமயப்பணியாற்ற வேண்டிய மேனாட்டுக் கிறித்தவப் பெரியார்கள் தமிழ் மொழியின் பல்வேறு துறைகளில் பணியாற்றி நம் மொழியை வளமடையச் செய்தனர். இங்ஙனம் வளமடையச் செய்தவர்களில் பல் வேறுநாட்டார் உளர். தத்துவ போதக சாமியும் வீரமாமுனிவரும் இத்தாலி நாட்டைச் சேர்ந்தவர்கள். எல்லிஸ் துரையும் போப்பையரும் ஆங்கில நாட்டினர். டாக்டர் கால்டு வெல் அயர்லாந்து நாட்டிலிருந்து வந்தவர். சீகன் பால்கு அய்யரும் இரேனியஸ் அய்யரும் செருமானிய நாட்டவர்கள். அரிகிருட்டினப்பிள்ளை, வேதநாயகம்பிள்ளை, வேதநாயக சாஸ்திரியார் நம் தமிழ் நாட்டைச் சேர்ந்தவர்கள். எந்த நாட்டில் பிறந்தாலும், எந்த மொழியைப் பேசினாலும் தமிழ்த் தொண்டாற்றிய பெரியார்களைத் தமிழர் என்று கொள்வதில் தடையிருக்க முடியுமா? சாதி, சமயம், நிறம் முதலிய எல்லைக்கோடுகள் மொழித்துறைக்கு வரைய முடியுமா? இந்த வேற்றுமை களையெல்லாம் தகர்த்தெறிந்து மக்களை இணைக்கும் ஆற்றல் பெற்றதல்லவா மொழி? தாம் இறந்த பிறகும் தமது கல்லறையில், "போப்பையர்-ஒரு தமிழ் மாணாக்கர்" என்ற சொற்றொடர் எழுதப்படல் வேண்டும் என்று கூறிய போப்பையரின் விருப்பம் இந்த உண்மையை விளக்குகின்றதல்லவா?

# கவிதையனுபவம்

## (கழக வெளியீடு)

## விலை : 10-00

" 'கவிதையனுபவம்' என்ற இப்புத்தகம் இத்துறையில் (கவிதைத் திறனாய்வு) வரவேற்கத் தக்க முயற்சி...'கவிதையின் தத்துவம்' என்ற பகுதியில் கவிதைக்குச் சிறப்பு அளிக்கும் அம்சங்களைப் பல உதாரணங்கள் மூலம் ஆசிரியர் நல்ல புலமையுடன் எடுத்துக் காட்டியிருக்கிறார். மேல் நாட்டுத் திறனாய்வாளர்களின் கருத்துக்கள் பல இப்பகுதியை உருவாக்கப் பயன்பட்டிருக்கின்றன .. ஆசிரியர் கவிதையில் தோய்ந்து இன்பத்தைப் பெற்றவரான படியால் மாணவர்கட்கும் மற்றவர்கட்கும் இதே இன்பம் கிடைப்பதற்கான வழிகளை அனுபவ பூர்வமாகக் 'கற்பித்தலின் தத்துவம்' என்ற பகுதியில் கூறியிருக்கிறார்."

—சுதேசமித்திரன்

"இலக்கிய ஆராய்ச்சியினை ஒரு கலையாகக்கொண்டு அதனை விளக்குவதற்கு எழுந்தது இந்த நூல். ஓயாது உழைத்து மிக மிக நீண்ட நூல்களை எழுதி வருவதில் நண்பர் தலை சிறந்தவர், மேலை நாட்டு அறிஞர்களுடைய கருத்துக்கள், நம் நாட்டு அறிஞர்களின் எண்ணங்கள், வடமொழி ஆராய்ச்சி வாணர்களின் போக்குக்கள் முதலிய அனைத்தையும் இங்கே நண்பர் விளக்குகின்றார்."

—பேராசிரியர் தெ. பொ. மீ.

"The author is quite competent to write on the subject, for he has considerable experience in imparting instruction on the methods of teaching poetry..... I am sure that a perusal of this book will help hundreds of students of literature to enjoy poetry better.

—Dr. A. C. Chettiar.

